**Na. Subbu Reddiyar:** Monograph in Tamil by T. Vishnukumaran, Sahitya Akademi, New Delhi, Rs.100.00

| | | | |
|---|---|---|---|
| உரிமை © சாகித்திய அகாதெமி | | Copyright: @Sahitya Akademi | |
| ஆசிரியர் | : த. விஷ்ணு குமாரன் (பி. 1964) | Author | : T. Vishnukumaran (b.1964) |
| இலக்கியநடை | : வாழ்க்கைவரலாறு / பொது | Genre | : Biography/ General |
| பதிப்பாளர் | : சாகித்திய அகாதெமி | Publisher | : Sahitya Akademi |
| முதற் பதிப்பு | : 2024 | 1st Edition | : 2024 |
| ISBN | : 978-93-6183-785-2 | ISBN | : 978-93-6183-785-2 |
| விலை | : ரூ. 100/- | Price | : Rs. 100/- |





**சாகித்திய அகாதெமி**

**தலைமை அலுவலகம்** : இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001.
secretary@sahitya-akademi.gov.in | 011-23386626/27/28.

**விற்பனை அலுவலகம்** 'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001
sales@sahitya-akademi.gov.in | 011-23745297, 23364204.

**கொல்கத்தா** 4, டி.எல். கான் சாலை, கொல்கத்தா 700 025
rs.rok@sahitya-akademi.gov.in | 033-24191683/24191706.

**சென்னை** குணா வளாகம், 443, இரண்டாம் தளம், அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.
chennaioffice@sahitya-akademi.gov.in 044-24311741 | 24354815

**மும்பை** 172, மும்பை மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், மும்பை 400 014
rs.rom@sahitya-akademi.gov.in 022-24135744 | 24131948.

**பெங்களூரு** கலா கிராமா எதிரில், பெட்ரோல் பம்ப் அருகில்
அவுட்டர் ரிங் ரோடு, மைசூர் சாலை, ஞானஜோதி நகர்
மல்லத்தஹள்ளி, பெங்களூரு – 560 056
rs.rob@sahitya-akademi.gov.in. 080-22245152, 22130870.

**அச்சகம்** : Mani Offset, Chennai - 600077.
**ஒளி அச்சு** : R. Udhayabaskar, Chennai - 600032.

Visit our website at http://www.sahitya-akademi.gov.in

# பொருளடக்கம்

# 1. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்

**வாழ்க்கை வரலாறு:** இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது பழமையும் நவீனமும் ஒன்றாகச் சந்தித்த காலம். அதாவது பழமை மெதுமெதுவாக மாற நவீனம் குடியேறிய காலம். அக்காலத்தில் வாழ்ந்தோர் பழமையையும் புதுமையையும் ஒரு சேரக் கண்டவர்கள் என்பதோடு மரபுசார் கருவிகளையும் புதிய அறிவியல் கருவிகளையும் பயன்படுத்தி வாழ்ந்தவர்கள். அவர்கள் காலத்தில் வந்தடைந்த புதிய கண்டுபிடிப்புகள் மற்றும் புதிய மேலைச் சிந்தனைமுறைகள் இந்திய மக்களது வாழ்வியலிலும் அரசியலிலும் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியதைப் பார்க்க முடிகிறது. அத்தகைய காலத்தினூடாக வாழ்ந்து ஆய்வுலகிலும் தமிழ்க்கல்வியுலகிலும் இலக்கியவுலகிலும் சிந்தனையுலகிலும் தடம்பதித்தவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள். பொதுவாக, ஓர் இலக்கியக் கல்வியாளர் அல்லது இலக்கியத் திறனாய்வாளர் என்பவர் வரலாறு, சமூகவியல், நாட்டுநடப்புகள் உள்ளிட்ட பல்வேறு துறைகளில் எந்த அளவிற்கு ஆழங்கால் பட்டிருக்கிறாரோ அந்த அளவிற்கு அவரால் சமூக மேம்பாட்டின் பொருட்டு இலக்கியக் கல்வியிலும், சமூகக்கல்வியிலும் முற்போக்குச் சிந்தனைகளைத் தரமுடியும். அதைத்தான் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் எனும் கல்வியாளர் தமிழ்கூறு நல்லுலகத்தில் சிறப்பாகச் செய்துகாட்டியுள்ளார்.

தலைமை ஆசிரியராக, ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி ஆசிரியராக, பல்கலைக்கழகப் பேராசிரியராக என கல்விப்பணியிலும் பல்வேறு துறைகள் தொடர்பான அறிவார்ந்த சிந்தனைகளைத் தமிழுலகிற்குத் தம் நூற்கள் வாயிலாக அளிக்கும் பணியிலும் சிறந்து விளங்கியவர் பேராசிரியர். தன்வரலாறு, பயண நூல், அறிவியல் நூற்கள், உளவியல், கல்வி கற்பிப்பதற்கான கருவி நூற்கள், நவீன இலக்கியங்களுக்கான விமர்சனம், பழைய இலக்கியங்களுக்கான உரை, இலக்கணம், வரலாறு, கோவில்கலை, மொழிபெயர்ப்பு, நாட்டுப்புறவியல் எனப் பல்வேறு துறைகளில் அவர் எழுதிய நூற்கள் மைல்கற்களாகவே திகழுகின்றன என்பதோடு தமிழ் ஆய்வுலகில் கருவிநூற்களாகவும் பயன்பட்டு வருகின்றன. அத்தகைய சிறப்புக் கொண்ட பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் வாழ்க்கையை ஐந்து கட்டங்களாகப் பார்க்கலாம். அன்னார் இந்த நூல் முழுவதும் இனிமேல் பேராசிரியர் என்றே குறிப்பிடப் பெறுகிறார்.

**பிறப்பு:** புகழ்பெற்ற காவிரிநதி பாயும் திருச்சி மாவட்டத்திலுள்ள, இலால்குடி வட்டத்தில் நீர்வளமும் நிலவளமும் மிக்க அழகிய பெரகம்பி எனும் சிற்றூரில் 1916ஆம் ஆண்டு ஆகஸ்ட் 27ஆம் நாள் பேராசிரியர் பிறந்தார். அவரது தாயார் காமாட்சி அம்மாளின் மூதாதையர்கள் பண்ணையார் பரம்பரை என்று அழைக்கப் பெற்று வந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். பேராசிரியரின் தந்தையார் ஞானி நல்லப்ப ரெட்டியாரது ஊர் முசிறி வட்டத்திலுள்ள சிற்றூரான கோட்டத்தூர், ஆகும். அவ்வூரில் ஞானியார் பரம்பரை என்றழைக்கப் பெற்றுவந்த குலத்தைச் சேர்ந்தவர். கோட்டாத்தூர் பேராசிரியரின் அன்னையார் ஊரான பெரகம்பியின் மேற்குப் பக்கம் சுமார் ஆறு கல் தொலைவிலுள்ளது.

**தாய்மாமன் வீட்டில் வளர்தல்**: பேராசிரியரின் சிறுவயதிலேயே, 1918இல் தந்தை ஞானி நல்லப்ப ரெட்டியார் காலமாகிவிட்டார். அப்போது பேராசிரியரின் அன்னையார் காமாட்சி அம்மாளுக்கு 23 வயதுகூட நிரம்பவில்லை. பேராசிரியருக்கோ மூன்று வயதுகூட ஆகவில்லை. எனவே, அன்னையார் காமாட்சி அம்மாள் தமது மகனுடன் சொந்த ஊரான பெரகம்பிக்கே திரும்பி, தமது தாயாரின் வீட்டில் வாழலானார். பேராசிரியரின் தாய்மாமனும் தாயைப் போலவே சிறுவன் மீது கனிவு கொண்டு அவனது வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தார். அது போலவே பாட்டியாரும் அதாவது அன்னையாரின் அம்மாவும் அன்பைப் பொழிந்து போற்றி வளர்த்தார். எட்டு வயது வரையில் பாட்டி வீட்டில் அன்னையின் அரவணைப்பில் செல்லப்பிள்ளையாக வளர்ந்த அவருக்குத் தொடக்கக் கல்வி வழங்கப்பட்டதும் பெரகம்பியில்தான்.

**திண்ணைப்பள்ளி:** பேராசிரியருக்கு ஐந்தாவது வயதில் வித்தியாப்பியாசம் எனும் பாரம்பரியமான சடங்கு முறைப்படி அவரது கல்விவாழ்க்கை தொடங்கியது. அந்த ஊரில் திண்ணைப் பள்ளி நடத்தி வந்த இலிங்கச்செட்டியார்தான் அச்சடங்கைத் தொடங்கிவைத்தார். அந்நிகழ்ச்சியை வீட்டிலுள்ளோரும் அக்கம் பக்கத்தாரும் மகிழ்ச்சியுடன் பார்த்தனர். ஆசிரியர் இலிங்கச் செட்டியார் மஞ்சள் தடவிய நான்கைந்து பனையோலை அடங்கிய ஒரு சிறு கட்டின் முதல் ஏட்டில் "ஹரி: நமோத்து சித்தம்"என்று எழுதித் தந்தார். சருக்கரை கலந்து காய்ச்சிய பாலில் ஏதோ மந்திரம் எழுதிப் பருகச் செய்தார். முதல் ஏட்டில் எழுதியதைத், தனித்தனி எழுத்தாக மூன்று முறையும், சேர்த்து வசனமாக மூன்று முறையும் ஆசிரியர் சொல்லச் சொல்ல அதைச் சிறுவனாகிய பேராசிரியரும்

வழிமொழிந்து சொன்னார். இதைத் தொடர்ந்து அவர் அந்த திண்ணைப்பள்ளியில் மாணவரானார். ஓராண்டினுள் எண்ணையும் எழுத்தையும் தரையில் பரப்பப்பட்ட மணலில் எழுதிக்கற்றுக் கொண்டார். உலகநீதி, கொன்றை வேந்தன், வெற்றிவேற்கை என்பன போன்ற நீதிநூற்கள் திண்ணைப்பள்ளியில் பயிற்றுவிக்கப்பட்டன.

இலிங்கச்செட்டியார் நடத்திய இந்த திண்ணைப்பள்ளியில் தமிழ் நெடுங்கணக்கு, எண் வாய்ப்பாடு, மாதங்களின் பெயர்கள், போன்ற பாடங்களைக் கற்றார். படிப்போடு அக்காலத்திற்கே உரித்தான சிறுவர் விளையாட்டுகளான கிட்டிப்புள், பிள்ளையார் பந்து விளையாட்டு, கால் தூக்கும் கணக்கப் பிள்ளை, பம்பரம் விடுதல், பட்டம் விடுதல் போன்றவற்றிலும் ஆர்வமாயிருந்தார்.

**தந்தையாரின் ஊரில் வளர்தல்:** படிப்பும் விளையாட்டுமாய்ச் சிறுபருவம் கழிந்த போதுதான் அவரது தாய் மாமனது மனைவி ஏதோ நோயால் இறந்துபோனார். மாமாவும் மறுமணம் செய்து கொள்ள நேர்ந்தது. மாமாவுக்கு மறுமணமான சில மாதங்களில் சிறுவயதிலேயே, அதாவது 8ஆவது வயதிலேயே பேராசிரியர் அன்னையுடன் தமது பாட்டி வீட்டை விட்டு வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டது. தமது தந்தை ஊராகிய கோட்டத்தூரிலுள்ள பூர்வீக மச்சு வீட்டில் பாட்டியும் பேராசிரியரும் குடியேறினர். அந்த வீட்டின் இன்னொரு புறம் அவருடைய குடும்பப் பங்காளிகள் வாழ்ந்து வந்தனர். ஆனால், பங்காளிகளுக்கும் பேராசிரியர் குடும்பத்தவருக்கும் தீரா மனத் தாங்கல் நிலவியிருந்தது. அளவற்ற பாசம் கொண்டிருந்த பாட்டி இந்த வீட்டிற்கு வந்து 4 ஆண்டுகளுக்குப் பிறகு இறந்து போனார். பாட்டி உயிரோடு இருந்த காலத்தில் 'நான் வெளியூர் போய் படிக்க வேண்டும்' என்று பேராசிரியர் கூறிய போதெல்லாம் பாட்டி கண்கலங்கினார். பாட்டியின் இறப்பின்போது இறப்புச்சடங்கில் தாய்மாமனும் கலந்து கொண்டார். மீண்டும் குடும்ப உறவு சீரானது.

**தொடக்கப்பள்ளி:** கோட்டத்தூருக்கு வந்தபின், அங்குள்ள கழகத் தொடக்கப் பள்ளியில் பேராசிரியர் சேர்க்கப்பட்டார். ஆனால் ஆங்கிலப் பாடம் சரியாகக் கற்பிக்கப்படாததால், சாமுவேல் பிள்ளை என்பார் தனியாக நடத்திய ஆங்கிலப் பள்ளியிலும் படித்தார். இக்காலத்தில் அடிப்படைக் கணிதத்தை நன்கு கற்று தேர்ந்திருந்தார். இந்த நிலையில் கழகப் பள்ளியில் புதிதாகச் சேர்ந்த வி.கே. அரங்கநாத ஐயர் என்ற ஆசிரியர் பிற ஆசிரியர்களைப் போலல்லாமல் கற்பித்தலுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்துப்

பாடங்கள் நடத்தி வரலானார். படிப்பு மீது ஆர்வமாயிருந்த சிறுவனான பேராசிரியருக்கு இது பெரிதும் உதவிகரமாக இருந்தது. அதனால் புவியியல், வரலாறு, அறிவியல், கணிதம், ஆங்கிலம் போன்ற பாடங்களில் சிறப்பான அறிவைப் பெறமுடிந்தது. அதனால் ஏழாம் வகுப்பிலேயே சக மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்படி பேராசிரியரை ஏற்பாடு செய்தார் வி. கே. அரங்கநாத ஐயர். இவரைத் தமது கல்வி வாழ்க்கையின் எழுஞாயிறு என்று பேராசிரியர் பின்னாட்களில் குறிப்பிட்டுள்ளார்.

கோட்டத்தூரில் வேளாண்மை செய்து வாழ்வதற்கேதுவாகப் பேராசிரியரின் பூர்வீகச் சொத்தாக இரண்டு ஏக்கர் நஞ்சை நிலமும், மூன்று ஏக்கர் செழிப்பான கரிசல் நிலமும் இருந்தன. மேலும், அவரது அன்னையார் சிறுக சிறுகச் சேமித்து வைத்திருந்த பணத்தில் ஓர் ஏக்கர் செழிப்பான கரிசல் நிலத்தையும் வாங்கினார். வரகு, ஆமணக்கு, கொத்தமல்லி, ஓமம், நெல் போன்ற விளைபொருட்கள் விவசாயம் மூலம் கிடைத்து வந்தன. ஆனால் விளைபொருள்களுக்குப் போதுமான விலை கிடைக்காததால் பெரியளவில் வருமானம் இல்லை. இந்த இடத்தில் பேராசிரியரது அன்னையின் முயற்சி பற்றிக் குறிப்பிட்டாக வேண்டும். வருவாயை அதிகரிக்க 1930 முதல் 1953 வரை சொந்தமாகப் பண்ணை நடத்தினார். ஆனால், அதில் பொருளிழப்பு நேரிட்டுப் பண்ணை வேலையை நிறுத்தி, நிலங்களையும் விற்றுவிட வேண்டிய நிலை ஏற்பட்டது. எனவே, அன்னையார் பிற்காலத்தில் பேராசிரியர் வேலை பார்த்த இடத்திற்கு வந்துவிட்டார். அதன்பின்னர் அன்னையார் வாழ்க்கையில் நான்கு அல்லது ஐந்தாண்டுகள்தான் மன அமைதியுடன் வாழ்ந்தார். அது இரண்டு பேரன்மார்களுடன் இனிமையாகப் பொழுது போக்கின காலம். இந்தக் காலத்தைப் பற்றி பேராசிரியர்,

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். (குறள். 69)

என்ற வள்ளுவர் வாக்கின் பேருண்மையை அன்னையார் தம் வாழ்நாளில் அனுபவித்து மகிழ்ந்தார் என்று குறிப்பிட்டுள்ளார்.

அன்னையார் தொடங்கிய விவசாயப் பண்ணையில் பின்னாட்களில் பயிர் செய்த அனுபவமும் பேராசிரியருக்கு உண்டு. ஆனால், உழவன் கணக்குப் பார்த்தால் உழக்குக் கூட மிஞ்சுவதில்லை என்ற பழமொழிக்கேற்பப் பண்ணைத் தொழில் நஷ்டமடைந்ததாகக் கருத்துக் கூறுவார்.

கோட்டத்தூர் தொடக்கப்பள்ளியில் படிப்பு நன்றாகவே போய்க்கொண்டிருந்தது. பேராசிரியரின் கல்வி மீதான ஈடுபாட்டைக் கவனித்த ஆசிரியர் வி. கே. அரங்கநாத அய்யர் பேராசிரியருக்கு மேற்படிப்பான 8ஆம் வகுப்புப் படிக்கத் தகுதி இருப்பதாகச் சொல்லி விட்டார். ஆனால், மேற்படிப்புக்குப் போதுமான பணம் பேராசிரியரின் அன்னையாரிடம் இல்லாததால் படிப்பு ஓராண்டு தடைப்பட்டது. அந்த ஓராண்டு காலத்தில் சும்மா இருக்காமல் கோட்டத்தூரிலுள்ள பசனை மடத்தில் இருந்த இராமாயணம், மகாபாரதம், பக்தவிஜயம் ஆகிய பெரிய நூல்களைப் படித்து விட்டார். இந்த நிலையில்தான் மகனை அன்னையார் உயர்நிலைப்பள்ளிக்கு அனுப்ப உறுதி பூண்டார். அச்சமயத்தில்தான் மகனுக்கு மாலைநேரத்தில் கண் தெரியாத நோய் வந்தது. மிகவும் வருந்திய அன்னையார் பழனி மலை முருகனுக்கு நேர்ச்சை செய்து கொண்டார். ஓராண்டு கழித்து அந்தக் குறை நீங்கியது. குறை நீங்கியதும் சிறுவனாயிருந்த பேராசிரியரைப் பழனிமலைக்கு அழைத்துச் சென்று அவருக்கு மொட்டையடித்து வழிபாடு நடத்தி ஊர் திரும்பினார்.

**உயர்நிலைப்பள்ளி:** அப்போது அன்னையாரும் மகனைப் பள்ளிக்கு அனுப்பத் தீர்மானித்தார். அதன் தொடர்ச்சியாக, ஆசிரியர் வி. கே. அரங்கநாத ஐயர் சிறுவனாக இருந்த பேராசிரியரையும் பேராசிரியரின் உறவினரான கணபதியையும் முசிறியில் உள்ள கழக உயர்நிலைப் பள்ளியில் சேர்க்கும் முயற்சியில் இறங்கினார். 1930 ஆகஸ்டு மாதம் முசிறிக்கு அவர்கள் இருவரையும் அழைத்துச் சென்றார். பள்ளியின் தலைமையாசிரியர் ஏற்கனவே அட்மிஷன் முடிந்துவிட்டதாகக் கூறி, சிறுவர்கள் இருவருக்கும் இடம் தர மறுத்துவிட்டார். சிறுவர்களின் ஏமாற்ற உணர்வை அறிந்த அரங்கநாத ஐயர் ஏதாவது வழிகாண்போம் என்று ஆறுதல் கூறினார். அந்தக் காலத்தில் முசிறிக்கும் துறையூருக்கும் ஒரேயொரு பஸ் மட்டுமே நான்கு தடவை போய்வரும். நல்லவேளையாக, விரைந்து செயல்பட்ட அரங்கநாத ஐயர் சரியான நேரத்தில் அங்கிருந்து பஸ்சில் ஏறி இருவரையும் மதியம் 2 மணிக்குள் துறையூருக்குக் கொண்டு வந்துவிட்டார். அங்குள்ள 'பெருநிலக்கிழவர் உயர்நிலைத் தொடக்கப் பள்ளி'யில் 8ஆம் வகுப்பில் சேர்த்தும் விட்டார். அப்போதுதான் அந்த சுவாரஸ்யமான நிகழ்ச்சி நடந்தது. சுப்புரெட்டி என்ற தனது பெயரிலுள்ள ரெட்டி என்ற சொல் தன்னை வயது முதிர்ந்தவனாகக் காட்டுவதாக உணர்ந்தார். எனவே சாதிப் பெயரை நீக்கிவிட்டுத் தன்னைப்

பள்ளியில் சேர்க்கும்படி வி.கே. அரங்கநாயக அய்யரிடம் முறையிட்டிருக்கிறார். அவரும் சிறுவனின் மனக்குமுறலை உணர்ந்து சுப்பு என்ற பெயரில் பள்ளியில் சேர்த்தார். இந்தப் பெயரில்தான் பின்னாட்களில் கல்லூரியிலும் சைதை ஆசிரியர் பயிற்சிப் பள்ளியிலும் சேர்ந்தார். அவர் பெற்ற சான்றிதழ்களிலும் சுப்பு என்ற பெயரே இடம் பெற்றுள்ளது.

ஆனாலும், பின்னாளில் இதே ஊரில் புதிதாகத் தொடங்கப் பெற்ற 'பெருநிலக்கிழவர் உயர்நிலை நடுநிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பதவிக்கு வந்தபோது ஆசிரியப் பதிவேட்டில் தமது பெயரை சுப்புரெட்டியார் என்று எழுதவேண்டிய சுவையான சம்பவம் நிகழ்ந்தது. புதிதாக அவர் வேலையில் சேர்ந்திருந்ததால் அவரை வெளியாட்கள் பலருக்கும் அப்போது தெரிந்திருக்க வில்லை. அவர் மெதுவாக மிதிவண்டியில் சென்று கொண்டிருந்த அதேநேரத்தில், எதிரே மிதிவண்டியில் வந்து கொண்டிருந்த இன்னொருவர் நடந்து வந்தகொண்டிருந்த பள்ளிச் சிறுவர்களிடம், 'உங்கள் தலைமையாசிரியர் யார்' என்று வினவியிருக்கிறார். அப்போது சிறுவர்கள் சுப்பு என்று விடை கூறியிருக்கிறார்கள். சைக்கிளில் வந்தவர் 'அய்யர் இட்லி கடை சுப்புவா', 'சோழியன் காபி கடையில் உள்ள சுப்புவா,' என்று கிண்டலுடன் கேட்டிருக்கிறார். அது பேராசிரியரின் காதிலும் விழுந்துள்ளது. கேட்காதவர் போல் சென்று விட்டார். அடுத்தநாளே ஆசிரியர் பதிவேட்டில் சுப்புரெட்டியார் என்று மாற்றி எழுதினார். அந்தச் சமயத்தில் கிழவன் என்ற உணர்வை அந்தப் பெயர் தந்ததாகவும் அதையே விரும்பியதாகவும் பேராசிரியர் பின்னாளில் சுட்டுகிறார்.

துறையூர் பள்ளியில் 8ஆம் வகுப்பில் சேர்ந்த பிறகு அவர்கள் இருவரும் தங்குவதற்கு அங்கிருந்து ஒரு மைல் தொலைவில் உள்ள சுரத்தூர் என்ற ஊரில் உறவினர்கள் வீட்டில் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பேராசிரியர் தமது உறவினர் தொலையானத்தம் அம்மாள் வீட்டிலும் கணபதி இன்னொரு உறவினர் வீட்டிலும் தங்கிக் கொண்டனர். அங்கிருந்து தினந்தோறும் இருவரும் சேர்ந்தே பள்ளிக்கு நடந்து வருவது வழக்கம். வரும் போது தொலையானத்தம் அம்மாள் தரும் மதிய உணவையும் எடுத்து வருவார்கள். இந்த அம்மாள் தயிர் மோர் விற்று வாழ்ந்தவர்.

துறையூருக்கு வந்த பின் அவரது பழக்கவழக்கங்களில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. சட்டை, பனியன் அணியும் பழக்கம்

ஏற்பட்டது; எழுதுவதற்கு ஊற்றுப்பேனாவைப் பயன்படுத்தினார். அதிகாலை ஐந்து மணிக்குத் துயிலெழும் பழக்கமும் கருவேலங் குச்சியால் பல்துலக்கும் பழக்கமும் காலையில் நீராடும் பழக்கமும் ஏற்பட்டன.

சுரத்தூரிலிருந்து பள்ளிக்கு நடந்து போய்த் திரும்பி வருவது சிரமமாக இருந்தது. இரவு படிப்பதற்குக் கூட முடியாமல் உறங்கிவிடுவார். இந்த நிலை அரையாண்டுத் தேர்வுவரை தொடர்ந்தது. பிறகு துறையூரிலேயே சின்னமடம் என்ற மடத்தில் பேராசிரியருக்கும் கணபதிக்கும் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. சாப்பாட்டிற்கு 'நல்லிப்பாளையம் ரெட்டியார் ஓட்டல்'-இல் மாதம் ஆறு ரூபாய் செலுத்தி உணவு பெற்று வந்தனர். மடத்தில் தங்கியிருந்தபோது சிறுவர்கள் இருவரும் அங்குள்ள ஆன்மீகப் பெரியோர்களின் சமாதிகளுக்கு தீப, தூபம் காட்டித் துப்பரவு செய்து அங்குள்ளோரின் அன்பைப் பெற்றனர். இது குறித்துப் பேராசிரியர் பின்னாளில் 'நான் வாழ்வில் உயர்ந்த நிலையடைவதற்குச் சமாதியில் உள்ள பெரியோரின் ஆசிதான் காரணம்' எனக் குறிப்பிடுகிறார். வகுப்பிலுள்ள சகமாணவர்கள் அவரைப் புத்தகப்புழு என்று சொல்லுமளவுக்கு ஆழ்ந்து பயின்றதோடு பள்ளியில் 1930இல் இரண்டாம் மாணவனாகத் தேர்ச்சியும் பெற்றார்.

**முசிறியில் நான்காம் படிவப் படிப்பு:** எட்டாம் வகுப்பு முடித்த பின் அங்கு ஒன்பதாம் வகுப்பு இல்லாததால் வேறு பள்ளிக்கு மாற வேண்டியநிலை பேராசிரியருக்கும் கணபதிக்கும் ஏற்பட்டது. துறையூர் பள்ளியில் பேராசிரியரைச் சேர்த்த வி. கே. அரங்கநாத ஐயர்தான் மீண்டும் மேற்படிப்புக்கு உதவி செய்தார். சிறுவர்கள் இருவரையும் முசிறியில் உள்ள கழகப் பள்ளியில் நான்காம் படிவத்தில் அதாவது 9ஆம் வகுப்பில் 1931இல் சேர்த்தார். கழிந்த வருடம் இடம் தரமறுத்த அதே தலைமையாசிரியரான கே. இராமச்சந்திர அய்யர் இந்த வருடம் மகிழ்வுடன் இருவரையும் சேர்த்துக்கொண்டார். அத்துடன் அங்குள்ள மாணவர் விடுதியில் தங்க இடமும் அளித்தார். மூன்று ஆண்டுகள் அங்கிருந்துதான் உயர்நிலைப் பள்ளிப்படிப்பை முடித்தனர். அந்த விடுதி 3 பர்லாங் தூரத்தில் இருந்தது. காலை 9 மணிக்கு உணவு. மதியம் ஒரு மணிக்கு சிற்றுண்டி. இரவு 7.30 மணிக்கு உணவு என்ற முறையில் உணவு தரப்பட்டிருந்தது. இந்த ஏற்பாட்டைத் தலைமையாசிரியரான கே. இராமச்சந்திர ஐயர்தான் செய்திருந்தார். இந்த விடுதியில்,

நாள்தோறும் காலை 7 மணிக்குள் காவிரியில் குளித்து வந்திருக்க வேண்டும் என்ற விதிமுறை இருந்தது.

அக்காலத்தில் அதாவது ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் உயர்நிலைப் பள்ளிகளில் ஆங்கிலமே பயிற்று மொழியாக இருந்தது. உயர்நிலைப் பள்ளியில் கணிதம் மற்றும் வேதியியலைத் திறம்படக் கற்றார் சிறுவனான பேராசிரியர். ஆனால் வேதியியல் ஆசிரியரான இராமநாதப்பிள்ளை என்பார் ஒரு வகுப்பில் பாயில் விதியை ஆங்கிலத்தில் சரியாக விளக்கமுடியவில்லை. சரியாக விளக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்ட பேராசிரியரின் கன்னத்தில் மாறி மாறி அடித்தார். "நிறுத்துங்கள்! அறைவதுதான் உங்கள் விளக்கமா?" என்று பேராசிரியர் வினவினார். அதே வேளை தன்னால் அடிவாங்க முடியாது என்றும் தன்னை இயற்பியல் வகுப்புக்கு மாற்ற வேண்டும் என்றும் தலைமையாசிரியரிடமும் வார்டனிடமும் புகாரும் செய்தார். நடந்ததைக் கேட்ட அவர்கள் இனி இப்படி நிகழாது என்று சமாதானம் கூறி அனுப்பி வைத்தனர். இவர்கள் வேதியியல் ஆசிரியருக்கு ஏதோ அறிவுரை கொடுத்ததால் அன்றிலிருந்து வேதியியல் ஆசிரியர் அடிப்பதை நிறுத்தி விட்டார்.

1934இல் உயர்நிலைப் பள்ளியிறுதித் தேர்வெழுதி 60 சதவிகிதம் மதிப்பெண் பெற்று பள்ளியில் இரண்டாம் மாணவனாகத் தேறினார் பேராசிரியர். இந்த மதிப்பெண் அந்தக் காலகட்டத்தில் உயர்வானது.

**கல்லூரியில் இண்டர்மீடியட் படிப்பு:** தொடர்ந்து மேற்படிப்புப் படிக்க ஆவல்கொண்டார் பேராசிரியர். அவர்பால் அக்கறை கொண்ட ஆசிரியர்கள் திருச்சியில் உள்ள புனித சூசையப்பர் கல்லூரியில் சென்று இண்டர் மீடியட் படிக்க அறிவுரை தந்தனர். அரங்கசாமி என்ற சீனியர் மாணவரைச் சந்தித்து 1937இல் அக்கல்லூரியில் சேர்ந்து கொண்டார்.

கல்லூரியில் இண்டர்மீடியட் படிப்பில் சேர்ந்தாலும் கூட, வீட்டில் பண நெருக்கடி காரணமாகக் கல்லூரி விடுதியில் அவரால் சேரமுடியவில்லை. எனவே திருச்சியிலுள்ள சவுக்கு நகரில் சீனியர் கல்லூரி மாணவரான அரங்கசாமி தங்கியிருந்த விடுதியின் பக்கத்து அறையை வாடகைக்கு எடுத்து அங்கிருந்து ஒரு மைல் தொலைவிலுள்ள கல்லூரிக்குத் தினந்தோறும் நடந்து சென்றார். அறைக்கு மாத வாடகை 5 ரூபாய். இந்தத் தொகை கூட அவரது பொருளாதாரச் சூழலில் சற்று அதிகமே.

ஆங்கிலப் பாடம், தமிழ்ப்பாடம், இயற்பியல், கணிதம், வேதியியல் ஆகியவை இண்டர்மீடியட்டில் பாடங்களாக இருந்தன. ஆங்கிலமொழி பயிற்றுமொழி. முதலாண்டில் கொஞ்சம் சிரமமாக இருந்தாலும் பிறகு அதில் தேறிவிட்டார். தமிழ் பயிற்றுவித்த கல்லூரி ஆசிரியர் நடேசமுதலியார் ஆவார். இவரது ஒழுக்கம் சார்ந்த அறிவுரைகள் பேராசிரியருக்கு வழிகாட்டியாக அமைந்தபட ஒரு புறமிருக்க இன்னொரு புறம் நடேசமுதலியாரின் கற்பிக்கும் பாங்கும் அன்பும் பேராசிரியரைத் தமிழில் ஈடுபாடு கொள்ளத் தூண்டின. அதன் விளைவாக மதுரைத் தமிழ்ச் சங்கம் நடத்திய தமிழ்த்தேர்வினை எழுதியதோடு முதல் வகுப்பில் தேர்ச்சியும் பெற்றார்.

இயற்பியல் பாடம் காம்பெர்ட் என்ற பிரெஞ்சுக்காரச் சாமியாரால் நடத்தப்பட்டது. இவரது ஆங்கில உச்சரிப்பு பிரெஞ்சுச் சாயலில் இருந்ததால் பாடத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் குறைவான மதிப்பெண்ணே பெறமுடிந்தது. ஆனால் இரண்டாம் ஆண்டில் சவரிமுத்து என்பவர் இயற்பியல் பாடம் நடத்தியபோது அதிகமதிப்பெண் பெற்றுத் தேறவும் முடிந்தது.

கல்லூரியில் படிக்கும் போது திட்டமிட்ட ஒழுங்குமுறையில் பேராசிரியர் பாடங்களைப் படித்துள்ள பாங்கு இப்போதைய மாணவர்களுக்குக் கூட முன்னுதாரணம் என்றே கூறலாம். கல்லூரியில் ஒவ்வொரு பாடப்பகுதி கற்பிக்கப்படும்போது அப்பகுதியில் தேர்வு முறையில் கேட்கப்படும் வினாக்களுக்கேற்பப் படித்துக் கொள்வார். அடிக்கடி எழுதிப் பார்த்துக் கொள்வார். விடுமுறை நாட்களில் கூட நேரத்தை வீணடிக்க மாட்டார். அதிகாலை நான்கரை மணிக்கு எழுந்து காலை ஒன்பது மணிவரை படிப்பார்.

கல்லூரியில் இரண்டாம் ஆண்டு இண்டர்மீடியட் படித்த போது குடும்பத்தில் பணக் கஷ்டம் ஏற்பட்டது. இந்தச் சூழலில் கல்விக்காகச் சொத்தினை விற்க வேண்டிய நிலைஏற்பட்டது. விற்ற பணத்தில் 500 ரூபாயை அஞ்சலகத்தில் வைப்புத்தொகையாகச் செலுத்தி வாடகைக்கு, உணவுக்கு, சிற்றுண்டிக்கெனக் கணக்கிட்டு மாதம் 30 ரூபாயை அஞ்சலகத்திலிருந்து எடுத்துப் பயன்படுத்தி வந்தார்.

மீண்டும் பணநெருக்கடி ஏற்படவே அதைச் சமாளிக்க, சவுக்கு நகரில் உள்ள காசி இராவுத்தர் ஸ்டோர் கட்டடத்தின் மாடியில் மாத வாடகை 3 ரூபாய் கொண்ட அறையில் தங்கலானார். மின் விளக்குகள் இல்லாத அந்த அறையில் அரிக்கேன் விளக்கு

உதவியுடன்தான் படித்து வந்தார். ஒரு ஸ்டூல், ஒரு கட்டில், ஒரு மேசை மட்டுமே அதில் இருந்தன. அதற்கப்பால் சாமான்களை நகர்த்தக் கூட இடமில்லை. இந்த ஸ்டோரில் தங்கியிருந்த போது வாசகசாலையில் விடுதலை, சுதேசமித்திரன், இந்து, தினமணி போன்ற பத்திரிகைகளைத் தவறாமல் வாசித்து வந்தார். அறிவியல் மாணவராக இருந்தும் கூடத் தமிழின் மீதிருந்த பற்றுதலால் தமிழ் இலக்கிய நூல்களையும் ஆழ்ந்துப் பயின்றார். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை ரா.பி. சேதுப்பிள்ளையின் வீரமாநகர், பன்னிரு கட்டுரைகள், உ.வே. சாமிநாதய்யர் எழுதிய நான் கண்டதும் கேட்டதும், பழையதும் புதிதும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சரித்திரம், மறைமலையடிகளின் முற்காலப் புலவர்களும் இக்காலப் புலவர்களும், பண்டைக் காலத் தமிழரும் ஆரியரும், கோகிலாம்பாள் கடிதங்கள், அறிவுக்கொத்துப் போன்ற நூல்கள் ஆகும்.

காசி இராவுத்தர் ஸ்டோரில் தங்கியிருந்தபோது அவர் ஒதுங்கி நடந்தாலும் அவரது அருமை தெரியாமல் அவருக்குத் தொந்தரவு செய்வோர்கள் அந்த விடுதியில் இருந்தனர். போகும் போதும் வரும் போதும் கதவைத் தட்டி, கதவுகளில் எச்சில் துப்பி விட்டுச் செல்வார்கள். எனவே, வேறு விடுதிக்கு மாறினார் பேராசிரியர்.

**திருமண ஏற்பாடு:** கடின உழைப்பின் பயனாய் இண்டர்மீடியட் படிப்பில் முதல் வகுப்பில் தேறினார். இண்டர்மீடியட் படிப்பு முடிவடைய இரு மாதங்கள் இருந்த நிலையில்தான் பொட்டணம் ஊரிலுள்ள பேராசிரியரின் பாட்டி வழி உறவினர் இராமசாமி ரெட்டியார் தன் தங்கையான செல்லப்பாப்பாவைப் பேராசிரியருக்கு மணமுடிக்கும் நோக்கில் பேசுவதற்காகப் பேராசிரியர் தங்கியிருந்த விடுதிக்கு வந்தார். அவருடன் இராமச்சந்திர ஆச்சாரி என்பவரும் வந்திருந்தார். அவர்களிடம் தமது படிப்பு நோக்கத்தையும் அதற்காக ஆகும் செலவையும் விவரித்துச் சொன்னபோது, படிப்புச் செலவைத் தான் கவனித்துக் கொள்வதாக இராமசாமி ரெட்டியார் தெரிவித்தார். அதனைத் தொடர்ந்து திருமணத்திற்கு இசைவு தெரிவித்து அன்னையின் அனுமதியையும் பெற்றார்.

**திருமணச்சூழலில் இளங்கலைப் பட்டப்படிப்பு:** திருமணச் சூழலில் வேதியியல் இளங்கலைப் பட்டத்திற்குப் பேராசிரியர் விண்ணப்பிக்கவே, திருச்சி சூசையப்பர் கல்லூரியிலேயே படிக்க இடம் கிடைத்தது. திருச்சிக்கு இரட்டைக் காளை வண்டியில் பெட்டியும் படுக்கையுமாக ஒரு மூடை அரிசியுடன் வந்தடைந்தார்.

கல்லூரியில் கொண்டுவிட அன்னையாரும் கூடவே வந்திருந்தார். ஒரு மூடை அரிசியைக் கீழைச் சிந்தாமணியில் உள்ள நீராகார மடத்தில் கொடுத்து உணவுக்கு ஏற்பாடு செய்து கொண்டார். மடத்தில் தங்கவும் படிக்கவும் வசதியில்லாததால் திருச்சி நகரில் மேட்டுச்சிந்தாமணியில் மாத வாடகை ரூபாய் மூன்றிற்கு அறை எடுத்துக் கொண்டார். இந்த அறையிலும் மின்விளக்குக் கிடையாது. இங்கிருந்து தமது சொந்த சைக்கிள் மூலம் உணவு உட்கொள்ளக் கீழைச் சிந்தாமணிக்குச் சென்று அங்கிருந்து கல்லூரிக்குப் போவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். மொத்தம் 5 மைல் தூரம். அங்கிருந்து மீண்டும் அதே வழியில் விடுதிக்குத் திரும்புவார். ஆனால் ஒரு மாதகாலத்தினுள் அந்த சைக்கிள் பயணம் அவரது உடல் நிலைக்கு ஒத்துவரவில்லை. வயிற்றுப் போக்கால் அவதிப்பட்ட அவர் கல்லூரி அருகிலுள்ள வாணப்பட்டறை என்ற தெருவில் அறை எடுத்து அங்கு தங்கினார். இந்த நிலையில்தான் இராமசாமி ரெட்டியாரும் இராமச்சந்திர ஆச்சாரியும் இந்த அறைக்கு வந்து பேராசிரியரின் திருமணத்தை உறுதி செய்தனர்.

**திருமணம்:** திருமணத்திற்காகப் பேராசிரியர் பத்து நாட்கள் விடுமுறை எடுத்துக் கொண்டார். அவரது தமையன் முறை கொண்ட சதாசிவ ரெட்டியார் திருமணத்திற்காக ஆயிரம் ரூபாய் கொடுத்து உதவியிருந்தார். திருமணம் பொட்டணம் என்ற ஊரில் 1936ஆம் ஆண்டு நடைபெற்றது. துணைவியாரின் பெயர் செல்லப்பாப்பா. இராமசாமி ரெட்டியாரின் தங்கை. திருமணத்தின் போது பேராசிரியரின் உடல்நிலை நலிவுற்றிருந்தது. இரண்டு மணி நேரம் கூடப் பொறுக்க முடியா அளவில் அடிக்கடி வயிற்றுப்போக்கு வந்து கொண்டேயிருந்தது. சடங்குகளுடன் திருமணம் நல்லபடி முடிந்ததுமே அவரது தமையனார் முறை கொண்ட நல்லப்ப ரெட்டியார் வீட்டுத் திண்ணையில் அமரவேண்டியிருந்தது. திருமணத்தைக் கொஞ்ச நாள் கழித்து வைத்திருக்கலாமே என்று சிலர் கூறுமளவிற்கு அவரது உடல்நிலை மோசமாக இருந்தது.

**கல்லூரிப் படிப்புத் தடைபடுதல்:** திருமணமான பின் சில நாட்கள் கோட்டத்தூரில் தங்கியிருந்தார். உடல்நலிவு காரணமாக அந்த ஆண்டு கல்லூரிக்குப் போக முடியாதவாறு படிப்புத் தடைப்பட்டது. தமக்கு ஏற்பட்ட உடல்நலிவை விளக்கிக் கல்லூரிக்குக் கடிதம் எழுதினார்.

பிறகு அவரது துணைவியாரின் ஊரான பொட்டணத்திலேயே தங்கிக்கொண்டார். தங்கியிருந்த காலத்தில் அவரது மைத்துனர்

இராமசாமி ரெட்டியார் ஏற்பாட்டில் சிலநாட்கள் மாலையில் 2 மணி நேரம் திருக்குறள் சொற்பொழிவு ஆற்றிவந்தார். இந்தக் காலகட்டத்தில்தான் தமது துணைவியாருக்குரிய சொத்துக் குறித்து நல்லப்ப ரெட்டியார் எடுத்துச் சொன்ன போதிலும் அதில் ஆர்வம் காட்டாது கல்லூரி படிப்பிலேயே கருத்தாக இருந்தார். இதனால், உலகம் புரியாத அப்பாவி என்று பேராசிரியரைக் கணித்தார் நல்லப்ப ரெட்டியார். பின்னாட்களில் இராமசாமி ரெட்டியார் தமது தங்கைக்கு அதாவது பேராசிரியரது மனைவிக்கு உரிய சீர்வரிசை கொடுப்பதைத் தவிர்த்துள்ளார்.

**மீண்டும் கல்லூரிப் படிப்பு:** 1937 ஜுன் மாதம் தாம் படித்த கல்லூரியிலேயே மீண்டும் சேர்ந்து படிப்பைத் தொடர்ந்தார். அக்காலத்தில் கல்விக் கட்டணம் 90 ரூபாய். முதல் வகுப்பில் அவர் தேறியிருந்ததால் பேராசிரியரின் விண்ணப்பத்தை ஏற்று ரெட்டி ஜனசங்கம் அவருக்கு மாதம் ரூ.10 உதவித்தொகை வீதம் ஆண்டுக்கு 100 ரூபாய் வழங்கலாயிற்று. மாதந்தோறும் முதல் வாரத்தில் அஞ்சல் மூலம் கிடைத்து வந்த இந்தக் கல்வித்தொகை படிப்புக்கு உதவியாக இருந்தது. கல்லூரியில் சேர்ந்த தொடக்கத்தில் இயற்பியல் ஆனர்ஸ் படிப்பில் இடம் தருமாறு கல்லூரியின் முதல்வர் மறை. திரு. ஜெரோம் பாதிரியாரிடம் பணிந்து கேட்டிருக்கிறார் பேராசிரியர். சில நாட்களாகத் தரையில் உட்கார்ந்து அடம்பிடித்துக் கூட இடம் கேட்டிருக்கிறார். பிறகு முதல்வர் அன்புடன் தந்த பதில் "விதிப்படி மூன்று ஆண்டு ஆனர்ஸ் படிப்பை நான்கு ஆண்டுகளுக்குள் முடித்து விட வேண்டும். இப்போது உன் உடல்நலக் குறைவால் ஓராண்டு போய் விட்டது. இனி உனக்கு அந்தச் சலுகை இல்லை. மீண்டும் ஏதாவது உனக்கு அசௌகரியம் ஏற்பட்டால் ஓராண்டு சலுகையைப் பயன்படுத்த முடியாது. உன் நன்மையைக் கருதித்தான் இயற்பியல் ஆனர்ஸ் பாடம் உனக்குத் தரவில்லை". அதன் பிறகு பேராசிரியர் வேதியியல் படிப்பையே தொடர்ந்தார்.

கல்லூரியில் மீண்டும் சேர்ந்து இரண்டு ஆண்டுகள் இளங்கலை படித்துக் கொண்டிருந்த அந்தக் காலகட்டத்தில் அவரது துணைவியார் பொட்டணம் ஊரிலுள்ள தம் அண்ணன் வீட்டிலேயே வாழ்ந்து வந்தார். கல்லூரியில் விடுமுறை கிடைக்கும் போதெல்லாம் பேராசிரியர் இங்குதான் வருவார். முசிறியில் இருந்து நாமக்கல்லுக்கு இரவு 8 மணியளவில் வந்து சேருவார். அவரது மைத்துனரான இராமலிங்கம் ரெட்டியார் பஸ்நிலையத்திலேயே காத்துநிற்பார். பிறகு இரண்டுபேரும் பஸ்ஸிலேறி 2 ரூபாய்

கொடுத்துப் பொட்டணத்துக்கு வருவது வழக்கம். அதேவேளை இடையிடையே கோட்டத்தூரிலுள்ள தமது அம்மாவையும் பார்த்து வருவார். படிப்புக்குப் பண உதவி செய்யும் நிலையில் அம்மாவுக்கு நிதி வசதி இல்லை.

இளங்கலை படித்த போது திருச்சியில் வாணப்பட்டறைத் தெருவிலுள்ள விடுதியில் மாதம் 6 ரூபாய் கொடுத்துத் தங்கினார். அந்த சமயத்தில் அவருடன் கல்லூரி மாணவர்களான விருத்தாசலம், தியாகராசன், முத்துகிருஷ்ணன் ஆகியோரும் தங்கினர். இம்மூவருமே பிற்காலத்தில் வாழ்க்கையில் சிறப்பான நிலைக்கு உயர்ந்தனர். விருத்தாச்சலம் புகழ்பெற்ற வக்கீலாகவும் முத்துகிருஷ்ணன் புகழ்பெற்ற மருத்துவராகவும் ஆகினர். இவர்கள் பேராசிரியருக்கு நல்ல நண்பர்களாகத் திகழ்ந்தவர்கள். பிற்காலத்தில் வக்கீல் தொழில் புரிந்த விருத்தாச்சலம் பல்வேறு வழக்குகளில் திறமையாக வாதாடி ஜெயித்துள்ளார்.

இந்தக் கல்லூரி வாழ்க்கையில் நல்ல முறையில் நூலகங்களைப் பயன்படுத்தியதோடு வேதியியல் கணிதம் போன்ற தேர்வுகள் தொடர்பாக, கழிந்த வருடங்களில் உள்ள கேள்வித் தாள்களை வாசித்துத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டார். தமது படிப்பில் ஏற்படும் ஐயங்களைத் தயக்கமின்றி ஆசிரியர்களிடமும் நண்பர்களிடமும் சொல்லி அதற்கான விடையைப் பெற்றுக் கொள்ளும் வழக்கம் அவருக்கு இருந்தது.

**BSC பட்டம் பெறல்:** ஒரு புறம் குடும்பவாழ்விலும் இன்னொரு புறம் இளங்கலை வேதியியல் படிப்பிலும் (BSC) ஈடுபட்டிருந்த பேராசிரியர் நல்ல மதிப்பெண்களுடன் 1939ஆம் ஆண்டு முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். கல்லூரியில் அவருக்குத்தான் முதல் மதிப்பெண்ணும் கிடைத்தது. அந்தக் காலத்தில் ஏதாவது அரசு வேலையில் சேரவேண்டுமென்றால் கல்லூரி முதல்வரின் நற்சான்றிதழுடன் சமூக அந்தஸ்திலுள்ள இரண்டு பேருடைய நற்சான்றிதழ்களையும் பெற்றிருக்கவேண்டும். அதைக் கருத்தில் கொண்டு காட்டுப்புத்தூர் என்ற நகரிலுள்ள நந்திரெட்டியார் என்ற மிட்டாதாரரை அணுகியபோது அவர் நற்சான்றிதழ் அளித்ததோடு பெரும் விருந்தையும் பேராசிரியருக்கு அளித்தார். அதன் பின்னர் ஒரு நாள் கல்லூரி முதல்வர் சர். டி. தேசிகாச்சாரியைச் சந்தித்து நன்னடத்தைச் சான்றிதழ் பெற்றார். கல்லூரி முதல்வர், 'நீ வாழ்க்கையில் உயர்ந்தநிலையை அடைவாயாக' என வாழ்த்தி அனுப்பினார். கோட்டத்தூர் சென்ற பேராசிரியர் தமது அன்னையின்

ஆசிபெற்று, தமது துணைவியாரின் ஊரான பொட்டணத்திலேயே தங்கலானார்.

**வேலைதேடும் படலம்:** இளங்கலைப் பட்டப்படிப்பிற்குப் பின்பு அங்கிருந்தவாறே இரு ஆண்டுகள் வேலை தேடும் படலத்தைத் தொடர்ந்தார். ஆனாலும் முயற்சி பலனளிக்கவில்லை. பொட்டணம் ஊரிலிருந்த போது கோவிலிலுள்ள சாமியை ஊர்வலமாகக் கொண்டு செல்வதில் வெவ்வேறு சாதி மக்களி டையே மோதல் போக்கு நிலவியிருந்தது. அப்போது மக்களிடையே சமாதானம் செய்யும் பணியிலும் கலந்துள்ளார் பேராசிரியர். அதற்காகப் காவல்துறைக்கு ஒத்துழைப்பும் தந்துள்ளார்.

வேலைகிடைக்காத சூழலில்தான் துணைவியார் நோய்வாய்ப் பட்டார். துணைவியாரின் தந்தை மற்றும் அண்ணனாகிய இராம லிங்க ரெட்டியார் மருத்துவச் சிகிச்சைக்கு உதவினாலும் கூட ஈடுபாட்டுடன் செய்யவில்லை என்பது பேராசிரியரின் மனக்குமுறல்.

**ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்தல்:** வேலை கிடைக்காதிருந்த இதே சூழலில்தான் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து படிக்கலாம் என்ற எண்ணம் அவருக்குள் எழுந்தது. ஆனால் அதற்கான பணத்தை எப்படி ஈட்டுவது என்று வழிவகைகள் தெரியாது குழம்பினார். இறுதியாக ஆலத்துடையாம் பட்டியில் இருந்த நன்செய் நிலத்தை (நெல் குத்தகை வந்து கொண்டிருந்த) விற்பது எனப் பேராசிரியரின் அன்னையார் முடிவெடுத்தார். கட்டாய விற்பனை என்றறிந்த ஊர்க்காரர்கள் (நண்பர்களும் உறவினர்களும் இதில் அடங்குவர்) ரூ.1500 மதிப்புள்ள நிலத்தை வெறும் ரூ.700/-க்கு வாங்கும் சூழ்நிலையை உருவாக்கினர். பேராசிரியர் விற்ற பணத்தோடு ஊர் திரும்பித் தம் அன்னையாரிடம் புலம்பியபோது, அதற்கு அன்னையார் மறுமொழியாய் "ரூ.700 படிப்பிற்குப் போதுமென்பதால், கவலையை விடுத்துச் சென்னை சென்று படித்து வருவாயாக" என்று ஆசி வழங்கினார்.

அந்நாள்களில் சென்னையில் சைதாப்பேட்டையிலுள்ள அரசு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் இடம் கிடைப்பது கடினமானது. கேரளம், ஆந்திரம், கர்நாடகம் என்ற பகுதியிலுள்ளவர்களுக்கும் சென்னைதான் புகலிடம். பேராசிரியர் BSC யில் முதல் வகுப்பில் சிறந்த மதிப்பெண்களைப் பெற்றிருந்ததால் தகுதி அடிப்படையில் இடம் கிடைத்தது. அத்துடன் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார்.

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலுள்ள விடுதியில் தங்கிக் கொண்டார். மாதந்தோறும் ரூபாய் *25* அல்லது *26* ரூபாய் செலுத்த வேண்டியிருந்தது. ஆனால் அக்காலத்தில் இது அதிகக் கட்டணம். LT அதாவது Licentiate of Teaching எனும் ஆசிரியப் பயிற்சிப் படிப்பு படித்து வந்த காலத்தில் கன்னட, கேரளா, ஆந்திரப் பகுதிகளிலிருந்து வந்த மாணவர்களிடம் நல்லுறவைப் பேணினார். ஆசிரியர் பயிற்சிப் படிப்பின் அடிப்படையைப் புரிந்து கொண்டு கல்வி கற்றாரே தவிர, ஏனோ பட்டம் மட்டும் பெற வேண்டும் என்ற நோக்கத்தில் அன்று. அதனால்தான் அவரால் கல்வித் துறை சார்ந்த நூற்களை இயற்ற முடிந்தது என்பதைச் சிறப்பாகச் சுட்டிக்காட்ட வேண்டும். குருசாமி ரெட்டியார் என்ற மிகச் சிறந்த ஆசிரியரையும் இவண் குறிப்பிட்டாக வேண்டும். காரணம் கல்வி உளவியல் பாடத்தில் நிபுணத்துவம் வாய்ந்த இவரிடம் இருந்து நிறைய விஷயங்களைக் கற்றுக் கொண்டதால் பிற்காலத்தில் *(1985)* கல்வி உளவியல் கோட்பாடுகள் என்ற அற்புதமான நூலைப் பேராசிரியரால் எழுத முடிந்தது.

LT அதாவது Licentiate of Teaching எனும் ஆசிரியப் பயிற்சிப் படிப்பில் *1941*இல் வெற்றிபெற்றார் பேராசிரியர்.

**தலைமையாசிரியர் பணி:** LT எனும் பட்டம் பெற்றதுமே, துறையூரில் பெருநிலக்கிழார் நடுநிலைப் பள்ளியில் தலைமையாசிரியர் பணி கிடைத்தது. இந்த நடுநிலைப் பள்ளி துறையூரிலுள்ள ஜமீன்தார்களான, விஜய வேங்கடாசல துரை மற்றும் முத்து வேங்கடாசல துரை ஆகியோர்களால் புதிதாகத் தொடங்கப் பெற்றதாகும். *1941*இல் கல்வித்துறையில் ஆசிரியராய் அடியெடுத்து வைத்தார். இந்தப் புதிய நடுநிலைப்பள்ளி தொடங்கப் பெற்றுச் சில நாட்களில் *60*க்கும் அதிகமான மாணவர்கள் *8*ஆம் வகுப்பில் சேர்ந்தனர். இந்தப் பள்ளியின் ஒரு பகுதியில் ஆசிரியர்கள் தங்குவதற்கான அறைகள் சில இருந்தன. அவற்றுள் ஒன்றில் தமது துணைவியாருடன் தங்கலானார் பேராசிரியர். இது நாள் வரையிலும் விடுதிகளில் தங்கியும் தமது துணைவியார் வீட்டிலும் வாழ்ந்து வந்த பேராசிரியர் முதல் முறையாக யாரையும் சாராமல் குடும்பமாக வாழத் தொடங்கினார்.

பள்ளியின் வரவு செலவுக் கணக்கு மற்றும் மாணவர்களிடமிருந்து பெறும் கல்விக் கட்டணம், கட்டணச் சலுகை, அபராதம் விதித்தல் போன்ற பல்வேறு கணக்கு நுணுக்கங்களைக் காட்டுப்புத்தூரில் உள்ள பள்ளி ஆசிரியரிடம் கற்றுக் கொண்டு

தாம் பணியாற்றி வந்த பள்ளியில் திறம்படக் கணக்கு வழக்குகளைப் பார்த்து வந்தார். முதல் மூன்று ஆண்டுகள் எழுத்தர் பதவிக்கு யாரையும் பள்ளி நிர்வாகம் நியமிக்காததால் பள்ளி ஆசிரியர்களைக் கொண்டே தட்டச்சுப் பணிகளை நிறைவேற்றி வந்தார் பேராசிரியர். அது போலவே பள்ளியில் வசூலிக்கப்படும் கட்டணங்கள் மற்றும் ஏனைய வகையிலான பள்ளி வருமானத்தை அந்தந்த நாட்களிலேயே லட்சுமி விலாஸ் வங்கியில் செலுத்தும்படி செய்துவிடுவார். அந்தக் காலகட்டத்தில் பள்ளியில் மாணவர்கள் கட்டணம் செலுத்தித்தான் படிக்க வேண்டும். ஏழை மாணவர்கள் கட்டணம் செலுத்தத் தாமதமாகும் சூழல்களில் அபராதக் கட்டணம் விதிக்காமல் சற்றுக் காலம் தாழ்த்திக் கட்டணம் செலுத்த அனுமதித்திருந்தார்.

பள்ளி இரண்டாம் ஆண்டில் அடியெடுத்து வைத்த போது தகுதி வாய்ந்த ஆசிரியர்களை அமர்த்திக் கொண்டார். இரண்டாம் ஆண்டில் 250 மாணவர்கள் இருந்ததால் புதிதாக வகுப்பறைகள், மேசைகள், நாற்காலிகள், பெஞ்சுகள் போன்ற உள்கட்டமைப்பு வசதிகள் செய்து தர வேண்டிய பொறுப்பு வந்து சேர்ந்தது. இது அவரது பணியன்று என்றாலும் கூட அதை விரும்பிச் செய்தார். அதனால் பள்ளி நேரத்திற்கு அப்பாலும் பல மணிநேரம் பள்ளி வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். இளைய ஜமீன்தாரைச் சந்தித்துப் பள்ளியின் பெயரில் 5000 ரூபாய் நிலையான நிதியாகப் போடச் செய்தார். ஆனால் பள்ளியின் நிர்வாகிகளான ஜமீன்தார்கள் அவர் செய்த பணிகளைப் பெரிதாக மதிக்கவில்லை என்பது பேராசிரியரின் மனக்குறை. அந்தக் காலத்தில் உள்ள தனியார் பள்ளிகள் ஆசிரியர்களின் இரத்தத்தை உறிஞ்சின என்ற கடுமையான விமர்சனத்தை முன் வைக்கவும் செய்கிறார்.

அந்தக் காலகட்டத்தில் தலைமையாசிரியர்கள் Account Test for Subordinates என்ற தேர்வில் தேர்ச்சிபெற்றிருக்க வேண்டும் என்ற விதிமுறை இருந்தது. அந்தத் தேர்விலும் பேராசிரியர் வெற்றி பெற்றார். தாம் பெற்ற இளங்கலைப் (வேதியியல்) பட்டத்தை ஆதாரமாக வைத்துக் கொண்டு தமிழ் முதுகலை (MA) பயில முயன்றார். ஆனால் சென்னைப் பல்கலைக்கழகத்தின் அப்போதைய நெறிமுறைகள் உதவாமையால், பேராசிரியர் தமது சொந்த வழியைக் கையாண்டார். முதலில் தனியாக வித்துவான் (தமிழ்-1944), பரீட்சை எழுதித் தேர்ச்சியடைந்தார். பின்னர் இளங்கலை தமிழிலும் (BA-1947), வெற்றிபெற்றார். பின்னர் முதுகலைத் தமிழ் (MA-1951) பட்டம் பெற்றார்.

நடுநிலைப்பள்ளி தொடங்கிய அடுத்த ஆண்டு இந்தப் பள்ளியில் 9ஆம் வகுப்புத் தொடங்குவதற்கு அதாவது உயர்நிலைப் பள்ளியாக்குவதற்குப் பள்ளி நிர்வாகிகள் அணுகியபோது வட்டாரக் கல்வித்துறை மறுத்துவிட்டது. ஆனால் *1943-44* ஆண்டில் பேராசிரியர் தாமாகவே முன்வந்து பள்ளியின் தாளாளரிடம் உயர்நிலைப்பள்ளியாக்கும் தமது விருப்பத்தைத் தெரிவித்தார். தாளாளரோ இது உங்களால் முடியுமா என்று கேட்டார். முடியும் என்று கூறித் தாளாளரின் அனுமதி பெற்று நான்காம் படிவம் தொடங்குவதற்கு அனுமதி வாங்கி வந்தார்.

நான்காம் படிவம் தொடங்கப்பட்டதும் இரண்டு மாதங்களுக்குள் பள்ளியின் உட்கட்டமைப்பை உருவாக்கினார் பேராசிரியர். அக்காலத்தில் முசிறியைத் தவிர, துறையூரில் மட்டுமே இந்த உயர்நிலைப் பள்ளியிருந்ததால் நான்கு மைல் தூரத்திலிருந்தெல்லாம் மாணவர்கள் நடந்தே வந்து படித்தனர். சாலை வசதியின்மை, மழைக்காலத்தில் சாலைகளைப் பயன்படுத்த முடியாத நிலை இருந்த சூழலில் மாணவர் இல்லம் உருவாக வழிவகை செய்தார். இதன் மூலம் மாணவர்கள் இரவு படிப்பதற்கும் வசதி கிடைத்தது. துறையூரிலேயே தங்கி மாணவர்களின் நலனிலே முழு அக்கறை செலுத்திய அவரது பணியைக் கவனிக்கும் போது 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற அப்பரது வாக்குகள் நினைவுக்கு வருகிறது. *1940* களில் அறிவியல் மற்றும் கணித ஆசிரியர்கள் குறைவாகவே இருந்தனர். பேராசிரியர் இரண்டு பாடங்களையும் படித்தவர் என்பதால் வேலைப்பளுக்களுக்கு மத்தியிலும் கூட மாணவர்களுக்கு இப்பாடங்களைக் கற்பித்தார்.

அதிக மதிப்பெண் பெறும் மாணவர்களுக்கு முழுக்கட்டணச் சலுகை மற்றும் அரைக் கட்டணச் சலுகைகள் பெற ஏற்பாடு செய்தார். இதற்காக எல்லாச் சாதியிலும் உள்ள பணக்காரர்களின் உதவியை நாடவே அவர்களும் மாணவர்களுக்குக் கல்வி உதவித்தொகை தந்தனர். இது தவிர, சாதிப்பாகுபாடின்றி ஏழை மாணவர்களுக்குக் குறைந்த கட்டணச் சலுகைகள் கிடைக்கும்படி செய்தார். துறையூர்ப் பகுதியில் ரெட்டியார்கள், (தமிழ்ச்) செட்டியார்கள், ஆரிய வைசியர்கள், பிராமணர்கள், வேளாளர்களில் சில பிரிவினர் பரம ஏழைகளாக இருந்தாலும் கட்டணச் சலுகை பெற வாய்ப்பே இல்லாதிருந்தனர். இவர்களில் திறமையான மாணாக்கர்கள் கூட எந்தச் சலுகையும் பெற வாய்ப்பில்லாதது பேராசிரியருக்கு மிகவும் வருத்தத்தை விளைவித்துக் கொண்டிருந்தது, சென்னைக் கல்வித்துறை மானியம் பற்றிய

விதிகளில் 32-வது பிரிவின்படி (32 Grant-in-code) பள்ளிக் கட்டண வருவாயில் 10 சதவிகிதம் கட்டணச் சலுகை வழங்கலாம். இதைப் பயன்படுத்திச் சலுகை வழங்கினால் பள்ளிக்கும் நல்ல பெயர் கிடைக்கும் ஏழை மாணவர்களும் பயனடைவார்கள் என்று தாளாளர் சின்னதுரையிடம் தன் திட்டத்தை முன்வைத்தார். அவரும் மனமிரங்கி 5 சதவிகிதம் சலுகை அளித்தார். இது தவிர முதல் மற்றும் இரண்டாம் மதிப்பெண் பெறும் மாணவர்களுக்கு ஆண்டுவிழாவின் போது பரிசுத்தொகை கிடைக்கவும் ஏற்பாடுகள் செய்துள்ளார். இது போன்ற செயல்கள் பள்ளி குறித்த நல்மதிப்புப் பரவிடக் காரணமானது.

பள்ளியில் மாணவர் இலக்கியக் கழகம் ஒன்றை நிறுவிய பேராசிரியர், பல சிறப்புக்கூட்டங்களை அக்காலத்தில் நடத்தி யுள்ளார். அதில் பேரறிஞர்கள் பலர் உரையாற்றி மாணவர்களுக்கு அறிவு வெளிச்சம் தந்துள்ளனர். அவ்வகையில் லால்குடி நடேச முதலியார், வீ. உலக ஊழியர், பு.ரா. புருடோத்தம நாயுடு, அ. சாம்பசிவ ரெட்டியார், சி. இலக்குவனார், இராமசாமி கவுண்டர் போன்ற தமிழ்மேதைகள் உரையாற்றியுள்ளனர். பேரறிஞர் அண்ணா அவர்கள் கூட இந்தப் பள்ளியில் ஆற்றோரம் என்ற தலைப்பில் உரையாற்றியுள்ளார். அப்போது துறையூரில் உள்ள பொதுமக்கள் பலரும் இந்த உரையைக் கேட்டு மகிழ்ந்தனர். எல்லாவற்றிற்கும் மேலாகப் பாவேந்தர் பாரதிதாசனையும் இலக்கியக்கழகம் வழி மாணவர்களுக்கு உரைநிகழ்த்தச் செய்துள்ளார். அப்போது பாவேந்தர் கவிதை இயற்றுவதில் தமது பல அனுபவங்களைச் சுவையுடன் எடுத்துக்காட்டிக் கேட்போரை மகிழ்வித்தார்.

பள்ளியில் பல விழாக்களை நடத்தி மாணவர்கள் மேம்பாட்டிற்கு வழிவகை செய்தார். குறிப்பாக, அக்காலத்திலேயே நிறைய உடற்பயிற்சி விளையாட்டுப் போட்டிகளை நடத்தியதோடு பள்ளி ஆண்டு விழாக்களும் நடத்தியுள்ளார். ஆண்டுவிழாக்களில் பன்மொழிப்புலவர் ரெட்டியார், சுவாமி சித்பவானந்தர், மு. வரதராசனார் போன்ற ஆளுமைகளைப் பங்கேற்கச் செய்தார். இதில் பொதுமக்களைப் பார்வையாளர்களாகக் கலந்துகொள்ள வழிவகை செய்தார். இவை முன்மாதிரியான செயல்கள் என்பது இவண் குறிக்கத்தக்கது.

துறையூரில் திருக்குறள் மாநாடு நடத்தும் பொறுப்பை அக்காலத்தில் தமிழறிஞர்கள் பேராசிரியரிடம் ஒப்படைத்தனர். பேரா. ஆலாலசுந்தரனார், போன்ற ஆளுமைகள் இதில் கலந்து

கொண்டனர். அது போலவே திருச்சி மாவட்ட ஆசிரியர் மாநாட்டையும் வெற்றிகரமாக நடத்திக்காட்டினார். ஒரு முறை காரைக்குடியில் உள்ள கம்பன்கழக விழாவில் கலந்து கொண்டபோது அதன் நிறுவனர் கம்பனடிப்பொடி. சா. கணேசனுடன் தொடர்பு கிடைத்தது. இது அவரது வாழ்க்கையில் திருப்பம் ஏற்பட வழிவகுத்தது.

பேராசிரியர் சாதி சார்ந்து இயங்காதவர் என்பதால், துறையூரில் பணியாற்றிய அன்றைய காலத்தில் எல்லாத் தரப்பு மக்களுடனும் கலந்துப் பழகியதோடு அவர்தம் திருமணம் மற்றும் இறப்பு நிகழ்ச்சிகளிலும் பங்கெடுத்துக் கொள்வதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார். இந்த வழக்கத்தை வாழ்நாள் முழுவதும் கடைபிடித்துள்ளார். பல வழக்கறிஞர்களுடன் நல்லுறவைப் பேணியுள்ளார்.

**குடும்ப நிகழ்வுகள்**: *1950* வரை பெருநிலக்கிழார் பள்ளியில் பணியாற்றிய காலத்தில் பேராசிரியரது குடும்பத்து நிகழ்வுகள் அவரது மனத்தை வருத்தமடையச் செய்தன. அந்த நிகழ்வுகள் நிச்சயமாக இந்தியாவில் வாழும் ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் பாடம் என்பதில் ஐயமில்லை.

பேராசிரியது மாமா, மாமி மற்றும் மைத்துனரான இராமசாமி ரெட்டியார் ஆகியோர் தம்மிடம் நேர்மையாக நடந்துகொள்ள வில்லை என்று கருத்துத் தெரிவிக்கிறார். தமது மனைவிக்குக் கிடைக்கவேண்டிய சொத்துரிமைகளைத் தராமல் கால நீட்டிப்புச் செய்துள்ளனர். மைத்துனர் இரண்டாவது திருமணம் செய்தபின், தவறான வழிகாட்டுதலால் ஒரு கட்டத்தில் சொத்தின் பேரில் தமது தாயாருக்கு எதிராக நீதிமன்றம் சென்றிருக்கிறார். அவற்றைச் சுமூகமாக முடித்துவைக்கப் பேராசிரியர் எடுத்த முயற்சிகள் வெற்றி பெறவில்லை. சோதிடர்களை நம்பி மைத்துனர் ஒவ்வொரு காரியத்தையும் செய்ததால் தோல்வியே அவருக்குக் கிடைத்துள்ளது. ஜோதிடத்தின் மூலம் பேராசிரியருக்கு எதிரான செயல்களில் இறங்கியுள்ளார். இவற்றையெல்லாம் தம் வாழ்க்கை வரலாற்றில் மனம் வருந்திப் பேராசிரியர் இவ்வாறு குறிப்பிடுகிறார்:-

இதுகாறும் ஆகூழ் இருந்தமையால் சொத்து பெருகிக் கொண்டே வந்தது என் மைத்துனர் குடும்பத்தில் இப்போது போகூழ் வரத் தொடங்கி விட்டது. இதற்கு உற்பாதமாக ஏற்பட்டவை மூன்று நிகழ்ச்சிகள்.

(1) பெண்கள் வழியாக வந்த சொத்தின் ஒரு பகுதியைப் பிரித்துத் தன் தங்கைக்குக் கொடுத்திருக்கலாம். தன் தங்கையைச் சொந்தக்காரன் தலையில் கட்டிவிட்டால் அவனை ஏமாற்றிவிடலாம் என்று திட்டம் போட்டது. இஃது ஒரு பெண் பாவம்.

(2) ஏழாண்டுகள் முதல் மனைவியுடன் சச்சரவுடன் வாழ்ந்தாலும் புத்திரப் பேறு ஏற்பட்ட பிறகு மனைவியையும் மகனையும் ஒதுக்கிவைத்தமை. இவள் துர்மரணத்திற்கு ஆளாவாள் என்று எதிர்பார்த்தமை. சுப்பிரமணியம், எரியும் நெருப்பில் எண்ணெய் ஊற்றினது போல சோதிடர்களைக் கொண்டு இந்த மரணத்தை உறுதிப்படுத்தினமை. இஃதும் ஒரு மாபெரும் பெண் பாவம்.

(3) குடும்பங்களைத் தூண்டிவிட்டு, வழக்குகளை ஏற்படுத்தி இதையே தன் பிழைப்பிற்கு வருவாயாகக் கொண்டு வாழ்பவரது வீட்டில் பெண் எடுத்தமை.

இந்த மூன்று காரணங்களால் பல்வேறு விபரீதங்கள் இணைந்து மன அமைதி சிறிதுமின்றிச் சொத்துகளை எல்லாம் இழந்து, நோயினால் பல்வேறு இன்னல்களை அநுபவித்து, ஐந்து பிள்ளைகளை (நான்கு பெண்கள் + ஒரு பையன்) விட்டு இரண்டாம் மனைவியும் இறக்க நேர்ந்து விட்ட நிலைமைகளை இறுதிக் காலத்திலாவது நினைத்துப் பார்த்து மனம் வருந்தி இருக்க வேண்டும். என் மைத்துனர் பொல்லாதவர் அல்லர். தீயவர் உறவால் இவற்றை எல்லாம் அநுபவிக்க நேர்ந்தது.

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான்செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி.

என்று மனம் வருந்துகிறார் பேராசிரியர்.

மைத்துனரின் மீது வருத்தம் இருந்தாலும் மைத்துனரின் மகனைப் (முதல் மனைவியின் மகனை) பின்னர் தம் சொந்தப் பொறுப்பில் 1949இல் துறையூரில் உள்ள ஜமீன்தார் தொடக்க நிலைப் பள்ளியில் 3ஆம் வகுப்பில் சேர்த்தார். நல்ல சுறுசுறுப்பாகத் திகழ்ந்த அந்த பையன் படிப்பிலும் கெட்டிக்காரன். அவனது எட்டாவது வயதில் ஒரு நாள் கொட்டகையில் தொங்கிக் கொண்டு

விளையாடும் போது எதிர்பாராத விதமாகக் கைநழுவி விழுந்து இறந்து போனான். பேராசிரியர் வாழ்வில் ஏற்பட்ட சோகமான நிகழ்வு இது.

திருமணத்திற்குப் பின் பத்தாண்டுகளாகியும் பேராசிரியருக்குக் குழந்தைப் பேறில்லாததால், அவரது அன்னையார் கவலைகொண்டார். அன்னையாரின் அறிவுறுத்தலின் பேரில் கோவில்களுக்குப் புனிதயாத்திரை மேற்கொள்ள 1948இல் முடிவெடுத்தார். அப்போதைய குடும்ப நண்பராகவும், தமிழறிஞராகவும் இருந்த திரு.கே.எஸ். முத்துவேல் பிள்ளையவர்களின் ஆலோசனை பெற்று இராமேஸ்வரம், மதுரை (திருப்பரங்குன்றம், அழகர்கோயில்), திருநெல்வேலி (குறுக்குத்துறை, நெல்லையப்பர் கோயில்), ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, திருச்செந்தூர், வானமாமலை, கன்னியாகுமரி, சுசீந்திரம், நாகர்கோயில், திருவனந்தபுரம், கோயம்புத்தூர் (பேரூர்), பழநி, திருவண்ணாமலை, திருப்பதி, திருத்தணி, சென்னை, ஸ்ரீரங்கம் என்ற வரிசைமுறையில், பேராசிரியர் 40 நாட்கள் கோவில்களுக்குப் புனிதயாத்திரையை மேற்கொண்டு வெற்றிகரமாக நிறைவேற்றினார். ஓட்டல் உணவு சரியாகாது என்பதால் 40 நாட்களுக்கான அரிசி, பருப்பு முதலிய மளிகைப் பொருட்களை எடுத்துக் கொண்டு, நண்பர்கள், தமது அன்னையார் உட்பட 11 பேரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு குழுவாகப் பயணத்தை மேற்கொண்டார். இந்த நகரங்கள் பற்றிய சிறப்பம்சங்களையும் விரிவாக அவர் எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

1948இல் பேராசிரியருக்கெதிராகப் பள்ளியில் உள்ள நண்பர்களே மொட்டைக்கடிதம் போடுவது போன்ற எதிர்மறைச் செய்கைகளில் ஈடுபட்டதால் மன வருத்தமடைந்தார். இச் சமயங்களில் அடிக்கடி சென்னை செல்ல வேண்டியிருந்தது. 1950ஆம் ஆண்டு வரை இந்த நிலை தொடர்ந்தது. இந்த சூழலில்தான் ஒரு நாள் காரைக்குடி அழகப்பச் செட்டியார் பயிற்சிக் கல்லூரி முதல்வரிடமிருந்து திடீரென்று ஒரு தந்தியும் மறுநாள் கடிதமும் வந்தது. தமிழ்ப் பேராசிரியர் பதவியை ஏற்குமாறு வந்த கடிதம் அது. கல்லூரி 1950சூலை 5 நாள் திறக்கப் பெறுகின்றது என்ற குறிப்பையும் கடிதத்திலிருந்து தெரிந்து கொண்டார். உண்மையில், பள்ளிவாழ்க்கையில் நேரிட்ட குழப்பத்தாலும் மன அமைதியின்றி அங்கும் இங்குமாக அலைந்து திரிந்து கொண்டிருந்ததாலும் அந்தப் பதவிக்கான கல்லூரி விளம்பரம் அவரது கண்ணில் படவில்லை என்பதால் அதற்காக

விண்ணப்பித்திருக்கவில்லை. ஆனால் அந்தப் பணியில் சேருமாறு கடிதம் வந்திருந்ததால் காரைக்குடி ஆசிரியர்க் கல்லூரியில் பணியாற்ற அவர் முடிவுசெய்தார்.

புதிய பணி கிடைப்பதற்குச் சில மாதங்கள் முன்புதான், அதாவது 1949 அக்டோபர் 13இல்தான் அவருக்கு முதல் குழந்தை பிறந்தது. குழந்தைக்கு இராமலிங்கம் என்ற பெயர்சூட்டி மகிழ்ந்தார்.

**காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில்:**

பெருநிலக்கிழார் உயர்நிலைப்பள்ளி நிர்வாகத்திடம் அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்ற 2 ஆண்டுகள் அனுமதிக்கவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்த போது நிர்வாகம் அனுமதிக்கவில்லை. எனவே, சட்டப்படி மூன்றுமாதச் சம்பளம் 540 ரூபாயைக் கொடுத்துவிட்டு அங்கிருந்து விலகிக் கொண்டார். 1950 சூலை 4ஆம் தேதி இரயில் மூலம் காலையில் காரைக்குடி வந்தடைந்த அவர் தமக்கு ஏற்கனவே அறிமுகமாயிருந்த திரு. சா. கணேசன் வீட்டிற்கு நேராகச் சென்றார். அங்கு அவரைச் சந்தித்தபோதுதான் தமக்குத் தெரியாமலேயே சா. கணேசன் அவர்கள் தம்மை ஆசிரியர் பயிற்சிக்கல்லூரிக்குத் தகுதி அடிப்படையில் அந்தப் பதவிக்குப் பரிந்துரை செய்துள்ளது தெரியவந்தது. அழகப்பா ஆசிரியப் பயிற்சிக்கல்லூரியில் தமிழுக்கான பொறுப்பாசிரியாகப் பதவியேற்றுக்கொண்டார். இந்த ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி நாடு விடுதலை பெற்ற பிறகு தமிழகத்தில் முதல் முதலாகச் செயல்பட்ட கல்லூரிகளுள் முதன்மையானது.

கல்லூரியில் சேர்ந்து ஒன்பது மாதம் கழிந்து ஒரு வீட்டை மாத வாடகை 35 ரூபாய்க்கு எடுத்துக் கொண்டார். அதில் தமது துணைவியார், குழந்தை இராமலிங்கம், தமது தாயார், மனைவியின் தாயார் ஆகியோரை அழைத்து வந்து குடியேறச்செய்தார். இந்த வீட்டிலிருந்துதான் தமது சைக்கிளின் மூலம் கல்லூரிக்குச் சென்று வருவது வழக்கமானது. இந்த வீட்டில் சுமார் பத்து ஆண்டுகள் அதாவது திருப்பதியில் சேர்வது வரை குடும்பத்துடன் வாழ்ந்து வந்தார். அவரது குடும்பத்தார் மேலும் ஆறு ஆண்டுகள் இதே வீட்டில் வாழ்ந்து வந்தனர்.

காரைக்குடியில் பணியாற்றிய காலத்தில் அந்த நகரில் பல கல்விசார்ந்த, அரசியல் மற்றும் இலக்கியம் சார்ந்து செயல்பட்ட

ஆளுமைகளுடன் பேராசிரியருக்கு நல்ல தொடர்பு இருந்தது. அவர்களுள் கம்பன் கழக நிறுவனர் சா. கணேசன், புதுமைப் பதிப்பகத்தின் உரிமையாளர் அ.லெ. நடராசன், இலக்கியப் பதிப்பகத்தின் உரிமையாளர் சோமய்யா, பெரும்புலவர் ராய. சொக்கலிங்கம், பேராசிரியர் ஆ. முத்துசிவன், தமிழ் ஆர்வலர் செ. முத்துகணேசன், ஆசிரியர் கே. ஆர் சீனிவாச அய்யர், இராம சிதம்பரம் ஆகியோர் முக்கியமானோர். எல்லாவற்றிற்கும் மேலாக தன்னுடன் பணியாற்றியவர்களுடன் எப்போதுமே இணக்கத்துடன் பணியாற்றி வந்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களுடன் மட்டுமல்ல - காரைக்குடியிலுள்ள நகை வணிகர்களுடனும் நல்ல நட்பைப் பேணிவந்திருக்கிறார்.

அழகப்பாக் கல்லூரிக்கு வந்த பிறகுதான் பேராசிரியர் 1951இல் சென்னைப்பல்கலைக்கழக எம்ஏ தமிழ்த்தேர்வைத் திருச்சியில் எழுதினார். 1400க்கு 833 மதிப்பெண்கள் பெற்றார்.

அழகப்பா ஆசிரியப் பயிற்சிக்கல்லூரியில் முதல் ஆண்டு ஆறு மாணவர்கள் தமிழில் சேர்ந்தனர். அறிவியல் துறை சார்ந்த கட்டிடத்தில்தான் இடநெருக்கடியுடன் தமிழ் வகுப்புகள் நடத்தப்பெற்றன. புதிய கல்லூரி என்பதால் நூலகத்திற்கும் போதியளவு நூல்கள் வரவில்லை. இந்த சூழலில் நூலகப் பொறுப்பாளர் திரு. மேனன் அவர்கள் கல்லூரியின் நூலகத்தை விரிவுப்படுத்தும் பொறுப்பைப் பேராசிரியரிடம் ஒப்படைத்தார். பேராசிரியர் தகுதியான நூல்களை வாங்கச் செய்து சிறந்ததொரு நூலகம் உருவெடுக்கக் காரணமானார்.

அதே காலகட்டத்தில் அசுரவேகத்தில் புதிதாக வகுப்பறைகள் கட்டப்பட்டுக் கொண்டிருந்தன. அவை கட்டிமுடிக்கப்பட்ட பின் அவரது துறைக்குப் போதுமான அறைகள் ஒதுக்கப்பட்டு அங்கிருந்து பணியாற்றினார். 1953, 1954 ஆகிய ஆண்டுகளில் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். அவை அமுதசுரபி எனும் மாத இதழில் வெளிவந்தன. அதன் பிறகு தமிழ் பயிற்று முறை, அறிவியல் பயிற்று முறை ஆகிய நூல்களை எழுதினார்.

காரைக்குடியில் இருக்கும்போது சா. கணேசன் மற்றும் முருகப்பர் மற்றும் புலவர். ராய. சொ போன்றோருடனான தொடர்பு பேராசிரியரைக் கம்பராமாயணத்தில் இன்னும் ஆழ்ந்த ஈடுபாடு கொள்ளச் செய்தது. முருகப்பர் கம்பராமாயணத்தை மக்களிடம் சேர்க்க வேண்டும் என்ற நோக்கில் புலவர் ராய.சொ. அவர்கள் தலைமையில் அமைத்த குழுவில் பேராசிரியரையும் உட்படுத்தினார்.

இந்தக் குழுவில் திரு.க. தேசிகன் (அழகப்பா கல்லூரித் தமிழாசிரியர்), திரு. பூ. அமிர்தலிங்கம் (காரைக்குடி நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர்) ஆகியோரும் இருந்தனர். இவர்களுடன் பேராசிரியரும் சேர்ந்து நடத்திய கம்பராமாயணம் குறித்த ஆய்வுக்கூட்டத்தில் முக்கியமான முடிவுகள் கண்டடையப்பட்டன. 'கம்பராமாயணம்' என்ற பெயர் கம்பரால் சூட்டப்பட்டதல்ல; இராமவதாரம் என்றுதான் இந்நூலுக்குக் கம்பர் பெயரிட்டிருக்க வேண்டும், கம்பராமாயணத்தில் பல இடைச் செருகல் செய்யுள்கள் உள்ளன போன்ற முக்கியமான கருத்துக்கள் ஆய்வின் அடிப்படையில் முன்வைக்கப்பட்டன.

குன்றக்குடி அடிகளாருடனும் பேராசிரியருக்கு நல்ல தொடர்பிருந்தது குறிப்பிடத்தக்கது. ஆன்மீகவாதியான குன்றக்குடி அடிகளார் நவீனச் சிந்தனைகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பவர் என்று பெயர் பெற்றிருந்தார். அவரை ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியில் தமிழ்மன்றம் சார்பாக ஆண்டுவிழாவில் பேசவருமாறு அழைப்பு விடுத்ததன் பேரில் அவரும் சொற்பொழிவாற்றினார். பார்வையாளர்களால் மண்டபம் நிறைந்திருந்த அந்த நிகழ்வினை முன்னெடுத்தவர் பேராசிரியர்.

குன்றக்குடி அடிகளார் பேராசிரியரின் தமிழறிவை விட அறிவியல் அறிவைப் பாராட்டியுள்ளார். அடிகளார் மீது கொண்டிருந்த மதிப்பின் காரணமாக ஒரு தடவை குன்றக்குடியில் நடைபெற்ற பக்தி நிறைந்த குருபூசை நிகழ்ச்சியிலும் பங்குபெற்றார். அப்போது பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார், புலவர் கோவிந்தசாமிப் பிள்ளை, கா. காடப்பச் செட்டியார் போன்ற ஆளுமைகளும் உடனிருந்தனர்.

பேராசிரியர் அறிவியலில் ஆர்வம் கொண்ட அதே நேரம் மரபார்ந்த நம்பிக்கை சார்ந்த சடங்குகளுக்கும் மதிப்புக் கொடுத்து வந்ததுள்ளார் என்பதற்கு மேற்குறிப்பிட்ட நிகழ்வு நல்லதொரு சான்று. அது போல இன்னொன்றையும் குறிப்பிடலாம். அவரது அன்னையார் தனக்குப் பேரன் பிறந்தால் திருச்சி மாவட்டத்தில் உள்ள செட்டிக்குளம் முருகன் கோவிலுக்கு அன்னதானம் செய்வதாக வேண்டுதல் செய்திருக்கிறார். அன்னையாரின் வேண்டுதலை நிறைவேற்றும் பொருட்டு 1955ஆம் ஆண்டு செட்டிக்குளம் முருகன் கோவிலுக்குக் குடும்பத்துடன் சென்று அன்னையாரின் வேண்டுதலை நிறைவேற்றினார். அங்கு பெரியளவில் அன்னதானம் செய்தார்.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் பேரவையானது ஒவ்வொரு மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை ஒரு கல்லூரியிலிருந்து இரண்டு உறுப்பினர்களைப் பெற்றுவந்தது. அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலிருந்து இரண்டு உறுப்பினர்கள் அனுப்பப்பட வேண்டும். கல்வியாளர் எல்லோரையும் போலவே பேராசிரியரும் அதற்குப் போட்டியிட்டார். இரண்டு முறை அவர் இளவயது என்பதால் வெற்றிப்பெற முடியவில்லை. ஆனாலும் கல்வி ஆலோசனைக் குழுவில் நான்காம் முறை வெற்றிபெற்று மூன்று (1953 - 1956) ஆண்டுகள் பணியாற்றினார்.

**பதவி உயர்வு:** பேராசிரியர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் விரிவுரையாளராகத்தான் நியமனம் பெற்றார். அவருக்குப் பேராசிரியர் பதவி கிடைத்திருக்க வேண்டும். அதற்காக முயன்றபோது மறைமுகமாக சிலர் அவருக்கெதிராகச் செயல் பட்டனர். அதனால் அவரது பதவி உயர்வு இரண்டு ஆண்டுகள் வரை தள்ளிப்போனது. ஆனால், அவருக்கு எதிர்பாராத நேரத்தில் பதவி உயர்வு கிடைத்தமை வியப்பான ஒரு நிகழ்வு. முதல்வர் துரைக்கண்ணு முதலியார் தமது மகளின் திருமணத்தையொட்டிக் காரைக்குடியில் கல்லூரி ஆசிரியர்களுக்கு ஒரு விருந்து அளித்தார். அதற்குத் தாளாளர் செட்டியாரும், அறக்கட்டளை மேலாளர் திரு. TVS மணியனும் வந்திருந்தனர். முதல்வர் வீட்டிற்கு முன்னால் போடப்பெற்றிருந்த கொட்டகையில் எல்லோரும் உட்கார்ந்திருந்தனர். அப்போது எதிர்பாராதவிதமாக மணியனை நோக்கி தாளாளர் செட்டியார், "மணியன்! ரெட்டியாரின் பதவி உயர்வு இரண்டாண்டுகளாக இழுபறியாகிவிட்டது. K.V.AL.M. இராமநாதன் செட்டியார் இச்சமயம் மலேசியாவுக்குக் குடும்பத்துடன் கப்பலில் போவதாகச் சொன்னார். அந்தச் சமயத்தில் ரெட்டியாரின் பதவி உயர்வு இழுபறியாகக் கிடக்கிறது. உடனே பதவி உயர்வுக்கு ஆணை பிறப்பித்து, அதன் நகலை AIR MAIL தபாலில் எனக்கு அனுப்ப வேண்டும். கப்பலில் செல்லும் நான் என் வீட்டில் புகும்போது பதவி உயர்வின் நகல் என் மேசையில் காத்திருக்க வேண்டும். இல்லா விட்டால் இதையே காரணம் காட்டி நான் அறக்கட்டளை உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்து விடுவேன்" என்று சொல்லிப் போனார். அதன் தொடர்ச்சியாகப் பேராசிரியர் பதவி உயர்வு பெற்றார்.

அந்தக் காலத்தில் தற்காலம் போல், தமிழில் ஆசிரியர் பயிற்சி பெறும் மாணவர்களுக்காக நிறைய நூற்கள் தமிழில்

கிடையாது. இதை மனத்தில் கொண்டு மாணவர்களுக்காகக் கல்வி உளவியல், தமிழ் பயிற்றும் முறை, அறிவியல் பயிற்றுமுறை ஆகிய நூற்களை எழுதினார். The science book of Human body என்ற நூலையும் மொழி பெயர்த்துவிட்டார். அவை தமிழில் முன்னோடியான நூற்கள் என்பது குறிப்பிடத்தக்கது. தமிழ்பயிற்றும் முறைக்கு அன்றைய தமிழகக் கல்வியமைச்சர் அவினாசிலிங்கம் அணிந்துரை எழுதியமை குறிப்பிடத்தக்கது. அவ்வாறே அக்காலத்தில் எழுதிய இல்லறநெறி, அணுவின்ஆக்கம், கவிதை நெறி என்ற நூற்களும் குறிப்பிடத்தக்கவை. இந்த மூன்று நூற்களிலும் இடம்பெற்றுள்ள அழகான படங்களை வரைந்து கொடுத்தவர் அக்கல்லூரியில் அவருடன் பணியாற்றிய ஓவிய ஆசிரியர் வீ. முனியாண்டி. இவை தவிர, பேராசிரியர் எழுதி வைத்திருந்த காலமும் கவிஞர்களும், கவிதையும் கற்பனையும், இயற்கைக்கூத்து, பண்டைத்தமிழர்களின் அறிவியல் அறிவு, திராவிட நூலின் வரலாறு, வளரும் பயிர் ஆறு ஆகிய கட்டுரை வானொலிப் பேச்சுகளாக அமைந்த திருவள்ளுவர் கண்ட நாடு, தமிழொடு ஆங்கில உறவு, சோழர் கால வாணிகம், புத்தர் காட்டிய நெறி ஆகியவற்றையும், இதழ்களில் வெளிவந்த பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' (குமரி மலரில் வெளி வந்த்து), பாவைநோன்பு (கலைமகளில் வெளிவந்தது) ஆகியவற்றையும் தொகுத்துக் 'காலமும் கவிஞர்களும்' என்ற பெயரில் நூலாக வெளியிட்டார்.

நூற்கள் தவிர தமிழ்நாடு, குமரிமலர், மணிமொழி, அமுதசுரபி, தினமணி ஆகிய இதழ்களிலும் பேராசிரியர் இலக்கியம் தொடர்பாக எழுத ஆரம்பித்தார். தினமணி ஆசிரியரான தினமணி உதவி ஆசிரியர் வேங்கடாச்சாரி கேட்டுக் கொண்டதன் பேரில் கலிங்கத்துப் பரணி குறித்து ஆறு தலைப்புகளில் கட்டுரைகள் எழுதினார். தினமணிக்கதிரில் அவை வெளிவந்த பின்னர் இன்னும் பிரபலமானார்.

இந்து மதாபிமானச் சங்கத்தில் நடந்த பல்வேறு இலக்கியக் கூட்டங்களில் சொற்பொழிவு ஆற்றியமையும் குறிக்கத்தக்கது. அத்துடன் கல்லூரியில் பணியாற்றிய பத்தாண்டு காலத்தில் நடைபெற்ற ஆண்டு விழாக்களிலும் கலந்து கொண்டுள்ளார். அதில் சிறப்பு விருந்தினர்களை அழைத்து வருவதில் இவருக்கும் பொறுப்பிருந்தது. கலைநிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்வதில் பேராசிரியர் வேங்கடாச்சாரியையும் தம்முடன் இணைத்துக் கொள்வார்.

இவ்வாறு கல்வி, எழுத்து, பேச்சு, மாணவர்களுக்கான வழிகாட்டி என்ற நிலைகளில் தீவிரமாக இயங்கினார் பேராசிரியர். பேராசிரியருக்குக் கல்லூரியில் பல மாணவர்கள் இருந்தாலும் தம்மிடம் ஆசிரியர் பயிற்சி பெற்ற இரண்டு மாணவர்களான செல்வராசன் மற்றும் சிலம்பொலி செல்லப்பன் ஆகியோரை மதிப்புடன் பார்க்கிறார். மாணவர் செல்வராசன், துறையூரில் பேராசிரியர் பணியாற்றியபோது அங்கு உயர்நிலைப்பள்ளிப் படிப்பை முடித்து, கல்லூரிப் படிப்பையும் முடித்துப் பேராசிரியரிடம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவனாகவும் ஆனார். அறிஞர் அண்ணாவின் வழியில் தீவிரமான ஈடுபாடு கொண்ட அவர் காரைக்குடிக்கு வந்தபின் கம்பன் அடிப்பொடி சா. கணேசனது தீவிர ஆதரவாளரானார். தமது திருமணத்தைக் கம்பனடிப்பொடி கணேசன் அவர்கள் நடத்தித் தரவேண்டும் என்றும் நீங்கள் அதற்குத் தலைமை தாங்க வேண்டும் என்றும் பேராசிரியரிடம் கேட்டுக் கொண்டார். அவ்வண்ணமே பேராசிரியரும் கம்பன் அடிப்பொடியும் சேர்ந்து திருச்சி சென்று அங்கிருந்து காரில் செங்காட்டுப்பட்டி ஊருக்குச் சென்றனர். திருமணம் பேராசிரியர் முன்னிலையில் நடைபெற்றது. கம்பனடிப்பொடியின் அறிவுறுத்தல்படி வைதீகமுறையில் திருமணம் நடந்தது. தமிழ்மந்திரங்களும் ஓதப்பட்டன. திருமுறையிலும் தேவாரத்திலிருந்தும் சில பாடல்கள் பாடப்பட்டன. இறுதியில் மணமக்களை வாழ்த்தும் படலம் வந்தது. பேராசிரியர் கம்பனடிப்பொடி சா. கணேசன் பற்றி பின்வருமாறு இவ்வாறு முதலில் அறிமுகப்படுத்தினார்.

“சா. கணேசன் சிறந்த தேசபக்தர். காந்தி நெறிப்படி வாழ்பவர்; கதரைத் தவிர வேறு துணிகளைப் பயன்படுத்தாதவர். இதை நீங்களே பார்க்கிறீர்கள். சிறந்த தமிழ்ப்பற்றாளர். நீங்களே இதைப் பார்க்கின்றீர்கள். சட்டை அணியாதவர். சிறந்த தமிழ்ப் பற்றாளர். கம்பனில் தனி ஈடுபாடு கொண்டவர். பல்லாண்டுகளாக நான்கு நாள் கம்பன் திருநாள் கொண்டாடி, கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்ப்பவர். அழகப்ப வள்ளலுக்குக் கல்லூரிகளை நடத்துவதில் வலக்கரமாகச் செயற்படுபவர். இவர் துணையில்லை என்றால் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்த்துறையே தோன்றியிராது. 1942 விடுதலைப் போராட்டத்தில் இவர் பங்கு அளவிடற்கரியது. தாடி வளர்த்துக் கொண்டு மாறுவேடத்தில் இருந்த இவரை அரசால் பிடிக்க முடியவில்லை. கைராசிக்காரரான இவர் நடத்தி வைத்த திருமணத்திற்குரிய மணமக்களின் வாழ்வு சிறக்கும் என்பதற்கு ஐயமில்லை”

இந்த அறிமுகத்திற்குப் பிறகு சா. கணேசனும் பேராசிரியரும் மணமக்களை வாழ்த்தி 20 நிமிடங்கள் பேசினர். கம்பனடிப்பொடி அவர்கள் திமுகவினர் கம்பராமாயணம் குறித்துப் பேசிவந்த கருத்துக்களுக்கு எதிராகக் கம்பராமாயணத்தின் புகழைப் பரப்பக் கம்பன்கழகம் நிறுவியவர். அவரது அரசியல் வாழ்வைக் குறித்துப் பின்னாட்களில் பேராசிரியர் குறிப்பிடுவது இவண் கருதத்தக்கது. “இந்த இடத்தில் ஒன்று சொல்ல வேண்டும் எனத் தோன்றுகிறது. வாழ்க்கை முழுதும் காங்கிரசுக்கே உழைத்த இந்தப் பெருமகனுக்கு தேர்தலில் போட்டியிடக் கட்சி இசைவு தரவில்லை. சுயேட்சையாக நின்று 2000 வாக்கு விததியாசத்தில் தோல்வியுற்றார். ஆனால் திமுக ஆட்சியில் இவருடைய நாட்டுப்பற்று, தமிழ்ப்பற்று, பொதுத் தொண்டு, தூய்மையான உள்ளம் இவற்றைப் பாராட்டுமுகத்தான் சட்டமன்ற மேலவை உறுப்பினர் பதவியளித்தார் அண்ணாத்துரை. தமிழ் அன்னைத் திருக்கோயில், கம்பன் மணிமண்டபம் இவற்றை எழுப்புவதற்கு ஒல்லும் வகையெல்லாம் உதவினார் அண்ணா. சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டில் இவருக்குப் பெரும் பொறுப்பு நல்கி இவரைக் கௌரவித்தார்.

இன்னொரு மாணவரான செல்லப்பன் கல்லூரித் தமிழ்ச் சங்கத்தின் செயலராக இருந்தவர். சிறந்த பேச்சாளர். பின்னாளில் தமிழ்வளர்ச்சி இயக்கத்தில் இயக்குனராக இருந்தவர். கல்லூரித் தமிழ்ச்சங்க விழாவில் வள்ளல் அழகப்பர் சிறப்புச் சொற்பொழி வாற்றியபோது செல்லப்பன் தமது நன்றியுரையால் எல்லோரது கவனத்தையும் தம் பால் ஈர்த்தார். செல்லப்பனை மிகச் சிறந்த மாணவராகப் பேராசிரியர் அங்கீகரிப்பது குறிக்கத்தக்கது. பின்னாட்களில் சிலம்பொலி செல்லப்பன் என்ற பெயரால் அறியப்பட்டவர் இவர்.

கல்லூரி ஆசிரியராகப் பணிபுரிந்த காலகட்டத்தில் 1952 முதல் 1957 வரை அமிர்தவல்லி உணவுவிடுதியில் டெபுடி வார்டனாகவும் பேராசிரியர் பணியாற்றினார். இக்காலகட்டத்தில் 40 மாணவர்களிடம் நெருங்கிப் பழகியுள்ளார். அவர்களுள் சிலர் போலிஸ் துறையிலிருந்து இராஜினாமா செய்துவிட்டுப் படிக்க வந்தவர்கள்.

கல்லூரி ஆசிரியராக இருந்தகாலத்தில் பல நகரங்களுக்குக் கல்வி தொடர்பாகப் பயணம் செய்துள்ளார். அவற்றுள் ஜபல்பூரில் 1958இல் இந்திய அரசின் கல்வித்துறை நடத்திய இந்திய மொழிகளைப் பயிற்றுவித்தல் முறை குறித்த மாநாட்டுக்குச் சென்றமை குறிப்பிடத்தக்கது.

**அன்னையின் மறைவு:** பேராசிரியர் ஜபல்பூரில் இருந்து திரும்பிய சில நாட்களில் அன்னையாரின் உடல்நிலை மிகவும் பாதிப்படைந்தது. அம்மையும் அப்பனுமாக இருந்து பேராசிரியரை வளர்த்திருந்த அந்தத் தாய், மகனின் வளர்ச்சியை 42 வயது வரை கண்டு மகிழ்ந்திருந்த தாய் 1958இல் இறந்தார். அந்நிகழ்வு பேராசிரியரை மிகவும் பாதித்தது. தாயாரின் மரணத்திற்குப் பிறகு ஆறுமாதம் கழிந்து தாயாரின் அண்ணனும் (தாய்மாமன், பேராசிரியரைச் சிறுவயதில் பாசமாக வளர்த்தவர்) இறந்துவிட்டார்.

**திருவேங்கடப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் பணி:** பல்வேறு பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட பேராசிரியர் உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் என்ற கொள்கை கொண்டவர். இதனை உணர்ந்து கொண்ட கல்லூரி முதல்வராக இருந்த அலெக்சாண்டர் ஞானமுத்து 1958இல், அடுத்து நீங்கள் கலைக் கல்லூரி அல்லது பல்கலைக்கழகத்திற்குச் செல்வது சரியாக இருக்கும் என அறிவுரை கூறினார். பேராசிரியரும் மலேசியப் பல்கலைக்கழகம், தியாகராசர் கல்லூரி எனச் சில உயர்கல்வி நிறுவனங்களில் விண்ணப்பித்து வந்தார். இந்தச் சூழலில்தான் திருப்பதியிலுள்ள திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ் விரிவுரையாளர் தேவை என்ற பத்திரிகை விளம்பரத்தைக் கண்டார் பேராசிரியர். விண்ணப்பித்த பின் சென்னையில் திருவேங்கடப் பல்கலைக்கழகத் துணைவேந்தரான கோவிந்த ராஜுலுநாயுடுவின் வீட்டில் வைத்து நேர்முகத்தேர்வு நடத்தப்பட்டது. 18 பேர்கள் கலந்துகொண்ட இந்த நேர்முகத்தேர்வில் பேராசிரியர் விரிவுரையாளர் பணிக்குத் தேர்வுசெய்யப்பட்டார். 1960 ஜுன் மாதம் பணியில் சேர்ந்து கொள்ளும்படி தந்தி கிடைத்தது. ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியும் அவரை விதிமுறைப்படி பணியிலிருந்து விடுவித்தது. பத்தாண்டு காலக் (1950-1960) காரைக்குடிக் கல்விப்பணி முடிவுற்றது.

பேராசிரியர் 1.8.1960 அன்று அதிகாலை 4 மணி அளவில் திருப்பதி இரயில் நிலையத்தை அடைந்தார். திருமலை சென்று ஏழுமலையானைத் தரிசித்த பின்பு கீழே திருப்பதிக்கு சுமார் 8 மணிக்கு வந்திறங்கினார். காலை உணவுக்குப் பின் திருவேங்கடவன் பல்கலைக்கழகம் நோக்கிப் பயணமாகி, காலை 10 மணியளவில் பல்கலைக்கழகத்தின் கல்லூரி முதல்வரைச் சந்தித்து, சான்றிதழ்களையும் சேரும் அறிக்கையையும் அளித்துத் தமது 43ஆம் வயதில் தமிழ்விரிவுரையாளராகப் பதவியேற்றார்.

திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் அவர்தான் தமிழ்த்துறையைத் தொடக்கி வைத்தவர் என்பதையும் குறிப்பிட்டாக வேண்டும். அவர் பிழைப்புக்கோ ஊதியம் பெறும் நோக்கிலோ அங்கு சேரவில்லை. பல்கலைக்கழகத்தில் எப்படியாவது தமிழ்த்துறையை எம்ஏ, எம்பில், பிஎச்டி முதலிய பட்டங்களைப் பெற ஒரு வாய்ப்புக் களனாக்க வேண்டும் என்ற உறுதியில் அதாவது தமிழ்மொழிக்கான ஓர் இடத்தை உருவாக்க வந்தார். எனவேதான் அழகப்பா கல்லூரியில் தமக்குக் கிடைத்த பேராசிரியர் சம்பளத்தை விடத் திருவேங்கடப் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளர் என்ற நிலையில் குறைவாக ஊதியம் பெற்ற நிலையிலும் அதை மனத்தளவில் ஏற்றுக் கொண்டார்.

அவர் பல்கலைக்கழகத்தில் பணியாற்றியபோது அவரது செயல்பாடுகளைத் தமிழ்த்துறையை மேம்படுத்தல், நூற்களை எழுதுதல், கருத்தரங்கங்களில் புதிய சிந்தனைகளை அளித்தல், தமிழ்ச்சங்கங்களை உருவாக்குவதல் என அடையாளப்படுத்தலாம். மொத்தம் 17 ஆண்டுகள் திருப்பதியில் பணியாற்றினார்.

திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் அவர் சேர்ந்த சமயத்தில் தமிழுக்கெனத் தனியாக வகுப்பறைகளோ ஆசிரியர்களுக்கான அறைகளோ இல்லை. வளர்ந்துவரும் பல்கலைக்கழகமாகையால் இட நெருக்கடி இருந்தது. முதலில் இந்தித்துறையில் பேராசிரியருக்கு இடம் அளிக்கப்பெற்றது. அன்றிலிருந்து இந்தி, தத்துவம், விலங்கியல், தெலுங்கு ஆகிய துறைகளில் மாறி மாறி இடம் அளிக்கப்பெற்றது. 1968இல் புதிதாக கட்டப்பெற்ற கலைக் கட்டடத்தில் ஒரு சிறிய அறை பேராசிரியருக்கு அளிக்கப்பெற்றது.

பல்கலைக்கழகத்திற்கு வெளியே ஒரு சிறிய அறையில் தங்கி வந்தார். இந்தச் சிறிய அறையில் இருந்துதான் 12 அறிவியல் கட்டுரைகள் மற்றும் நாலாயிரத் திவ்யபிரபந்தம் தொடர்பான இலக்கியக் கட்டுரைகளை எழுதினார். மாலைநேரங்களில் திருப்பதியில் தங்கியிருந்த அறைக்கு அருகிலிருந்த கோவிந்தராஜ சுவாமியின் திருக்கோயிலுக்குச் சென்று கோவிந்தனை வழிபடுவார். அவ்வாறு வழிபடுங்கால் பாரதியாரின் பாடல்களைப் (கோவிந்தன் பாட்டு 1, 2, 3) பாடி மகிழ்வார். பின்னர், உள் மண்டபத்தில் அமர்ந்திருக்குங்கால் கோயிலுக்கு வந்திருக்கும் திருத்தலப் பயணிகளிடம் உரையாடி, களிப்பார். திருப்பதியிலேயே இருப்பினும் ஏழுமலையானை அடிக்கடி சேவிக்க முடிவதில்லை.

'அவனருளால் அவன்தாள் வணங்கி' என்று மாணிக்கவாசகர் போன்று, ஏழுமலையான் அருள் கிட்டும்போது திருமலைக்குச் சென்று சேவிப்பார்.

*1966*இல் தான் காரைக்குடியிலிருந்த அவரது துணைவியாரையும் இரண்டு மகன்களையும் திருப்பதிக்கு அழைத்து வந்து குடும்பத்துடன் புதிய வாடகை வீட்டில் குடியேறினார். அதுவரையிலும் அவர்கள் காரைக்குடியில்தான் இருந்தனர். இரு மகன்களும் முறையே 6, 2ஆம் வகுப்புகளில் படித்துக் கொண்டிருந்தனர். அவர்களது கல்வி வசதிக்காக எஸ். எஸ்.எல்.சி. படிப்பு முடிவது வரையும் காரைக்குடியிலேயே இருத்தினார். அவர்களுக்கான அடிப்படை வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்துவிட்டு இடையிடையை வந்து சென்றார். தமது பிள்ளைகளின் கல்விக்காக இராமசாமி அய்யர் என்பாரை ஏற்பாடு செய்திருந்தார். திருப்பதிக்கு வந்த பிறகு அவரது மூத்தமகன் இராமலிங்கம் பி.எஸ்சி. படிப்பை முடித்தார். இரண்டாவது மகன் *8, 9, 10* ஆகிய வகுப்புகளை முடித்தார். பின்னர் இவர்களுள் மூத்தவர் எம்.எஸ்சியும் இளையவர் மருத்துவமும் படித்தனர். இளையவருக்கு பி.எஸ்.சியில் உயிரியல் பாடத்தில் தவறுதலாகக் குறைவான மதிப்பெண்கள் கிடைத்திருந்தன. பேராசிரியர் நீதிமன்றத்தில் முறையீடு செய்து சரியான மதிப்பெண்கள் கிடைக்க வழிவகை செய்தார். அதற்குப் பிறகு மருத்துவப்படிப்பில் இளையவரான இராமகிருஷ்ணனுக்கு இடம் கிடைத்தது.

அவர் கல்விப்பணியிலும் எழுத்துப் பணியிலும் தீவிரமாகச் செயல்பட்டாலும் அவரது மனத்தில் தமிழ்த்துறையை எவ்வாறு வளர்ப்பது என்ற எண்ணம் வளர்ந்து கொண்டேயிருந்தது. ஒரு நாள் தமிழகக் கல்வியமைச்சர் சி. சுப்பிரமணியம் திருப்பதிக்கு வந்தபோது அவரைத் தேவஸ்தான விருந்தினர் விடுதியில் சந்தித்துக் கோரிக்கை விடுத்தார் பேராசிரியர். சென்னை மாகாணம் தமிழ் வளர்ச்சிக்காகப் பிற மாநிலங்களுக்கு அளித்துவரும் நிதியை நம்பித்தான் தமிழ் எம்ஏ, பிஎச்டி படிப்புகள் தொடங்க இங்கு வந்துள்ளேன் என்று கூறினார். அவரும் நிதியுதவி செய்யும்படி தமிழக அரசுக்கு விண்ணப்பம் அனுப்புமாறு அறிவுறுத்தினார். ஆனால், விண்ணப்பத்தை அலுவலகம் வழியாக அனுப்பும்படி தமிழக அரசிடம் பதில் கிடைத்தது. அலுவலகம் வழியாக அனுப்புவதற்குத் துணைவேந்தரை அணுகியபோது சூழல் சரியாக அமையவில்லை.

அந்தக் காலகட்டத்தில் துணைவேந்தருக்கு எதிராகப் போராட்டங்கள் நிகழ்ந்ததால் விண்ணப்பம் அனுப்பமுடியவில்லை. அது போலவே அவரது ஆசையான பிஎச்டி படிப்பில் சேரவும் முடியவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் வடமொழித் துறையிலோ அல்லது தெலுங்குத்துறையிலோ ஒரு தமிழாசிரியராக மட்டுமே பணிபுரியலாம் என்ற கருத்துரு அப்போது முன்வைக்கப்பட்டமை அவருக்கு அதிர்ச்சியைத் தந்தது.

அடுத்தநாளே பல்கலைக்கழகத் துணைவேந்தரைச் சந்தித்த பேராசிரியர் தம்மைப் பிற துறைகளின் கீழ்ப் பணிசெய்ய அனுப்புவது சரியான முடிவல்ல என்றும் தமிழ் தனித்துறையாக உருவெடுக்கவேண்டும் என்றும் இப்போது தம்மை வடமொழித் துறையில் பிஎச்டி செய்ய அனுமதிக்க வேண்டும் என்றும் காரண காரியத்துடன் கோரிக்கைகளை முன்வைத்தார். துணைவேந்தரும் பரிசீலனை செய்வதாகப் பதில் தந்தார். இதன் தொடர்ச்சியாக 1964இல் வடமொழித்துறையில் டாக்டர் வி. வரதாச்சாரியின் கீழ் பிஎச்டி பதிவு செய்யப் பேராசிரியருக்கு வாய்ப்புக் கிடைத்தது. ஆய்வுத்தலைப்பு - நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் நம்மாழ்வாரின் தத்துவம் (Religion and Philosophy of Nalayira Dhivya Prabandham with special Reference to Nammalvar). பின்பு, திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை ஆய்வு செய்து 1200 பக்கங்களில் ஆங்கிலத்தில் ஆய்வேட்டை 1968இல் சமர்ப்பித்து முனைவர் (Ph.D. 1970) பட்டம் பெற்றார்.

பேராசிரியரின் தொடர்முயற்சியின் காரணமாகப் பல்கலைக் கழகம் தமிழ்த்துறைக்கு மானியம் தேவை என்ற கோரிக்கையைத் தமிழ்நாடு அரசிற்கு முறைப்படி அனுப்பிவைத்தது. ஆனால், உடனடியாக நிதியுதவி கிடைக்கவில்லை. எனவே பேராசிரியரே நேரடியாகச் சென்னை வந்து அறிஞர் அண்ணாவையும் கல்வியமைச்சர் நாவலர் நெடுஞ்செழியனையும் சந்திக்க முயன்றார். நெடுஞ்செழியனிடம் திருப்பதியில் பல்கலைக்கழக மட்டத்திலாவது தமிழ் நிலைபெற வேண்டும் என்ற தம் நிலைப்பாட்டை முன்வைத்தார். பேராசிரியரின் விடா முயற்சியின் காரணமாக 1969ஆம் ஆண்டு தமிழக அரசின் மானியம் திருவேங்கடப் பல்கலைக் கழகத்திற்குக் கிடைத்தது. இக்கால கட்டத்தில் டாக்டர். ஜெகன்னாத ரெட்டி துணைவேந்தராக இருந்தார். தமிழ்த்துறையைத் தொடங்க ஆவன செய்ததன் விளைவாக 1970-71 கல்வியாண்டில் தமிழ் எம்.ஏ. வகுப்புத் தொடங்கியது. தொடக்கத்தில் ஆறு மாணவர்கள் எம்.ஏ. தமிழ் பட்டப்படிப்பில் சேர்ந்தனர்.

தமிழ்த்துறையின் பேராசிரியர் பதவிக்கு ந. சுப்புரெட்டியாருக்கு அழைப்பு விடுவிக்கப்பட வில்லை. பிற பல்கலைக்கழகங்களிலிருந்து விண்ணப்பங்கள் வந்திருந்தன. ஆனால் அவர்களை விட பேராசிரியரான ந. சுப்புரெட்டியாருக்கே தகுதி அதிகம். எனவே துணைவேந்தரிடம் நேரடியாகவே சந்தித்துத் தம் தரப்பு நியாயங்களை முன்வைத்தார். அதனைப் பரிசீலித்த துணைவேந்தர் பேராசிரியருக்கும் இண்டர்வியூக் கடிதம் அனுப்ப வழிவகை செய்தார். டாக்டர் மு. வரதராசனார் மற்றும் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் ஆகியோர் இண்டர்வியூ செய்தனர். அதில் துணைப்பேராசிரியர் பணி தாமோதரன் என்பார்க்குக் கிடைத்தது, அவருக்கு டாக்டர் பட்டம் இல்லாதபோதிலும் கூட! பிறகு துணைப்பேராசிரியர் பதவிபெற்று *1976*இல் பாடத்திட்டக்குழுவின் தலைவரானார். எம்ஏ தொடங்கப்பட்டபோது சில மாணவர்களே சேர்ந்து பயின்றாலும் கூட, துறையளவில் கருத்தரங்கங்கள் நிகழ்த்தியபோது பல்வேறு துறைகளிலிருந்தும் ஆசிரியர்கள் கலந்து கொண்டு பயன்பெற்றுள்ளனர். கல்விசார் துறைகள் சிறந்த கட்டமைப்புடன் இருக்க வேண்டுமென்றால் நூல்கள் அதிகம் தேவை என்பதை அறிந்தவர் பேராசிரியர். தமிழ்த்துறையை மேம்படுத்தும் முயற்சியில் சென்னை வாழ் தமிழ் ஆர்வலரான துரைசாமி அய்யரின் நூலகத்திற்கு நேராகச் சென்றார். அவரது மகன்களின் மூலம் *200* நூல்களுக்கு மேல் பெற்று அவற்றை லாரி மூலம் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் கொண்டு சேர்த்தார்.

திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் எம்.ஏ. தமிழில் முதல் மதிப்பெண் பெறும் மாணவருக்குத் திருவள்ளுவர் பெயரில் தங்கப்பதக்கம் அளிக்கும் திட்டத்தைச் செயல்படுத்தினார்.

ஒரு பேராசிரியர் என்ற நிலையில் அவர் ஆய்வுநோக்கில் தரமான நூல்கள் எழுதினார். பல்கலைக்கழகத்தில் சேர்ந்து சில ஆண்டுகளில் எழுதிய நூல்களுள் கல்வி உளவியல் *(1961)*, காதல் ஓவியம், கவிதை அனுபவம், அறிவுக்குவிருந்து *(1962)*, தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை *(1964)*, முத்தொள்ளாயிர விளக்கம் *(1965)* ஆகியன குறிப்பிடத்தக்கவை. வழக்கப்படி ஒவ்வொரு நூலையும் அவர் மதித்து வந்த தமிழறிஞர் பெருமக்களுக்குக் கவிதை வடிவில் படையலிட்டார்.

தமிழிலக்கியம் போலவே நவீன அறிவியல் குறித்தும் நூல்கள் எழுதினார். இளைஞர் வானொலி, அதிசய மின்னணு, இல்லற நெறி, இராக்கெட், நமது உடல், அம்புலிப்பயணம் ஆகிய நூற்கள்

அவற்றுள் முக்கியமானவை. அந்தக் காலகட்டத்தில் அதாவது 1960 களில் பொழுதுபோக்கிற்கும் செய்திகளுக்கும் வானொலி ஜனரஞ்சகமான கருவியாக இருந்தது. பேராசிரியர் வானொலியின் அமைப்புக் குறித்து எல்லோரும் அறிந்து கொள்ளும் வண்ணம் எளிய தமிழில் இளைஞர் வானொலி என்ற நூலை 1962இல் எழுதினார். இம்மாதிரியான அறிவியல் நூல்களைச் சிறார்களுக்காக எழுதுவது சவால் மிகுந்ததாகும். அவரது இராக்கெட் நூல் தமிழக அரசினால் சிறந்த நூலாகத் தேர்வுசெய்யப்பட்டு 1000 ரூபாய் பரிசளிக்கப்பட்டது. அவரது அணுக்கரு பௌதீகம் முக்கியமான மொழிபெயர்ப்பு நூலாகும். Nuclear Physics என்ற மூலநூலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட இந்நூலுக்கும் சிறந்த மொழிபெயர்ப்புக்கான பரிசு கிடைத்தது. இது போன்ற பரிசளிப்புகள் பேராசிரியரின் அறிவியல் நூல்களுக்குத் தரப்பட்ட அங்கீகாரமாகும். Source book for science teaching என்ற இன்னொரு நூலை அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல் என்ற தலைப்பில் தமிழுக்கு மொழி பெயர்த்தமையும் குறிக்கத்தக்கது. 1969இல் இந்நூலை நேஷனல் புக் டிரஸ்ட் வெளியிட்டது.

தமிழ்ச்சங்கங்கள் தொடங்குவதன் மூலம் ஆந்திர மண்ணில் தமிழ்க்கல்வியைத் தொடர்ந்து நிலைநிறுத்த முடியும் என்ற நோக்கில் தமிழ்ச்சங்கங்களை நிறுவினார் பேராசிரியர்.

பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய காலத்தில் பல்வேறு கருத்தரங்கங்களில் கலந்துகொண்டு சிறப்பான ஆய்வுக்கட்டுரைகள் வழங்கியுள்ளார். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை 1963இல் சென்னையில் நடைபெற்ற மொழிபெயர்ப்புக் கருத்தரங்கம், 1965இல் டெல்லியில் நடந்த உலகக் கீழ்த்திசை மாநாட்டுக் கருத்தரங்கம் ஆகியன. 1967இல் வாரணாசிப் பல்கலைக்கழகத்தில் நடந்த கருத்தரங்கம். வாரணாசியில் கலந்துகொண்ட போது தமது துணைவியாரையும் அழைத்துச் சென்றார். மனைவியுடன் கயை, அயோத்தி, காசி போன்ற இடங்களுக்கும் சென்றார். காசியில் தமிழகத்தைச் சேர்ந்த நகரத்தார் சாதியினர் நடத்தி வந்த சத்திரத்தில் தங்கினார்.

1974இல் திருக்குறள் தொடர்பான கருத்தரங்கைத் திருவேங்கடவன் பல்கலையில் நிகழ்த்திக்காட்டிக் கட்டுரைகளை நூல்வடிவில் வெளிக்கொணர்ந்தார். இது அவரது 27ஆவது நூலாகும். 1975இல் சிலப்பதிகாரம் குறித்து தேசியக் கருத்தரங்கத்தை ஆங்கிலமொழியில் நடத்திக் காட்டினார். 1976இல்

அது நூலாக வெளியிடப்பட்டது. தமிழறிஞர் மு. வரதராசன் 1974இல் இறந்த பின் அவரது படைப்புகள் குறித்த சிறப்பு கருத்தரங்கத்தை 1976இல் மிகச் சிறப்பாக நடத்திக் காட்டினார். இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்து பல அறிஞர்கள் இதில் பங்கெடுத்தமை குறிக்கத்தக்கது. 1974ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழக அழைப்பின் பேரில் திருவேங்கடம் குறித்து சொற்பொழிவுகள் ஆற்றினார். அவற்றைத் தொகுத்து நூலாகவும் வெளியிட்டார்.

திருப்பதியில் பணியாற்றியபோது வடநாட்டுப் பயணம் சென்றிருக்கிறார். அது போலவே 1969இல் கேரளத்தில் உள்ள கோவில்களுக்கும், தொண்டை நாட்டுத் திருக்கோயில்களுக்கும் பாண்டி நாட்டுத் திருத்தலங்களுக்கும் நடு நாட்டுத் திருக்கோவில்களுக்கும் திருத்தலப்பயணம் மேற்கொண்டார். கேரளாவில் மேற்கொண்ட திருத்தலப் பயணத்தை அடிப்படையாகக் கொண்டு மலைநாட்டுத் திருப்பதிகள் என்ற நூலை எழுதினார் (1971). அது போலவே தொண்டைநாட்டுத் திருப்பதிகள் என்ற நூலையும் எழுதினார். பாண்டிநாட்டுத் திருத்தலங்கள் என்ற நூலை ஓய்வுபெற்ற பின் எழுதினார். திருத்தலப் பயணங்களைத் தமது வாழ்க்கைநூலில் விபரமாக எழுதியிருப்பது வாசகர்களுக்கு நிறையத் தகவல்களைத் தருவதாக உள்ளது.

**ஓய்வுக்குப் பின் வாழ்க்கை:** இவ்வாறு சிறப்பாகப் பணிபுரிந்த பேராசிரியர் 1977இல் ஓய்வுபெற்றார். ஓய்விற்குப் பின்னர் பேராசிரியர், 14.1.1978-அன்று தம் சென்னை வாழ்க்கையைத் தொடங்கினார். வயது அவருக்கு ஒரு பொருட்டாகவே இருக்கவில்லை. அவரது கல்வி மற்றும் தமிழ்ப்பணி 29 ஆண்டுகளுக்கும் மேலாகத் தீவிரமாகத் தொடர்ந்தன. சென்னையில் தமிழ் அகாதெமியின் தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரியராக 1978இலிருந்து போரசிரியர் 18 மாதங்கள் பணியாற்றினார். அதேவேளை சென்னைப் பல்கலைக்கழகத்திலுள்ள தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தின் மதிப்பியல் இயக்குநராக ஆறு ஆண்டுகள் (1996 - 2002) பணியாற்றினார். சென்னையிலும் அதனைச் சுற்றியுள்ள மாவட்டங்களிலும் தமிழ் இலக்கியம் மற்றும் மக்கள்நலத் தலைப்புகளில் பல உரையரங்கங்களை நடத்தினார்.

திருவேங்கடவன் பல்கலைக்கழத்தின் தமிழ்த்துறையின் வெள்ளிவிழா ஆண்டில் (1985) வருகை தருபேராசிரியராகப் பணியாற்றினார். மேலும் பல்வேறு பல்கலைக் கழகங்களில்: தில்லி

பல்கலைக்கழகம், கர்நாடகா பல்கலைக்கழகம், கேரளப் பல்கலைக் கழகம், ஆந்திரப் பல்கலைக்கழகம், மைசூர் பல்கலைக்கழகம், பெங்களூர்ப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், உஸ்மானியப் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திராவிடப் பல்கலைக்கழகம், இராஷ்ட்ரீய சமஸ்கிருத வித்யாபீடம், திருப்பதி, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஆகியவற்றில் பல்வேறு குழுக்களில் தொண்டாற்றினார். சாகித்திய அகாதெமியின் தென்மண்டல உறுப்பினராக பணிபுரிந்தார். 1989-ல் சென்னைப் பல்கலைக்கழகம் பேராசிரியரைத் தமிழ்த்துறையில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியராக நியமித்தது. மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் கல்வி அலுவல் குழுவின் வாழ்நாள் உறுப்பினராக நியமித்தது.

**அறக்கட்டளை நிறுவல்:** தாம் முன்னெடுத்த தமிழ்ப் பணிகள் எதிர்காலத்திலும் தொடர்ந்து நடைபெறப் பேராசிரியர் அறக்கட்டளைகளையும் நிறுவினார். 1984இல் திருவேங்கடவன் பல்கலைக்கழத்தின் முதல் அறக்கட்டளை தமிழ்த்துறையில் நிறுவப் பெற்றது. அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கான 80 தலைப்புகளும் உறுதிசெய்யப்பெற்றன. பின்னர் அறக்கட்டளைகள் சென்னை, மதுரை காமராசர், அழகப்பா, அன்னை தெரசா, மனோன்மணியம் சுந்தரனார், பாரதிதாசன் ஆகிய பல்கலைக் கழகங்களிலும் நிறுவப்பெற்றன. சென்னை கம்பன் கழகத்திலும் ஓர் அறக்கட்டளை நிறுவப்பெற்றது. தம் சொந்தச் சேமிப்பு, தமக்குவந்த விருதுத்தொகை ஆகியவற்றைப் பேராசிரியர் அறக்கட்டளைகள் நிறுவுவதற்குப் பயன்படுத்தியமையால் அவரது தமிழ்ப்பற்றை உணரமுடிகிறது.

**வெளிநாட்டுப் பயணம்:** பேராசிரியர் 2002இல் அமெரிக்காவிற்கும் 2004இல் இலங்கைக்கும் பயணம் செய்து அதன் அடிப்படையில் எனது அமெரிக்கப்பயணம், என் இலங்கைப் பயணம் என்ற நூற்களை எழுதினார். ஓய்விற்குப் பிறகு, அதாவது 1978இலிருந்து 2006 வரை சுமார் 100 நூற்களை எழுதியுள்ளார்.

அவ்வாறே, ஓய்வுக்குப் பிறகு தம் இரு பேத்திகளின் திருமணங்களை 2002 மற்றும் 2006 ஆண்டுகளில் கண்டு களித்தார்.

இவ்வாறு கல்வியுலகில் சிறப்புடன் செயல்பட்ட பேராசிரியர் 1.5.2006-அன்று தம் 90ஆவது வயதில் இயற்கை எய்தினார். 2008இல் தமிழ்நாடு அரசு பேராசிரியரின் நூல்களை நாட்டுடைமை

ஆக்கியதோடு அவற்றை மின்னூலாக்கியுள்ளது. நாட்டுடைமை யாக்கியதற்காக அவரது துணைவியாருக்கு செப்டம்பர் 2008இல் தமிழக அரசு ஐந்து இலட்சம் ரூபாய் வழங்கியது.

பேராசிரியரின் மூத்த புதல்வர் இராமலிங்கம் அவர்கள் பேராசிரியர் பெயரில் ந. சுப்புரெட்டியார் கல்வி அறக்கட்டளை நிறுவியுள்ளதோடு தமிழுக்கும் தமிழ்க்கல்விக்கும் சேவையாற்றி வருகிறார். பல கல்விநிறுவனங்களில் தமிழ் ஆய்வியல் தொடர்பான கருத்தரங்குகளையும் நிகழ்த்தி வருவதோடு தமிழ் ஆய்விற்காகக் கல்வி உதவித்தொகையையும் தம் அறக்கட்டளை வழியாகச் செய்துவருகிறார். பேராசிரியரின் பூதவுடல் மறைந்தாலும் அவரது தமிழ்த்தொண்டு தொடர்ந்து கொண்டிருக்கிறது.

## 2. பேராசிரியரின் சிறப்புகள்

ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு சமூகத்திலும் அவ்வக் காலகட்டத்தில் அறிஞர்கள் தோன்றி அந்த நாடு அல்லது சமூகம் மேம்படத் தம் கருத்துக்கள் அல்லது கண்டுபிடிப்புகளைத் தம் துறை சார்ந்து முன்வைக்கின்றனர். அத்தகைய அறிஞர்களுள் ஒருவராகப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ்கூறு நல்லுலகில் இடம்பெறுகிறார். முன் அத்தியாயத்தில் கூறப்பட்ட அவரது வாழ்க்கை வரலாறு மூலம் அவர் தமிழறிஞர், கல்வியாளர், ஆராய்ச்சியாளர், பேராசிரியர், வரலாற்றாசிரியர், மொழி பெயர்ப்பாளர், இலக்கியத் திறனாய்வாளர், எழுத்தாளர் எனப் பன்முகம் கொண்டவர் என்பது புலனாகிறது. பல துறைகள் குறித்துத் தொடர்ச்சியாக அவர் ஆழமாக எழுதியமை அவருக்குப் பல்துறை வித்தகர் என்ற அடையாளத்தைத் தந்துள்ளது. அந்த வகையில் அவரது சிறப்புகள் எவை என்பதை இனிப் பார்க்கலாம்.

**1. பல்துறை வித்தகர்:** பேராசிரியரின் முதன்மையான அடையாளமே அவர் பல்துறைகளிலும் வித்தகர் என்பதுதான். அவர் எழுதிய நூற்கள் வழி அதைப் புரிந்து கொள்ளவியலும். இந்த இயலில் அவரது தனிச் சிறப்புகளை விளக்கலாம்.

**2. தமிழ் இலக்கியத்துடன் பின்னிப் பிணைந்த வாழ்க்கை:** பேராசிரியர் அவர்கள் தமிழ்மொழியில் ஆழ்ந்த புலமை கொண்டிருந்ததுடன் தமிழிலக்கியங்களில் பேசப்படும் சிறந்த கருத்துகளை நடைமுறை வாழ்க்கையிலும் பயன்படுத்தியுள்ளார். வாழ்க்கையில் பல்வேறு நிகழ்வுகளை எதிர்கொண்ட போதெல்லாம் அவை தொடர்பான தமிழிலக்கியக் கருத்துக்களை இணைத்துப் பார்ப்பது அவர் வழக்கமாயிருந்துள்ளது. அவரது வாழ்க்கை வரலாற்று நூலில் இது வெளிப்படுகிறது. இலக்கியங்களில் ஆழங்கால் பட்டிருந்தால் மட்டுமே இது சாத்தியமாகும். இதன் மூலம் தமிழ் இலக்கியத்தையும் அவரையும் பிரிக்கமுடியாது என்பது உறுதியாகிறது. சில எடுத்துக்காட்டுக்கள் மூலம் இதனை உறுதி செய்யலாம்.

i) **பிறப்பு:** *தமது பிறப்பைப் பற்றிக் கூறும் போது என் பிரார்த்த கருமத்தால் நான் பெரகம்பியில் என் அன்னையார் பிறந்த இல்லத்தில் 27.8.1916இல் பிறந்தேன்.*

கற்றார் பற்றறுக்கும்
பிறவிப் பெருங்கடலே
பற்றா வந்து அடியேன் பிறந்தேன்

என்ற திருமங்கையாழ்வாரின் திருமொழியை அப்போது சிந்தித்து அறிய அகவை இல்லையாயினும் இப்போது (71ஆம் அகவையில்) நினைந்து அசைபோட முடிகின்றது. மூன்றாண்டு பருவத்திலேயே தந்தையை இழந்தும் வறுமையால் வாடியும் நல்வழி காட்டத்தக்கதார் இல்லாததால் ஏக்கமுற்றும், அரக்க மனம் படைத்த சிலரால் துன்பமுற்று இளமைக்காலம் கழிந்தாலும் 'திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை' என்ற முதுமொழிப்படி இறைவன் இருள் சூழ்ந்த வாழ்விலும் ஒளிக்கீற்றைக் காட்டி உய்வித்தமையால் கல்லூரி வாழ்வையும் தாண்ட முடிந்தது. இந்த என் வாழ்க்கையைப் பின்னோக்கிக் காணும் போது,

வெம்மாலைச் சிறுவரோடும்
விளையாடித் திரியும் மிகச் சிறிய பருவத்தே
வியந்து நினை நமது
பெம்மான் என்று அடிகுறித்துப்
பாடுவகை புரிந்த
பெருமானே! நான் செய்த
பெருந்தெய்வ மெய்ப்பயனே
செம்மாந்த சிறியேனை
சிறு நெறியில் சிறிதும்
செலுத்தாமல் பெருநெறியில்
செலுத்திய நல்துணையே
அம்மானே என் ஆவிக்
கான பெரும்பொருளே

என்ற வள்ளல் பெருமானின் வாக்கு நினைவில் எழுகின்றது.

ii) **மனப்பாடம்:** சிறுவயதில் பேராசிரியர் நிறையச் செய்யுள்களை மனப்பாடம் செய்துள்ளார். அந்த செய்யுள்களைச் சொல்லும்படி பெரியவர்கள் கூறுவது வழக்கம். அவரும் அவற்றைச் சொல்லும் போதெல்லாம் பெரியவர்கள் கேட்டு மகிழ்ந்திருக்கின்றனர். அத்தகையப் பாடல்களுள் ஒன்று அவரது மனத்தில் நிலையாகப் பதிந்துள்ள ஒரு விவேகசிந்தாமணிப் பாடல்.

ஆவீன மழை பொழிய இல்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோவ அடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண்டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ள
கோவேந்தர் உழுதுண்ட கடமைகேட்கக்
குருக்கள் வந்து தட்சணைக்குக் குறுக்கே நிற்கப்
பாவாணர் கவி பாடிப் பரிசு கேட்கப்
பாவிமகன் படுந்துயரம் பார்க்கொணாதே.

iii) **கல்லூரி வாழ்வில்:** திருச்சியில் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது சமூக வாழ்க்கையா அல்லது பக்தி வாழ்க்கையா என்ற கேள்வி எழுந்த போது அதைத் தாயுமானவர் பாடல்களுடன் இணைத்துப் பார்க்கிறார். அந்த இளவயதில் சக்தி என்னை ஈர்க்கவில்லை என்று குறிப்பிடும் அவர்,

நெஞ்சகமே கோவில் நினைவே சுகந்தம் அன்பே
மஞ்சன நீர் பூசனை கொள்ள வாராய் பராபரமே

அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கி விட்டு விட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே

என்ற பாடல்கள் அவரை வெகுவாக ஈர்த்துள்ளன என்பதோடு அவற்றைத் தாம் தங்கியிருந்த அறையில் மேசையருகே எழுதியும் வைத்துள்ளார்.

iv. **உறவினர் பாதிக்கப்பட்ட போது:** பேராசிரியரின் மைத்துனர் எவ்வாறு சதிவலையால் பாதிக்கப்பட்டார் என்பதைப் பாரதியார் பாடலுடன் இணைத்துப் பார்க்கிறார்.

நரி வகுத்த வலையினிலே தெரிந்து சிங்கம்
நழுவி வீழும்; சிற்றெறும்பால் யானை சாகும்;
வரிவகுத்த உடற் புலியைப் புழுவுங் கொல்லும்;
வருங்காலம் உணர்வோரும் மயங்கி நிற்பார்
கிரிவகுத்த ஓடையிலே மிதந்து செல்லும்
கீழ் மேலாம் மேல்கீழாம் கிழக்கு மேற்காம்
புரிவகுத்த முந்நூலார் புலையர் தம்மைப்
போற்றிடுவர் விதிவகுத்த போழ்தின் அன்றே.

இதுவரை கூறப்பட்டவை பேராசிரியர் வாழ்க்கை தமிழ்ச்சிந்தனைகளோடு இணைந்தேயிருந்தது என்பதைக் காட்டும்.

**3. பக்திநெறியையும் பகுத்தறிவு நெறியையும் ஒரு சேர ஏற்றுக்கொண்டமை:** பக்திநெறியும் பகுத்தறிவு நெறியும் ஒன்றுக்கொன்று மாறானவை. ஆராய்ந்து பார்த்தால் இரண்டுமே மனிதாபிமான உணர்வினை அடிப்படையாகக் கொண்டு இயங்குபவை. வரலாறு காட்டும் உண்மை என்னவென்றால் பக்தி நெறியாளர்கள் கடவுள் மறுப்பாளர்களை எப்போதுமே எதிர்த்து வந்திருக்கிறார்கள். அதுபோலவே கடவுள் மறுப்பார்கள் பக்தி நெறியாளர்களைக் கண்டித்தே வந்திருக்கிறார்கள். பக்திநெறியையும் பகுத்தறிவு வாதத்தையும் காரண காரிய அடிப்படை மற்றும் மனிதாபிமானக் கொள்கை அடிப்படையில் ஒரு சேரப் புரிந்து கொண்டவர்கள் எண்ணிக்கை சதவிகித அளவில் குறைவுதான். பேராசிரியரைப் பொறுத்தவரை பக்திநெறியும் கடவுள் மறுப்புக் கொள்கையும் மனிதாபிமானத்தையே மையமாகக் கொண்டுள்ளன என்பதைப் புரிந்து கொண்டு இரண்டையுமே ஏற்றுக்கொண்டவர். திருமால் மீது ஈடுபாடுடையவர். குழந்தைப் பேற்றுக்காக ஆன்மீகத் தலங்களுக்குச் சென்றவர்.

பேராசிரியர் மதத்தின் பெயரால் கடவுளின் பெயரால் மக்களை மத அமைப்பு சுரண்டுகிறது என்பதை நன்கறிந்திருந்தார். எனவே மூட பக்தி, மூடநம்பிக்கைகளுக்கு எதிராக இருந்ததோடு மூட நம்பிக்கைகளுக்கு எதிராகப் போராடும் பகுத்தறிவு வாதிகள் அதாவது கடவுள் மறுப்பாளர்களையும் ஏற்கிறார். அவ்வகையில் பகுத்தறிவு வாதியான பெரியாரை மிகவும் போற்றுகிறார். தந்தை பெரியாரின் பொதுக்கூட்டங்களில் கலந்து கொள்வது மட்டுமல்ல தந்தை பெரியாரின் சிந்தனைகள் என்ற நூலையும் அவர் எழுதியுள்ளமை குறிப்பிடத்தக்கது. அதேவேளை ஆன்மீகப் பெருந்தகை வள்ளலார் பற்றியும் கோவில்கள் பற்றியும் நூல்கள் எழுதியுள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

தந்தை பெரியாரது சிந்தனைகளைக் கடவுள், சமயம் பற்றிய சிந்தனைகள், சமூகம் பற்றிய சிந்தனைகள், மொழிபற்றிய சிந்தனைகள் என மூன்று விதமாகப் பிரித்துக் காண்கிறார் பேராசிரியர்.

இந்து மதம் என்பது ஒருவரை ஒருவர் ஏய்க்கவே பயன்படுத்தப்படுகின்றது அல்லாமல் தொல்லையில்லாதிருக்க நிம்மதியான வாழ்வு வாழ உதவுவதாக இல்லை. போலி வாழ்க்கைக்காரருக்குத் திரையாகவே மதமும் பக்தியும் உதவுகின்றன என்பன போன்ற பெரியாரின் கருத்துக்களை

உறுதியாகப் பேராசிரியர் எடுத்துரைப்பது கவனிக்கத்தக்கது. இதன் மூலம் பேராசிரியர் மதவாதியல்ல என்பது உறுதியாகிறது.

மக்கள் முன்னேற்றத்தில் மதம் வந்து தடை செய்தால் அஃது எந்த மதமாயிருந்தாலும் ஒழிந்துதான் ஆகவேண்டும். உன்னைப் பறையனாய்ப் படைத்தார். அவனைப் பார்ப்பனனாய்ப் படைத்தார். என்னைச் சூத்திரனாய்ப் படைத்தார் என்று கடவுள் மீது பழி போட்டுக் கடவுள் பெயரால் நடக்கும் கொடுமைகள் ஒழிக்கப் படவேண்டும் என்றால் கடவுள் ஒழிக்கப்பட வேண்டும் என்ற பெரியாரின் கருத்துக்களை உறுதியாகப் பதிவு செய்துள்ளார்.

**4. அன்னை மீதான உயர் மதிப்பு:** எல்லா அறிஞர்களையும் போலவே பேராசிரியரும் தம் அன்னை மீது உயர்மதிப்புக் கொண்டிருந்தார். அதனைத் தனது கல்வியுலகத்திலும் வெளிப்படுத்துகிறார். அவர் 1957இல் எழுதிய 'தமிழ் பயிற்றும் முறை' எனும் நூலைத் தம் அன்னையாருக்குக் காணிக்கையாக்கியுள்ளார்.

நற்றவத் தாயே! வாழி!பல் நலனுறப் ;
பெற்றெனை வளர்த்துக்
கற்றவனாக்கிப் பேணினை! உலகிற் காணுறு
பொருளெலாம் கொணர்ந்துன்
சிற்றடிப் புறத்தில் வைப்பினும் அவைநின்
சீரருட் கொப்பென லாமோ?
மற்றிதை யுணர்வேன்! எனினுமிந் நூல்நின்
மலர்ப்பதத் துரிமைசெய் தனெனே.

எனப் பாமாலையாக அதனைப் பதிவு செய்துள்ளார்.

தமது வாழ்க்கை பற்றிப் பேசும்போது பல இடங்களிலும் அன்னை எதிர்கொண்ட துயரங்கள் உட்படப் பல்வேறு செய்திகளைப் பதிவுசெய்துள்ளார். அது அவரது தாய்ப்பாசத்தை மட்டுமல்ல அவர் மீது கொண்டிருந்த மதிப்பையும் வெளிப்படுத்துகிறது.

**5. நூற்கள் நாட்டுடைமையாக்கப்பட்ட சிறப்பு:** பேராசிரியரது நூற்கள் நாட்டுடைமையாக்கப்பட்டிருப்பது தமிழக அரசினால் அவருக்குத் தரப்பட்டுள்ள உன்னதமான அங்கீகாரமாகும். மக்களுக்குச் சிந்தனையூட்டும் நூற்களே பொதுவாகத் தமிழக அரசால் அங்கீகரிக்கப்படுகின்றன. அவரது தனித்துவம் பெற்ற

அறிவுசார் நூல்கள் இந்த நூலின் பின்னிணைப்புப் பகுதியில் சுட்டப்பட்டுள்ளன.

**6. பேராசிரியர் பெற்ற விருதுகள்:** பேராசிரியர் அவர்களது கல்விசேவையையும் பிற சேவைகளையும் அரசும் பிற நிறுவனங்களும் அங்கீகரித்து அவருக்கு விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளன. தமிழ்நாடு அரசின் தமிழ்வளர்ச்சி இயக்ககம் திரு.வி.க. விருது (1985) அளித்துள்ளது. தமிழ்நாடு அரசு திருக்குறள் விருதையும் அளித்துள்ளது. இவ்விருது திருக்குறளுக்கும் அதன் தத்துவத்திற்கும் சிறப்பான பங்களிப்பைத் தந்தோருக்கு அளிக்கப்படுவதாகும். தமிழக அரசின் டாக்டர் இராதாகிருஷ்ணன் விருதும் பேராசிரியருக்கு வழங்கப்பட்டுள்ளது. இது சிறந்த நல்லாசிரியருக்கு வழங்கப்படுவதாகும். தமிழக அரசின் இயல் இசை நாடக மன்றத்தால் வழங்கப்படும் கலைமாமணி விருதையும் (1999) பேராசிரியர் பெற்றுள்ளார். இது கலைத் துறையில் சிறந்து விளங்குவோருக்கு அளிக்கப்படுவது. இதில் கவனிக்கத்தக்கது என்னவென்றால் தமிழ்சேவைக்காகத் தமிழக அரசு அளித்துவரும் அனைத்து விருதுகளையும் பேராசிரியர் பெற்றிருக்கிறார் என்பதுதான்.

இவை தவிர அவரது கல்வி மற்றும் தமிழ்ப் பணியினைப் பாராட்டும் பொருட்டும் பல விருதுகளும் பட்டங்களும் வழங்கப் பெற்றன. அவற்றில் சில இங்கு குறிப்பிடப்பெறுகின்றன. இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அறக்கட்டளை வழங்கிய இராஜா சர் முத்தையா செட்டியார் விருது (1994), சென்னை கம்பன் கழகம் வழங்கிய இராதாகிருஷ்ணன் விருது (1994), சென்னை ஆழ்வார் மையம் வழங்கிய இராமாநுஜர் விருது (1996), மதுரை காமராசர் பல்கலைக்கழகம் வழங்கிய முதுமுனைவர் மற்றும் தினத்தந்தி அறக்கட்டளை வழங்கிய சி.பா. ஆதித்தனார் மூத்த தமிழறிஞர் விருது (2001), மதுரை காமராசர் பல்கலைக் கழகம் வழங்கிய தமிழ்ப் பேரவைச் செம்மல் (1993) விருது சென்னையிலுள்ள உலகத் திருக்குறள் மையம் வழங்கிய திருக்குறள் உரைச் செம்மல் (1992) மற்றும் பண்ருட்டியில் அமைந்துள்ள ஸ்ரீவைணவ சபை வழங்கிய ஸ்ரீ சடகோபன் பொன்னடி (1993) விருதுகள்.

**7. நூற்களைப் பெரியோர்களுக்கு அன்புப் படையலாக்குதல்:** தாம் எழுதிய சிறப்புமிகு நூற்களைத் தம் உள்ளம் கவர்ந்த பெரியோர்களுக்கு அதுவும் சமூகத்தில் பொதுநலன் அடிப்படையில் செயல்பட்ட தகுதி வாய்ந்த பெரியோர்களுக்கு அன்புப்

படையலாக்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் பேராசிரியர் மரபார்ந்த பாமாலை வடிவில்தான் படையல் செய்வார். அவ்வாறு பாடப்பட்டோர் முன்னாள் தமிழக முதலமைச்சர் காமராசர், இராஜாஜி, கல்வியாளர் நெ.து. சுந்தரவடிவேலு, பேராசிரியரது ஆசிரியப் பெருமக்கள், அவரது அன்னையார், குன்றக்குடி அடிகளார், அவரது ஆசிரியர்கள் என ஒரு பெரும் பட்டியலே நீளும். எடுத்துக்காட்டாக, *1963*இல் அதிசய மின்னணு எனும் அறிவியல் வெளியிடப் பெற்றது. இதை அப்போது கல்வி உலகில் ஜாம்பவான்போல் திகழ்ந்த நெ.து. சுந்தரவடிவேல் அவர்கட்கு அன்புப் படையலாக்கினார். காரைக்குடியில் எழுதத்தொடங்கி முற்றுப் பெறாத தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை திருப்பதியில் முற்றுப்பெற்று *1963*இல் வெளியிடப்பெற்றது. இந்நூல் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் எஸ். கோவிந்த ராஜுலு நாயுடு அவர்கட்கு அன்புப்படையலாக்கப் பெற்றது.

அவரது கவிதைப் படையல் மரபுசார் செய்யுளில் சிறப்பாக இருக்கும். *1965*இல் முத்தொள்ளாயிர விளக்கம் திருவேங்கடவன் பல்கலைக் கழக நிதியுதவியுடன் வெளியிடப்பெற்றது. தமிழ் இலக்கிய வானில் துருவமீன் போலத்திகழும் டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் அவர்கட்கு,

முதலைவாய் அகப்பட்டுக் களிறு கூவ
முன்வந்து புரிந்திட்ட திருமால் போலச்
சிதலைவாய் அகப்பட்டுக் கலங்கி மாழ்கிச்
சீர்குன்றி அகம்புறமும் நைந்து நொந்து
தலைநோய் உறுதமிழைக் காக்க வந்த
வீறுடையான் சீர்சாமி நாதன் தெய்வப்
பதமலரில் இந்நூலை அன்பி னோடு
படைக்கின்றேன் பணிகின்றேன் வாழ்த்துகின்றேன்

என்ற மரபுசார் பாடல்மூலம் பேராசிரியர் அன்புப் படையலாக்குகின்றார்.

**8. உதவும் கரங்கள்:** பலருக்கும் வாழ்க்கையில் உதவி செய்திருக்கிறார் பேராசிரியர். குறிப்பாக, துறையூரில் அவருடன் சேர்ந்து பள்ளியில் படித்திருந்த இளமைக்கால நண்பனான கோபாலகிருஷ்ணனுக்கு நெருக்கடியான காலத்தில் ஓடோடி வந்து உதவியது குறிப்பிடத்தக்கது. துணிக்கடை நடத்தி வந்த கோபால கிருஷ்ணன் வியாபாரத்தில் நொடிந்துவிட்டார். தமக்கு உதவும்படி

காரைக்குடியிலிருந்த பேராசிரியரைக் கடிதம் மூலம் அழைக்கவே நான்கு நாட்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு துறையூரை அடைந்தார் பேராசிரியர். அந்த துணிக்கடையிலுள்ள சாமான்களைக் கோபாலகிருஷ்ணன் விலைக்கு விற்க முனைந்தபோது 700 ரூபாய்க்குதான் விலைபோகும் என்று அங்கிருந்த தொழில் எதிரிகள் கூறினர். பேராசிரியர் தலையிட்டு, மறுநாள் கடையிலுள்ள பொருள்களை ஏலம்போடச் செய்தார். பொருள்கள் 8000 ரூபாய்க்கு ஏலத்தில் போயின. அந்தத் தொகையைக் கோபாலகிருஷ்ணனுக்குக் கடன்கொடுத்தவர்களிடம் தந்துவிட்டு, அவர்களிடம் பக்குவமாகப் பேசி, கோபாலகிருஷ்ணன் கொடுக்கவேண்டிய வட்டியைத் தள்ளுபடியாக்கச் செய்தார்.

**9. ஆசிரியர்களைப் போற்றல்:** ஆசிரியர்களால் தாம் பல விசயங்களைக் கற்றுக் கொண்டதைப் பேராசிரியர் நன்றியுடன் நினைத்துப் பார்க்கிறார். வாழ்நாள் முழுமையும் பேராசிரியர் தமக்குக் கல்வி வழங்கிய ஆசிரியர்களை நினைந்து போற்றி வணங்குகின்றார். கல்வியில் ஆசானாக விளங்கிய அத்தகைய ஆசிரியர்கள் நடத்திய பாடத்தையும் தான் எவ்வாறு படித்தேன் என்பதையும் எவ்வாறான அறிவைப் பெற்றேன் என்பதையும் தமது சுயவரலாற்று நூலில் பதிவு செய்திருப்பது வியப்பை ஏற்படுத்துகிறது. அந்த வரிசையில் திண்ணைப் பள்ளிப்படிப்பு முதல் ஆசிரியர் கல்லூரிப் படிப்புவரை பல்வேறு ஆசிரியர்களை நன்றியுடன் நினைத்துப் பார்ப்பதோடு சில ஆசிரியர்களுக்குத் தமது நூற்களை அன்புப் படையலாகவும் அளித்துள்ளார்.

**10. அனுபவங்களை நூற்களாக மாற்றுதல்:** பேராசிரியர் தமது வாழ்க்கையையே ஒரு பாடமாகப் பார்த்துள்ளார். அந்தப் பாடத்தைச் சமூகத்திற்குப் பயன்படும்படி நூலாக மாற்றியுள்ளார். பாண்டிநாட்டுத் திருத்தலங்கள், மலையாளநாட்டுத் திருத்தலங்கள், மற்றும் வெளிநாடுகளுக்குப் பயணம் செய்தபோதெல்லாம் தாம் பெற்ற அனுபவங்களை நூல் வடிவில் எழுதியுள்ளார். அந்த நூற்கள் வாசகனுக்குப் பெரிதும் தகவல் களஞ்சியமாகவே உள்ளன. அவ்வகையில் என் அமெரிக்கப்பயணம், என் இலங்கைப் பயணம் ஆகிய நூற்கள் குறிப்பிடத்தக்கன. எல்லாவற்றிற்கும் முத்தாய்ப்பாகத் திகழ்வது தனது வாழ்க்கையையே நூல்வடிவமாக மாற்றியதுதான் நினைவுக்குமிழிகள் என்ற தலைப்பிலான அவரது வாழ்க்கை வரலாற்று நூல் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதால் தனி அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

**11. தமிழுக்காகச் சேவை:** தாம் பெற்ற தமிழ்க்கல்வியால் தமிழுலகமும் பயன்பெற வேண்டும் என்ற நோக்கில் பல்கலைக்கழகங்களில் அறக்கட்டளைகளை நிறுவியுள்ளார் பேராசிரியர்.

அவரது வாழ்க்கை மனிதாபிமானத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தமை போற்றுதலுக்குரியது. உ. வே. சாமிநாதய்யர், திரு. வி. க, மறைமலையடிகள், மு. வரதராசனார் என ஒவ்வொரு தமிழறிஞருமே தமக்கே உரித்தான வகையில் தமிழ்ச் சமூகத்திற்கு அறிவுசார் நன்கொடையை வழங்கியுள்ளனர். அந்த வகையில் பேராசிரியரும் இணைந்து சிறப்புக்குரியவராகிறார்.

## 3. பேராசிரியரின் கல்விப்பணி

ஆசிரியர் பணி என்பது வளர்ந்து வரும் தலைமுறையினருக்குத் தகுதியான அறிவைப் பயிற்றுவிப்பதும் நல்வழிப்படுத்தலும் ஆகும். பேராசிரியர் அதற்கப்பால் கல்விசார் ஆய்வுப்பணியிலும் இலக்கிய உலகிலும் தடம்பதித்துத் தமிழ்கூறு நல்லுலகில் நிரந்தர இடம்பெற்றுவிட்டார்.

அவரது கல்விப்பணிகள் பின்வரும் நிலைகளில் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. 1. ஆசிரியப் பணி 2. ஆசிரியர் என்ற நிலையில் கல்விநிறுவனங்களை உயர்தரத்திற்குக் கொண்டு சென்றமை 3.கல்வியாளர் என்ற நிலையில் பல்வேறு பொறுப்புகளை வகித்தமை 4. கல்வியாளர் என்ற நிலையில் மாணவர்களுக்கான செயல்திட்டங்களை முன்னெடுத்தமை 6. கல்வி மேம்பாட்டுக்காக அவர் எழுதிய நூற்கள் 7. ஆய்வுப்பணி மற்றும் கருத்தரங்குகள் 8. தமிழ்ச்சங்கங்கள் ஏற்படுத்தி அதன் வாயிலாக உரைநிகழ்த்தச் செய்தமை 9. கல்வித் தொடர்பில் அமைப்புகளுடன் செயல்பட்டமை

**ஆசிரியப்பணி:** அவரது கல்விப்பணியானது ஓய்விற்குப் பின்னரும் தொடர்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது. பள்ளியில் 9 ஆண்டுகள், கல்லூரியில் 10 ஆண்டுகள், பல்கலைக் கழகத்தில் 17 ஆண்டுகள் ஓய்விற்குப்பின்னர் 29 ஆண்டுகள்- ஆக 65 ஆண்டுகள் கல்வியுலகில் அவரது பணி பெரிதும் தொடர்ந்திருந்தது. ஆசிரியப்பணியுடன் அதனோடு பிணைந்திருக்கும் பிற பணிகளிலும் அவர் சிறப்பாகச் செயல்பட்டுச் சமூகத்திற்குப் பயனளித்தார்.

ஏற்கெனவே நிறுவப்பெற்ற ஒரு துறையில் அல்லது ஒரு நிறுவனத்தில் சேர்ந்து அதை இன்னும் திறமையாக நடத்தி அதை மேம்படுத்துவதென்பது ஓர் இயல்பான செயல். ஆனால், பேராசிரியர் பணியில் சேர்ந்த மூன்று கல்வி நிறுவனங்களுமே (பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம்), முதன் முதலில் தொடங்கப்பட்டவை. புதிதாகச் சேர்ந்தமையால் அவற்றை மேம்படுத்த வேண்டிய செயல்கள் அனைத்துமே சவால்களாகவும், புதிய அனுபவங்களாகவும் அமைந்தன. அக் கல்விநிறுவனங்களில் அவர் தந்த உழைப்பு அவை மேன்மேலும் வளர்வதற்கு உதவியது.

**பள்ளித் தலைமையாசிரியர்**: ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் தேர்வுகள் முடிவுற்ற அடுத்த மாதமே (1 ஜூன் 1941) புதிதாகத்

தொடங்கப்பட்ட ஜமீந்தார் நடுநிலைப்பள்ளியில் தலைமையாசிரியர் பணியில் சேர்ந்தார். பள்ளி ஆரம்பக்கட்டத்தில் இருந்தமையால் எல்லா வேலைகளையும் ஆசிரியர்களே செய்யும் சூழ்நிலை இருந்தது. காலச்சூழ்நிலையை உணர்ந்து அனைவரும் மிகவும் பொறுப்புணர்ந்து செயல்பட்டனர். பேராசிரியர் அந்தப் பள்ளிக்குத் தேவைப்படும் தகுதியான ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்தல், வகுப்பறைகள் அமைத்தல், கணக்கு வழக்கு களைச் சரியான முறையில் வைத்தல், எதிர்காலத்தை மனத்திற்கொண்டு பள்ளியின் வளர்ச்சிக்காக நிலம் வாங்குதல் என்பன போன்ற பணிகளைச் செவ்வனே திட்டமிட்டுச் செய்தார்.

பள்ளிக்கூடங்கள் அதிகம் இல்லாத அக்காலகட்டத்தில் சுற்றுவட்டார மாணவர்கள் எளிதில் கல்விவசதி பெறும் பொருட்டு, பள்ளியில் நான்காம் படிவம் கொணர்வதற்குப் பேராசிரியர் மேற்கொண்ட பணிகள் குறிப்பிடப்பெற வேண்டியவை. பள்ளியின் தாளாளர் அனுமதி பெற்று விண்ணப்பத்தை மிகச்சரியான முறையில் தயார்செய்து, அதைத் திருச்சி மாவட்டக் கல்வி அதிகாரி, கோவை மண்டல ஆய்வாளர், சென்னைக் கல்வித் துறை இயக்குநர் ஆகியோருக்கு அனுப்பி வைத்தார். ஆனால், குறிப்பிட்ட காலத்திற்குள் உத்தரவு கிடைக்கப் பெறாததால் சென்னை அலுவலகத்திற்கே சென்றார் பேராசிரியர். அங்குச் சென்ற போதுதான் கோவை வட்டாரக் கல்வி அதிகாரி நான்காம் படிவத்திற்கு அனுமதிக்கக் கூடாது என்று எழுதியிருந்தமை தெரியவந்தது. அதன் தொடர்ச்சியாக உரியவர்களைச் சந்தித்து ஆவன செய்யுமாறு கோரினார். ஆனால், இரண்டொரு நாட்களில் விண்ணப்பம் நிராகரிக்கப் பெற்றது. விண்ணப்பத்தில் கூறியுள்ள காரணங்களைக் கருத்தில் கொள்ளாமலும், நிராகரிக்கப் பெற்றதற்குக் காரணங்களைக் கூறாமலும் விண்ணப்பம் நிராகரிக்கப் பெற்றது. முதலில் கலங்கிய அவர் சென்னையிலுள்ள வி. எஸ். இராமச்சந்திர ஐயர் என்ற கல்வி அதிகாரியைச் சந்தித்தார். அவரது வீட்டில் இருபது நாட்கள் தங்கினார். சென்னையில் பிற உயர் அதிகாரிகளை நேரில் சந்தித்து உயர்நிலைப்பள்ளியின் தேவையை மிகச்சிறந்த முறையில் விளக்கினார். பின்பு விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பெற்று நான்காம் படிவம் தொடங்குவதற்கு அனுமதி கிடைத்தது. அது முதல் அந்தப் பள்ளியில் மாணவர்களின் உயர்கல்விச் சேர்க்கை அதிக அளவில் நிகழ்ந்தது.

பேராசிரியரின் நிர்வாகத் திறன் தொடர்பாக அன்றைய தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித்துறை துணை இயக்குநர், ஆ. பன்னீர்செல்வம் நினைவுக்குமிழிகள்-2 நூலுக்கான தமது அணிந்துரையில் இங்ஙனம் கூறி வியக்கின்றார்:

"பேராசிரியர் அவர்கள் முன்னேற்றங் கருதித் தாம் மேற்கொண்ட முயற்சிகள் அனைத்தையும் காலத்தே திட்டமிட்டுத் தொடங்கியுள்ளதனை அறியமுடிகிறது. பொதுவாக ஆசிரியர்கள் சிறந்த நிருவாகிகளாக இருப்பதில்லை; நிருவாகிகள் சிறந்த ஆசிரியர்களாக இருப்பதில்லை. இஃது உலகியலில் நாம் காணும் நடைமுறையாகும். ஆனால் நம்முடைய பேராசிரியர் அவர்கள் சிறந்த ஆசிரியராகவும், சிறந்த நிருவாகியாகவும் விளங்குகின்றார்கள். பள்ளி ஆசிரியர்கள் நியமனம் (பக். 8-9), பள்ளிக் கணக்கு வைப்பு முறை (பக். 19-24), பள்ளிப் பணத்தை முறையாக வங்கியில் செலுத்தல் (பக். 27), மாணவர்களிடமிருந்து கட்டணம் தண்டலுக்கான ஏற்பாடு, மேலிடங்களிலிருந்து வரும் கடிதங்களுக்கு மறுமொழி அனுப்புதல் (பக். 31), வகுப்புகளுக்கு இட வசதி செய்தல் (பக். 36), பள்ளி நூலக மேம்பாடு (பக். 38), கற்பிப்பு சாதனங்கள் வாங்குதல், வகுப்புகளுக்குத் தேவையான வசதி செய்தல், நான்காம் படிவம் தொடங்கத் தக்கவர் துணைகொண்டு விண்ணப்பம் தயாரித்தல் (பக். 44-45), வைரிசெட்டிப்பாளையம் குடிமைப்பயிற்சி முகாம் (பக். 244-245) ஆகியன பேராசிரியர் அவர்களின் தேர்ந்த நிருவாகத்திறனை எடுத்துக் கூறுவனவாகும்."

கல்வித் தொடர்பில் அவர் இயக்கங்களுடன் ஒன்றிணைந்து செயல்பட்டார். திருச்சி மாவட்டத் தமிழாசிரியர்கள் ஒன்று கூடி 'திருச்சி மாவட்டத் தமிழாசிரியர் கழகம்' என்ற ஓர் அமைப்பினை ஏற்படுத்தினர். இக்கழகத்திற்குத் தகுதியான தலைவராகப் பேராசிரியர் அவர்களை அடையாளம் கண்டு அவரையே தலைவராக்கினர். மதுரைத் தமிழ்ச்சங்கமும், சென்னை மாணவர் மன்றமும் பள்ளியிறுதி மாணக்கர்கட்கு பொதுத்தேர்வு நடத்தி வெற்றி பெற்றோர்க்குச் சான்றிதழ்கள் வழங்குவது போன்று இந்தத் திருச்சி மாவட்டத் தமிழாசிரியர் கழகமும் திருச்சி மாவட்ட மாணக்கர்கட்குத் தேர்வு நடத்திச் சான்றிதழ்கள் வழங்கியது.

துறையூரின் சுற்றுப்புற ஊர்களில் உள்ள உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் ஒன்றுகூடி துறையூர் ஆசிரியர் கூட்டு இணைப்பு என்ற ஓர் அமைப்பினைத் தொடங்கிப் பேராசிரியரை அதன்

தலைவராக நியமித்தனர். 1948இல் இவ்விணைப்பால் திட்டமிடப் பெற்ற மாநாட்டிற்கு அக்காலத்தில் கல்வி அமைச்சராக இருந்த திரு.தி.க. அவிநாசிலிங்கம் செட்டியார் தலைமை ஏற்றுச் சிறப்பு செய்தார். இம்மாநாட்டில் சுமார் 700க்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் கலந்து கொண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது.

அந்நாளில் (1941-1950) திருச்சி மாவட்டத்தில் தமிழ் படித்த - வித்துவான் பட்டம் பெற்ற - தலைமையாசிரியர் பேராசிரியர் ஒருவரே என்பது குறிப்பிடத்தக்கது.

**கல்லூரிப் பேராசிரியர்**: காரைக்குடியில் புதிதாக வள்ளல் அழகப்பச் செட்டியாரால் தொடங்கப்பெற்ற ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் 5. 07. 1950இல் கல்லூரி ஆசிரியராகப் பணி ஏற்றார். காரைக்குடியில் வந்து வாழ்வதற்குக் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் கருவியாக அமைந்திருந்தார். இது குறித்துப் பேராசிரியர் பெருமிதம் அடைகின்றார். வள்ளல் அழகப்பர் தொடங்கிய ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல் முதலாகச் செயல்பட்ட தனியார் கல்லூரிகளில் முதன்மையானது.

புதிதாகத் தொடங்கப்பெற்ற கல்லூரியாதலால், நூலகத்தை அமைக்கும் பொறுப்புப் பேராசிரியரிடம் ஒப்படைக்கப்பெற்றது. பேராசிரியர் ஒரு தனித்தன்மை வாய்ந்த திட்டத்தினை வகுத்துக் கொண்டு பணியைத் தொடங்கினார். பதிப்பு நிறுவனங்களிடமிருந்து விலைப்பட்டியலை வரவழைத்த பின்னர், ஆங்கில நூல்கள், தமிழ், அறிவியல், கணிதம், கல்வி உளவியல், தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள், கலைக்களஞ்சியங்கள், அபிதான சிந்தாமணி, இருபதாம் நூற்றாண்டின் தமிழ் நூல்கள், தொடக்க நிலை, உயர் நிலை, கல்லூரி-பல்கலைக் கழக அளவில் வெளியிடப்பெற்ற அறிக்கைகள், முக்கியமான வார, திங்கள் சஞ்சிகைகள், நாளிதழ்கள் முதலியவற்றை ஆராய்ந்து தேர்ந்தெடுத்து வாங்கி நூலகத்தை உருவாக்கினார்.

அன்றைய உயர்நிலைப்பள்ளிக் கல்வித் திட்டத்தில் மாணாக்கர்கட்குக் குடிமைப் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியம். அதைப் பயிற்சிக் கல்லூரியிலேயே அளிக்க வேண்டிய சூழ்நிலை. 10 நாட்கள் வெளியூர்களில் பயிற்சி முகாம்கள் நடத்தப்பெற்றன. இடங்களைத் தேர்ந்தெடுத்தல், முகாம் அமைத்தல், தங்குதல், வகுப்புகள் நடத்துதல், உணவு தயாரித்தல் முதலியவற்றில் மற்ற ஆசிரியர்களோடு பேராசிரியர் தம்மை உற்சாகத்தோடு ஈடுபடுத்திக் கொண்டார். இளையாற்றங்குடியில்

நடைபெற்ற முகாமை அப்பொழுது சென்னை மாநிலப் பொதுத்துறை அமைச்சர் திரு.டீ. கோபாலரெட்டியும் அவரது துணைவியாரும் பார்வையிட்டனர். சூரைக்குடியில் நடைபெற்ற முகாமிற்கு அபிசீனியா பழ. நாச்சியப்பன் வருகை தந்து உரையாற்றினார். மாற்றூரில் நடைபெற்ற முகாமிற்குத் திரு. எஸ். சங்கரராஜு* நாயுடு தம் துணைவியாருடன் வந்து தேசியக் கொடியேற்றி மாணாக்கர்களிடையே 10 நிமிடங்கள் உரையாற்றினார். திருப்பராய்த்துறையில் நடைபெற்ற குடிமைப்பயிற்சி முகாம் சித்பவானந்த அடிகளின் ஆசியோடு நடைபெற்றது. பிள்ளையார்பட்டி, இராமேஸ்வரம் ஆகிய இடங்களிலும் குடிமைப்பயிற்சி முகாம்கள் நடைபெற்றன.

மகாகவி சுப்பிரமணிய பாரதியாரால் பாடப்பெற்ற ஒரே சங்கம் இந்து மதாபிமான சங்கம். சொ. முருகப்பா, இராய. சொக்கலிங்கம், சா. கணேசன் உட்படக் காரைக்குடி இளைஞர்கள் ஒன்று கூடி இச்சங்கத்தினைத் தோற்றுவித்தனர். இச்சங்கத்தின் மீது பாரதியார் ஏழு பாடல்கள் பாடியுள்ளார். பாரதியார், 9.11.1919இல் இச்சங்கத்திற்கு வருகை தந்து சிறப்பித்த பாடல் இது.

பலநூல்கள் பதிப்பித்தும், பல பெரியோர்
பிரசங்கம் பண்ணு வித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசா
லைபலவும் நாட்டி யுத்தம்
குலமுயர நகருயர நாடுயர
உழைக்கின்றார் கோடி மேன்மை
நிலவுறஇச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தொளிர்க நலத்தின் மீதே!

பேராசிரியர் இச்சங்கத்தின் நிர்வாகக் குழுவின் ஆயுள் உறுப்பினர். இச்சங்கம் நடத்தும் தமிழ் இலக்கியக் கூட்டங்களில் இராய. சொக்கலிங்கம், சொ. முருகப்பா இன்ன பிற தமிழறிஞர்கள் கலந்துகொண்டு இலக்கியச் சொற்பொழிவாற்றுவர். சங்க ஆண்டு விழாக்களில் தமிழ்த்தென்றல் திரு.வி.க. பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார், டாக்டர் ஏ.சி. செட்டியார், சுவாமி சிவாநந்தர், பன்மொழிப்புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், வள்ளல் அழகப்பர், தொழிலதிபர் தியாகராசச் செட்டியார் முதலியோர் பங்கு கொண்டு சிறப்பித்துள்ளனர். இராய. சொ.வி.இன் நினைவினைப் போற்றும் வகையில் பேராசிரியர் 1995இல் தமிழ்க்கடல் இராய. சொ. எனும் நூலினை வெளியிட்டார்.

**அறிவியல் கருத்தரங்கு:** பேராசிரியரின் அறிவியல் நூல்கள் குறித்து அறிந்திருந்த அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் நாராயணசாமிப் பிள்ளை 1958இல் தமிழில் அறிவியல் பாடங்களைப் பயிற்றுவிப்பது பற்றிய ஆறுவாரக் கருத்தரங்கினை நடத்தித் தருமாறு பேராசிரியருக்கு அழைப்பு விடுத்தார். பல்கலைக்கழக விருந்தினன் என்ற சிறப்பு மட்டுமே பேராசிரியருக்கு வழங்கப்பெற்றது. மற்றபடி சன்மானம் ஏதும் கொடுக்கப்படவில்லை. பணியே பரமன் வழிபாடு என்ற கொள்கையுடைய பேராசிரியர் சிதம்பரம் சென்று துணைவேந்தர் வெகுவாகப் பாராட்டுமளவிற்குக் கருத்தரங்கினை வெற்றிகரமாக நடத்தி முடித்தார். கலைச்சொற்கள் உருவாக்கம் போன்ற செயல்பாடுகள் நிறைந்த அந்தக் கருத்தரங்கு, அறிவியல் தமிழ்க் கருத்தரங்கங்களுக்கு முன்மாதிரியாகத் திகழ்ந்தது.

பேராசிரியரின் சென்னைப் பல்கலைக்கழகத் தொடர்பு இவண் கவனிக்கத்தக்கது. பல்கலைக்கழகக் கல்வி ஆலோசனைக் குழுவில் உறுப்பினராகி மூன்று (1953-1956) ஆண்டுகள் பணியாற்றிப் பெற்ற அநுபவம் எதிர்காலக் கல்விப்பணியில் பேராசிரியருக்குப் பெரிதும் துணைபுரிந்தது. ஒரு சமயம் பி.எட் வகுப்பில் விருப்பப் பாடங்களைத் தமிழிலும் கற்பிக்கலாம் என்னும் தீர்மானம் பல்கலைக்கழகக் கல்வி ஆலோசனைக்குழுவில் கொண்டு வரப்பெற்றது. துணைவேந்தர் தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் (1956) இத்தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது. இத்தீர்மானத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கில், பேராசிரியர் அறிவியல் பயிற்றும் முறை என்ற நூலை எழுதத் தொடங்கினார். இந்நூலை வள்ளல் அழகப்பருக்குப் பாடல் வடிவில் அன்புப் படையலாக்கவும் செய்தார்.

நலங்கிளர் ஊக்கம் எனும்புனல் பெய்து
நாள்தொறும் அன்புற வளர்த்த
பொலங்கிளர் முயற்சிக் கொடியினில் பூத்த
பொருளெனும் நறுமலர் கொய்து
புலங்கிளர் தெய்வக் கலைமகள் அடிக்கே
பொற்புற அணிந்துளம் களிக்கும்
வலம்கிளர் டாக்டர் அழகப்ப வள்ளல்
மலரடிக் குரியதிந்த நூலே

எனும் பாடலை யாத்தார்.

அந்தச் சமயத்தில் வள்ளல் அழகப்பர் உடல் நலிவுற்று, சென்னை மருத்துவமனையொன்றில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தார். அழகப்பா அறக்கட்டளையின் துணை மேலாளரான திரு. பத்மநாபன் அழகப்பரைக் கவனித்துக் கொண்டிருந்தார். அப்பாடல் திரு. பத்மநாபனுக்கு அனுப்பப்பெற்று, பாடல் அழகப்பருக்கு வாசித்துக் காட்டப்பெற்றது. பத்மநாபனும் பாடலைப் பாடி வள்ளலை மகிழ்வித்தார். ஆனால், சென்னைப் பல்கலைக்கழகக் கல்வி ஆலோசனைக்குழுவின் தீர்மானத்தின்படி எழுதப்பெற்ற முதல்நூல் அச்சாகி வெளியிடப்பெறும் முன்பே வள்ளல் அழகப்பர் இயற்கை (5.4.1957) எய்தினார். ஒரு மாதத்திற்குப் பின், பேராசிரியர் கண்டனூர் சென்று அழகப்பரின் திருமகளார் உமையாள் ஆச்சி மற்றும் அவர் கணவர் ஆகியோரைச் சந்தித்து நூலின் இரு படிகளை வழங்கினார். அழகப்பர் மறைவிற்குப் பின்பு அழகப்பா கல்வி அறக்கட்டளையின் பொறுப்பை சென்னை மாநிலக் கல்விநிதி அமைச்சராயிருந்த திரு.சி. சுப்பிரமணியம் ஏற்றுக் கொண்டார்.

கம்பன் விழாவினை முதன்முதலில் காரைக்குடியில் தொடங்கியவர் கம்பன் அடிப்பொடி சா. கணேசன். நான்குநாள் நிகழ்ச்சிகளை அமைத்து வெற்றிகரமாக நடத்துவதில் வல்லவர். முதல் மூன்று நாள் நிகழ்வுகள் காரைக்குடி மீனாட்சி மகளிர் உயர்நிலைப்பள்ளி வளாகத்திலும், நான்காம் நாள் நிகழ்வு நாட்டரசன் கோட்டை கம்பன் சமாதியிலும் நடைபெற்று வந்தன. தமிழகத்தின் புகழ் பெற்ற தமிழறிஞர்கள் பலரும் ஒவ்வொரு ஆண்டும் கலந்து கொள்வர். இந்நிகழ்ச்சிகளின் அமைப்புகளில் சா. கணேசனுக்குப் பெரிதும் உறுதுணையாகப் பேராசிரியர் ஒத்துழைப்பு நல்கினார். இதனால், பேராசிரியருக்குப் பல்வேறு தமிழறிஞர்களின் நட்பும் தொடர்பும் கிடைக்கப்பெற்றன.

காரைக்குடியில் வாழ்ந்த பத்தாண்டுகளில் பேராசிரியரின் நண்பர் குழாம் பெருகியது. கம்பன் விழா மற்றும் பல இலக்கிய நிகழ்வுகளில் தவறாது கலந்து கொண்டு பேராசிரியர் தம் பங்கினை வழங்கினார்.

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியராகப் பணிபுரிந்த போது ஆசிரியப் பயிற்சிக்கான அடிப்படை நூல்கள் தமிழில் இல்லை என்பதை அறிந்தார். அக்காலத்தில் ஆங்கிலத்தில்தான் அந்நூல்கள் இருந்தன. எனவே, தமிழ் பயிற்றும் முறை பற்றிய பயிற்சிப் பாடங்களை ஒரு பெரியதொரு நூலாக எழுதி 1957இல்

வெளியிட்டார். இதன்மூலம் தமிழில் ஆசிரியப் பயிற்சி நூல்கள் எதுவுமில்லை என்ற குறைநீங்கியது. அவ்வாறே அறிவியலைக் கற்பிக்கும் முறை குறித்தும் நூல் எழுதினார். இதை 'ஒரு கல்வியாளன் என்ற நிலையில் கல்வித்துறைக்கு அவர் அளித்த நன்கொடை' என்று கூற முடிகிறது.

**பல்கலைக்கழகப் பேராசிரியர்**: ஒரு கல்வியாளன் என்ற நிலையில் அத்துறையில் மேலும் உயர்ந்தால் புதிய கல்விசார் சிந்தனைகளைச் சமூகத்திற்கு அளிக்க முடியும் என்று உணர்ந்தவர் பேராசிரியர். திருவேங்கடவன் பல்கலைக்கழகத் திலிருந்து தமிழ் விரிவுரையாளர் பதவிக்கு ஒரு விளம்பரம் வரவே, அதற்கு விண்ணப்பித்து அப்பதவியைப் பெற்றார். இந்தத் துறையும் பேராசிரியரால் பின்னாட்களில் கட்டியெழுப்பப்பட்டது

தமிழகப் பல்கலைக்கழக அமைப்பினின்று சிறிது வேறுபட்டது திருவேங்கடவன் பல்கலைக்கழக அமைப்பு. திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பல்கலைக்கழகக் கல்லூரி என்ற ஒரு தனி அமைப்பு உள்ளது. இதற்கு முதல்வர் ஒருவர் உண்டு. அனைத்துத் துறைகளும் இவருடைய பொறுப்பில் இருக்கும். பேராசிரியருக்கு ஒதுக்கப்பட்ட இடம் சிறிதாக இருந்தாலும் தமிழ்க்கல்வியைக் கண்ணாகக் கொண்டு இயங்கினார். இருமுறை நடைபெற்ற தமிழ்ப் பாடத் திட்டக்குழுக் கூட்டங்களும் இச்சிறு அறையில்தான் நடை பெற்றன. டாக்டர் மு. வரதராசனார், பேராசிரியர் கோ. சுப்பிரமணிய பிள்ளை (அண்ணாமலைப் பல்கலைக் கழகம்), பேராசிரியர் பூ. ஆலால சுந்தரம் செட்டியார் (சென்னை கிறித்துவக் கல்லூரி) ஆகியோர் பாடத் திட்டக்குழு உறுப்பினர்களாக இருந்தனர்.

**2. ஆய்வுப் பணி – எழுத்துப்பணி:** திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ் பயிலும் மாணாக்கர்கள் அதிகம் இல்லாத காரணத்தால், பேராசிரியர் தம்நேரத்தை நூல்கள் எழுதுவதில் செலவிடலானார். சில நாட்களில் பல்கலைக்கழக நூலகத்திற்குச் சென்று, அங்கிருந்த நூலக நண்பர் எம். ஆர். சந்திரன் அவர்களின் துணையோடு தமிழ் நூல்களை வகைப்படுத்தினார். சில ஆயிரம் நூல்கள் இவ்வாறாக வகைப்படுத்தப் பெற்றதால், பிற்காலத்தில் நூலகத்திற்கு வருகை தரும் மாணாக்கர்கள் நூல்களை நன்கு பயன்படுத்தினர்.

திருவேங்கடவன் பல்கலைக் கழகம் நூல்களை எழுதி வெளியிடப் பேராசிரியருக்குத் தேவையான அனுமதி வழங்கிய போது, காரைக்குடியில் எழுதிய கல்வி உளவியல், காதல் ஓவியங்கள், கவிதையநுபவம் ஆகிய மூன்று நூல்கள் அச்சேறத் தொடங்கி யிருந்தன. ஒரு வாரத்தில் குறைந்தது நான்கு பார்வைப் படிவங்கள் திருத்துவதற்கென வந்துகொண்டிருந்தன. அவற்றை நேரம் தாழ்த்தாது திருத்தி அனுப்புதல், நூலகத்திற்குச் சென்று நூல்களைப் புரட்டி தேவையான தகவல்களைச் சேகரித்தல் போன்ற பணிகளில் பேராசிரியர் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்.

பேராசிரியரின் நூல் எழுதும் பணி தொடர்ந்து நடைபெற்றது. கல்வியாளர் என்ற நிலையில் பல்வேறு துறைகள் சார்ந்து அவர் எழுதிய நூற்கள் தெளிவான புதிய செய்திகளைக் கொடுத்தன. அவை இளைஞர்கள் முதல் ஆய்வாளர்கள் வரை சென்றடைந்தன. அந்தத் துறைகள் சார்ந்து எழுதும்போது ஒரு கல்வியாளர் என்ற நிலையில் சமூக மேம்பாட்டிற்கான சிந்தனைகளையும் முன்வைத்தார் என்பது இவண் குறிக்கத்தக்கது. எடுத்துக்காட்டாக அவர் இளைஞர்களை மனத்தில் மையமிட்டு எழுதிய இளைஞர் வானொலி, இராக்கெட் போன்ற நூல்களைக் குறிப்பிடலாம்.

பேராசிரியரின் நூற்களுக்கு எப்போதுமே கல்வியுலகிலும் தமிழுலகிலும் அங்கீகாரம் கிடைத்து வந்துள்ளது. காரணம் அவரது நூற்கள் எவையும் மேம்போக்கானவை அல்ல. குறிப்பிட்ட துறைகளில் ஆழ்ந்த அறிவு பெற்றபின் எழுதப்பட்டவை. குறிப்பாக சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் பரிசளிக்கப்பெற்ற பேராசிரியரின் அணுக்கரு பௌதிகம் 1966இல் வெளியிடப்பெற்றது. இளைஞர் தொலைக்காட்சி என்ற மற்றொரு அறிவியல் நூலும் 1966இல் வெளிவந்தது. மற்றுமொரு அறிவியல் நூலான நமது உடல் 1966இல் வெளியிடப்பெற்று தவத்திரு சித்பவானந்தருக்கு அன்புப் படையலாக்கப் பெற்றது. இளைஞர்களுக்கு அறிவியல் அறிவை வழங்கும் பொருட்டு இளைஞர் தொலைக்காட்சி 1966இல் வெளியிடப்பெற்றது. இந்நூல் அணுவாற்றலை மக்கள் நலனுக்குப் பயன்படுத்த வேண்டுமென்று கூறியது.

பல இதழ்களிலும், மலர்களிலும் வெளிவந்த அறிவியல் கட்டுரைகள் தொகுக்கப்பெற்று 1967இல் அறிவியல் விருந்து எனும் நூலாக வெளியிடப்பெற்றது. திருப்பதி அருகாமையிலுள்ள பாக்காலாவில் உள்ள தமிழ்ச்சங்கத்தில் ஆற்றிய ஆறு

சொற்பொழிவுகள் தொகுக்கப்பெற்று பரணிப் பொழிவுகள் எனும் நூல் தயாராகியது. விரிவுப்பொழிவுகள் என்ற திட்டத்தின்கீழ் திருவேங்கடவன் பல்கலைக் கழகம் இந்நூலை 1972இல் வெளியிட்டது. 1973இல் வெளியிடப்பெற்ற அம்புலிப்பயணம் என்ற நூல் மிகுந்த கவனம் பெற்றது.

**தமிழ்ச்சங்கங்கள் மூலம் கல்விப்பணி:** கல்வி என்பது வகுப்பறையைத் தாண்டி மக்களையும் சென்றடைய வேண்டும் என்று நோக்கில் பேராசிரியர் திருப்பதியிலும் அதைச் சுற்றியுள்ள நகரங்களிலும் தமிழ்ச்சங்கங்களைத் தோற்றுவித்தார். இது குறித்து முனைவர் தானியேல் தேவசங்கீதம் நினைவுக்குமிழிகள்-4 நூலுக்கான தம் அணிந்துரையில்,

"பேராசிரியர் அவர்கள் தமிழ்த்தொண்டினைத் துறை உருவாக்கினதோடு நிறுத்திக்கொள்ளவில்லை. மொழிவழி மாநிலங்கள் பிரிந்தபின் வடவேங்கடப் பகுதிகளில் தமிழ் கொஞ்சம் கொஞ்சமாகச் சாவதைப் பார்த்து, இப்பகுதிகளில் எப்படியாவது தமிழ் மக்கள் தமிழ் உணர்வோடு வாழ வேண்டும் என எண்ணி பாக்காலா, சித்தூர், திருப்பதி, புத்தூர், நகரி, குந்தக்கல் ஆகியவிடங்களில் படிப்படியாகத் தமிழ்ச் சங்கங்களை ஏற்படுத்தி அங்குள்ள தமிழர்களை ஊக்குவித்திருக்கிறார். பேராசிரியர் அவர்கள் இத்தமிழ்ச் சங்கங்களைத் தமக்குச் சிறந்த இலக்கிய மேடைகளாகப் பயன்படுத்திக் கொண்டதோடு நில்லாது, இவைகளைத் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை ஏற்படத் துணைக் கருவிகளாகவும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்" எனக் குறிப்பிடுகின்றார்.

**தமிழ்த்துறை உருவாகப் பாடுபட்டமை:** பல்கலைக் கழகத்தில் தமிழ்க்கல்வி வளரவேண்டும் என்றால் தமிழக அரசின் மானியம் கண்டிப்பாகத் தேவை என்பதை அறிந்திருந்தார் பேராசிரியர். அக்காலத்தில் திருப்பதி ஆந்திர மாநிலத்தில் இணைக்கப் பெற்றதையொட்டி, சில கல்லூரிகளில் இருந்துவந்த வித்துவான் போன்ற படிப்புகளும் நிறுத்தப்பெற்றன. திருப்பதியில் தமிழ்க்கல்வி இருப்பின், எப்பொழுதாவது திருப்பதி தமிழ் நாட்டிற்குரியது என்ற கிளர்ச்சி எழத்தான் செய்யும் என்ற அச்சம் பொதுவாக நிலவி வந்தது. திருவேங்கடவன் பல்கலைக் கழகமும் திருமலை திருப்பதி தேவஸ்தானமும் ஒன்றே என்ற கருத்தும் பரவலாக நிலவிவந்தது. ஒருமுறை பேராசியர் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வாமனராவைச் சந்தித்து நிலைமையைத்

தெளிவாக விளக்கினார். பின்னர் துணைவேந்தரின் ஆலோசனைப்படி வேறொரு சிறப்பான விண்ணப்பம் தயார் செய்யப்பெற்றது.

தமிழகம் தமிழ் வளர்ச்சிக்கென்று மானியம் வழங்கும் கொள்கையை வகுத்துக்கொண்டு தில்லி பல்கலைக் கழகத்திற்கு ஆண்டொன்றுக்கு ரூ.10000உம், உஸ்மானியப் பல்கலைக் கழகத்திற்கு ஆண்டொன்றுக்கு ரூ.25000உம், அலகாபாத், ஆக்ரா பல்கலைக் கழகங்கட்கு ரூ.10000உம் அந்தக் காலகட்டத்தில் வழங்கி கொண்டிருந்தது. இது போன்று தமது பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைக்குக் கிடைப்பதற்கு விண்ணப்பத்தினைத் துணைவேந்தரே தமிழக அரசிற்கு அனுப்பிவைக்குமாறு செய்தார் பேராசிரியர். அவரது பெருமுயற்சிக்குப்பின் தமிழக அரசின் மானியம் பெறப்பெற்றது.

**ஆய்வேடு மற்றும் முனைவர் பட்டம்**: கல்வியில் உயர்நிலையாக அங்கீகரிக்கப்படுவது பிஎச்டி ஆய்வுப் பட்டம். திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையில் முதன் முதலில் முனைவர் பட்டம் பெற்றவர் எனும் சிறப்பினைப் பெற்றவர் பேராசிரியர்தான். இந்த ஆய்வேடு 32 இயல்களையும் 5234 அடிக்குறிப்புகளையும் பிற்சேர்க்கையில் 306 நூல்களையும் தன்னகத்தே கொண்டு வைணவ இலக்கியத்தின் மிகச்சிறந்த ஆய்வு நூலாக ஆய்வாளர்கள் அனைவருக்கும் பெரும் பயனுள்ளதாக விளங்கி வருகின்றது.

தமிழில் முதுகலை வகுப்புத் தொடங்குவதற்கு ஏற்பாடுகள் தொடங்கின. அக்டோபர் 1970இல் நான்கு துறைகள் (தமிழ், சட்டம், மானிட இயல், அரசியல்) தொடங்கி வைக்கப்பெற்றன. பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் சகந்நாத ரெட்டி தலைமையில் நடந்த விழாவில் ஆந்திர மாநிலத்தின் நான்கு அமைச்சர்கள் கலந்து கொண்டனர். அமைச்சர் திரு. பி. திம்மாரெட்டி அவர்கள் துறைகளைத் தொடங்கி வைத்தார். இதற்கான கல்வெட்டுச்சான்று பல்கலைக் கழகத்தில் வைக்கப் பெற்றுள்ளது.

1970-1971இல் முதுகலை வகுப்புகள் தொடங்கப்பெற்ற போது, தமிழ்க்கல்வியை ஊக்குவிக்கும் விதமாக முதுகலை வகுப்பு முடிக்கும் மாணாக்கர்களுக்குத் தங்கப்பதக்கங்கள் வழங்குவதென முடிவு செய்தார். திருப்பதி, சித்தூர், பாக்காலா, புத்தூர், நகரி, சென்னை, கோவை முதலிய நகரங்களில் உள்ள நண்பர்கள், செல்வந்தர்கள் ஆகியோரை அணுகித் தேவையான தொகை ஏற்பாடு

செய்யப்பெற்றது. பொள்ளாச்சி வள்ளல் நா. மகாலிங்கம் செய்தி யறிந்து ஒரு தங்கப் பதக்கத்திற்கு வேண்டிய தொகையைத் தாமே முன்வந்து வழங்கினார். இத்தொகைகளைக் கொண்டு பேராசிரியர் கீழ்க்காணும் இரு தங்கப்பதக்கங்களை தமிழ்த்துறையில் நிறுவினார்.

(1) திருவள்ளுவர் தங்கப்பதக்கம் (தமிழ் எம்.ஏ-யில் முதல் வகுப்பில் முதலாவதாகத் தேர்ச்சி பெறும் மாணாக்கருக்கு)

(2) இராமலிங்க சுவாமிகள் தங்கப்பதக்கம் (இலக்கியத் திறனாய்வுத் தாளில் அறுபது விழுக்காட்டிற்கு மேல்பெறும் முதல் மாணாக்கருக்கு)

இவையிரண்டும் பட்டமளிப்பு விழாவின்போது தேர்ந்தெடுக்கப்பெற்ற மாணாக்கர்கட்கு வழங்கப்பெறுகின்றன. பதக்கங்கள் பெற்ற மாணாக்கர்களின் பெயர்கள் பெற்ற ஆண்டுடன் பெயர்ப் பலகைகளில் பொறிக்கப்பெற்றுத் துறையில் வைக்கப்பெற்றுள்ளன.

**கருத்தரங்குகள்**: தமிழ்த் துறையின் வளர்ச்சியில் பேராசிரியரின் பங்கு மிகவும் பெரிது. ஆண்டுதோறும் பல தமிழ் அறிஞர்களை அழைத்துக் கருத்தரங்குகள் நடத்தப்பெற்றன. கருத்தரங்கிற்குத் தலைமை வகிப்பது பல்கலைக்கழகத் துணைவேந்தர் எனவும் தொடக்க விழா ஆங்கிலத்தில் நடைபெறுவது எனவும் முறைமையாக வைக்கப்பெற்றது. இந்த முறை அனைத்துக் கருத்தரங்கங்களிலும் நடைமுறைப் படுத்தப்பெற்றது. 1974, பிப்ரவரியில் திருக்குறள் கருத்தரங்கு துணைவேந்தர் தலைமையில் நெ.து. சுந்தரவடிவேலு தொடக்கவுரை ஆற்றித் தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஆசியுடன் நடைபெற்றது. 1975 ஏப்ரலில் சிலப்பதிகாரக் கருத்தரங்கு துணைவேந்தர் தலைமையில் குழந்தைசாமி தொடங்கிவைத்து நாவலர் நெடுஞ்செழியன் மற்றும் ச.வே. சுப்பிரமணியம் அவர்கள் சிறப்புரையாற்ற இனிதே நடைபெற்றது. 1976இல் (ஜனவரி) மு.வ. வின் இலக்கிய படைப்புகள் எனும் கருத்தரங்கம் துணைவேந்தர் தலைமையில் தமிழக அமைச்சர் திரு. அன்பழகன் அவர்கள் சிறப்புரையாற்ற மு.வ.வின் பல மாணக்கர்கள் கலந்து கொண்டு இனிதே நடைபெற்றது.

1977 ஏப்ரலில் கம்பராமாயணக் கருத்தரங்கு துணைவேந்தர் தலைமையில் டீ. கோபால் ரெட்டி அவர்கள் சிறப்புரையுடன் நிகழ்ந்தது. சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்ட கம்பன்

அடிப்பொடி சா. கணேசன் அவர்களைக் கம்பராமன் அவர்கள் கவிதையில் வரவேற்க, மகராசன் அவர்கள் சிறப்பானதொரு பேருரை ஆற்றினார். இதுபோன்ற பல கருத்தரங்கங்களை நிகழ்த்திக் காட்டினார்.

**ஓய்விற்குப் பின்னரும் கல்விப்பணி:** பல்கலைக் கழகத்திலிருந்து ஓய்வு பெற்ற பின்னர் அவரது கல்வி மற்றும் தமிழ்ப்பணி 29 ஆண்டுகளுக்கும் மேலாகத் தீவிரமாகத் தொடர்ந்தன.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் மூன்று முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கு ஆராய்ச்சி நெறியாளராக இருந்து அம்மூவரும் முனைவர் பட்டம் பெறுவதற்கு உதவினார். சென்னைப் பல்கலைக் கழகத்திலுள்ள தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப் பண்பாட்டு நிறுவனத்தின் மதிப்பியல் இயக்குநராக (1996-2002), காஞ்சிபுரத்தில் மெய்யியல் துறையில் மதிப்புறுப் பேராசிரியராக, தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரியராக, திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் வருகைப் பேராசிரியராக இவர் பணியாற்றினார். இக்காலக்கட்டங்களில் அவர் பல நூற்கள் எழுதியுள்ளமையும் இவண் குறிக்கத்தக்கது. இது குறித்த கூடுதலான விவரங்கள் முதலாம் அத்தியாயத்தில் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன.

1989இல் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியரின் இருக்கைக்கு தமிழக அரசு வழங்கும் மானியம் தொடர்ந்து வழங்கப்பெறுவதற்குக் காரணமாக அமைந்ததோடு தாமே பல கல்வி நிறுவனங்களிலும் தமது சொந்தச் செலவில் அறக்கட்டளைகளையும் நிறுவியுள்ளார். அவற்றின் மூலம் இன்றளவும் சிறந்த ஆய்வுச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்று வருகின்றன. இது அவரைத் தமிழ்ப்புரவலராக அடையாளப்படுத்துவதோடு தமிழ்க்கல்வி நிலைநிற்க வேண்டும் என்ற அவரது உயர்ந்த எண்ணத்தையும் வெளிப்படுத்துகிறது. 1984இல் முதல் அறக்கட்டளை திருவேங்கடவன் பல்கலைக்கழத்தின் தமிழ்த்துறையில் நிறுவப்பெற்றது.

பேராசிரியர் தம் வாழ்நாளில் எழுதிய 136 நூல்களில் 100 நூல்கள் அவர் ஓய்வுபெற்ற பின்னரே எழுதப்பெற்றன என்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதொன்று.

நினைவுக் குமிழிகள் எனும் தலைப்பில் வெளிவந்த 4 நூல்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கன. இவை அவரது வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளின் தொகுப்பு மட்டுமல்ல; அவை ஒரு சிறந்த இலக்கியம். வாழ்க்கை அநுபவங்களை, நீதிநெறிகளை, உண்மைகளை, வாழ்க்கைத் தத்துவங்களை இந்நூல்களில் காணமுடிகிறது.

பேராசிரியர் பல்வேறு பிரிவுகளில் நூல்கள் எழுதுவதில் தம் சிந்தனையைச் செலுத்தி வந்தமையால் நினைவுக்குமிழிகள் ஐந்தாம் பாகம் எழுதப்பெறவில்லை.

திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் பொன்விழாவின் போழ்து (2004), ஓய்வுபெற்ற ஆசிரியப் பெருமக்களுள் மூத்தவராக வாழ்ந்து கொண்டிருந்த பேராசிரியரை அப்பல்கலைக்கழகம் திருப்பதிக்கு அழைத்துச் சென்று சிறப்புச் செய்து பாராட்டி மகிழ்ந்தது.

# 4. பேராசிரியரின் ஆய்வுத்தடங்கள்

பேராசிரியரது எழுத்துக்கள் பல்துறை சார்ந்தவை என்றாலும் அவற்றை இலக்கியத் திறனாய்வு (சங்க இலக்கியம், அறஇலக்கியம், நவீனஇலக்கியம், சிற்றிலக்கியம்), உரை எழுதுதல், அறிவியல், மொழிபெயர்ப்பு, சுயசரிதை, பக்தி, இலக்கணம், தத்துவம், பயணஇலக்கியம், ஆளுமைகளை அடையாளப்படுத்தல், கோவில்கள், நவீனக்கோட்பாடுகள், கல்வியியல், வாழ்வியல், வரலாறு என்ற வகைமைப்பாட்டுக்குள் கொண்டு வரமுடியும். இந்நூல்கள் அனைத்துமே பொதுவான விடயங்களைத் தெரிவிப்பன அல்ல. மாறாக, அனைத்துமே அந்த துறைகள் குறித்த ஆழ்ந்த விடயங்களைப் பேசுகின்றன- ஆய்வுநோக்கில் அமைந்துள்ளன; பல்வேறு ஆய்வுகளுக்கு முன்னோடியாகவும் திகழ்கின்றன. கல்விப்புலத்திலும் அறிவுசார் நூல்களாக இடம்பெறுவதோடு மேற்கோள்களாகச் சுட்டப்படுவனவாகவும் உள்ளன. அவ்வகையில் வெவ்வேறு துறைகளில் தடம்பதித்த பேராசிரியர் என்று அவரைக் குறிப்பிட முடிகிறது.

**1. இலக்கியத்திறனாய்வு:** இலக்கியக் கல்வி என்பது பல்வேறு துறைகளுடன் பிணைந்து நிற்பதாகும். பல்வேறு துறை சார்ந்த சிந்தனைகள் இலக்கியங்களில் எவ்வாறு பதிவு செய்யப்படுகின்றன என்பதும் இலக்கியங்கள் பிற துறைகளுக்கு எவ்வாறு பயன்பட்டு வருகின்றன என்பதும் பேசுபொருளாகவும் ஆய்வுப்பொருளாகவும் இலக்கியக் கல்வியில் அமைகின்றன. எனவே, இலக்கியத் திறனாய்விற்குப் பல்வேறு துறைகள் சார்ந்த அறிவு தேவை. இதைப் பேராசிரியரின் நூல்களில் காணமுடிகிறது. பேராசிரியர் பழமையான இலக்கியங்கள் முதல் சமகால இலக்கியங்கள் வரை திறனாய்வு செய்துள்ளார். இரசனைமுறை முதல் நவீனக் கோட்பாடுகள் வரை பயன்படுத்தி அவற்றைத் திறனாய்வு செய்துள்ளார். அவை இலக்கியங்கள் குறித்த புதிய பரிணாமங்களைத் தெரிவிக்கின்றன என்பதோடு ஆய்வுநூற்களுக்கு முன்மாதிரியாகவும் திகழ்கின்றன. அவரது இலக்கிய ஆய்வு நூல்களை இனி ஆராயலாம்.

**அ) பொதுப்படையான இலக்கிய ஆய்வு:** இலக்கிய நூல்கள் மீது திறனாய்வதற்கும், உரை யெழுதுவதற்கும் அப்பால் பொதுவான இலக்கியப் போக்குகள் குறித்த அவரது நூல்களை இப்பாகுபாட்டில் கொண்டுவரலாம். இந்த பிரிவில் அவரது நூல்களான அறிவுக்கு விருந்து (சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,

திருநெல்வேலி, *1962*), இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும் (ஐந்திணைப் பதிப்பகம், சென்னை *1997*) காலமும் கவிஞர்களும் (எஸ். சுப்பிரமணியப்பிள்ளை பதிப்பகம், சென்னை, *1958*), தமிழ் இலக்கியத்தில் அறம், நீதி, முறைமை (ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, *1988*), ஆகியவற்றை உதாரணங்களாகச் சுட்டலாம். இவற்றுள் அறிவுக்கு விருந்து என்ற நூலை உதாரணமாக எடுத்துக்கொண்டு அதன் வழியாகப் பேராசிரியரின் இலக்கிய ஆய்வை விளக்கலாம். அறிவுக்கு விருந்து என்ற நூலில் இலக்கியம், திறனாய்வு, இலக்கியவரலாறு எனும் மூன்று தலைப்புகளில் விடயங்கள் பேசப்படுகின்றன. இலக்கியப் பகுதியில் கலிங்கத்துப்பரணி குறித்து இலக்கியச் செய்தியாகவும், ஆய்வுச்செய்தியாகவும் ஒருசேரப் பேசப்படுவது இலக்கிய ஆர்வலர்களையும், ஆய்வாளர்களையும் ஒருசேரக் கவர்கிறது.

> கலிங்கத்துப் பரணி கவிஞரின் கற்பனையில் இருந்து மலர்ந்த ஓர் ஈடற்ற சிறு காப்பியம். காவியத்தில் இரு வேறு உலகங்களைப் படைத்துக் காட்டுகின்றார். ஒன்று மக்கள் உலகம். மற்றொன்று பேய்கள் உலகம். 13 அத்தியாயங்களைக் கொண்டது அந்நூல்

என்று அறிமுகம் செய்துவிட்டு அந்நூலில் பேசப்படும் பொருள் குறித்து விரிவாகப் பேசுகிறது இப்பகுதி. இதே பகுதியில் தமிழ்ப்பக்திப் பாடல்கள் புதிய கோணத்தில் பின்வருமாறு ஆராயப்பட்டுள்ளமை குறிக்கத்தக்கது. "திருமணக் கோலத்தில் பெண்ணையும் மாப்பிள்ளையையும் பலவிதக் கோலங்களில் கண்டு கழிக்கும் பெற்றோர்கள் அவர்களை ஊஞ்சலில் ஏற்றி மகிழ்வதை இன்றும் நாம் காணலாம். நலுங்கு முதலிய நிகழ்ச்சிகள் எல்லாம் ஏற்படுத்தி மணமக்களை, பலர் முன்பாகச் சிறு விளையாட்டுகள் விளையாட வைப்பதெல்லாம் பெற்றோர் தம் மக்கள்பால் வைத்திருக்கும் அன்பையே காட்டுகின்றது. இம்மாதிரியாக ஊஞ்சலில் உட்கார வைத்துக் கண்டு களிக்கும் பழக்கத்தை உடைய மக்கள் ஆண்டவனையும் அவ்வாறு வைத்துக் கண்டு களித்து வருகின்றனர். தமக்குப் பிரியமாக உள்ளவை எல்லாம் ஆண்டவனுக்குப் பிரியமானவை என்று கொண்டுள்ள படியால் தானே இன்று கோவிலில் பல வித அபிஷேகங்கள் நைவேத்தியங்கள் ஆராதனைகள் முதலியவற்றைச் செய்து வருகின்றனர். பிற்காலத்தில் கவிஞர்கள் ஊசலை ஒரு தனி பிரபந்தமாகவும் செய்துள்ளனர்.' *(1)*

இந்நூல் இலக்கியவரலாறு குறித்துப் பேசும்போது தமிழ்மொழிக்கும் சமயத்துக்குமான ஆழ்ந்த தொடர்பை விளக்கியபின் பௌத்தம் மற்றும் கிறிஸ்தவம் தமிழுக்குத் தொண்டாற்றிய பாங்கை ஆய்ந்து விளக்குகிறது. இந்த நூலைப் போன்றே அவரது பிற நூற்களும் இலக்கியத்துறையில் தடம்பதித்துச் செல்வதாக அமைந்துள்ளன.

**ஆ. சங்க இலக்கியம் மற்றும் பழந்தமிழ் இலக்கியம்**: சங்க இலக்கியங்கள் உள்ளிட்ட பழந்தமிழ் இலக்கியங்கள் நவீன இலக்கியத்தினின்றும் அமைப்பு மற்றும் பொருள்நிலையில் வேறுபாடு கொண்டவை. எனவே, இவற்றைத் தனித்ததொரு வகைமையாக எடுத்துத் தொல்காப்பியம், சங்க இலக்கியங்களை நன்றாக உள்வாங்கிக் கொண்டு நவீனகாலத் தமிழில் ஆய்வுநோக்கில் அவற்றை விளக்கிச் செல்வதாக உள்ளன அவரது நூல்கள். இவற்றுள் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, அகத்திணைக் கொள்கைகள் தமிழுலகில் நிலையான தடம்பதித்து விட்டவை. காரணம், இவை தொல்காப்பியம் மற்றும் அகத்திணைக் கோட்பாடுகளை விளக்க எளிய தமிழில் தெளிவான புரிதலைத் தருகின்றன. ஒவ்வொரு பொருளிலக்கணக் கலைச்சொற்களுக்கும் விளக்கம் தந்திருப்பது சிறப்பு.

எடுத்துக்காட்டாக, அகத்திணைக் கொள்கைகள் என்ற நூலை ஒரு முன்மாதிரி நூலாக எடுத்து விளக்கலாம். இது முப்பொருள் பாகுபாடு, அகத்திணைப்பாகுபாடு, ஐந்திணைச் சூழல், நிலமும் ஒழுக்கங்களும், திணை மயக்கம், களவு பற்றிய விளக்கம், இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியின் கூட்டம், தோழியிற் கூட்ட மரபுகள், கற்புப் பற்றிய விளக்கம், திருமண முறைகள், கரணம் பற்றிய குறிப்புகள், இல்லற நெறி, பிரிவு வகைகள், ஐந்திணையில் பரத்தமை, கற்பியல், மரபுகள், கைக்கிளை, பெருந்திணை, அகத்திணை மாந்தர், அகத்திணைப் பாடல் என அகத்திணை குறித்து அனைத்து விடயங்களையும் தெரிவிக்கிறது.

இந்நூலில் பேராசிரியரது கைவண்ணம் பல இடங்களில் வெளிப்படும். எடுத்துக்காட்டாக, தொல்காப்பியம் நிலத்தையும் காலத்தையும் இணைத்துச் சொல்லும் பாங்கிற்குச் சரியான விளக்கம் தருவதைச் சுட்டலாம். "ஒரு செயல் செவ்வனே நடைபெற இடமும் காலமும் இன்றியமையாதவை. காலமும் இடமும் இன்றியமையாமை கருதியே அவை முதல்பொருள் என்று

தொல்காப்பியரால் வழங்கப்பெற்றுள்ளன. சிறுபொழுது என்பது ஒரு நாளில் ஆறு கூறிட்ட பகுதிகள். இவற்றை வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என்று குறிப்பிடுவர். வைகறை என்பது இராப்பொழுதின் பிற்கூறு. விடியலாவது பகற்பொழுதின் முற்கூறு. எற்பாடு என்பது பகற்பொழுதின் முற்கூறு. நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு. யாமம் என்பது இராப் பொழுதின் நடுக்கூறு. ஒவ்வொரு பகுதியும் பப்பத்து நாழிகைகள் கொண்டது (2) இது போலவே சங்க இலக்கியம் சார்ந்த அவரது நூல்கள் நுணுக்கமாக செய்திகளைத் தருகின்றன.

**இ. திறனாய்வு:** தான் எடுத்துக் கொண்ட இலக்கிய நூல்களில் பேசப்படும் பொருண்மைகள், அவற்றின் இயல்பு, பயன், நயம், முக்கியத்துவம் போன்றவற்றைச் சரியாகத் திறனாய்வு செய்துள்ளார். இலக்கியங்களோடு தொடர்புடைய பிற துறைகள் குறித்த ஏராளமான செய்திகளை அவரது திறனாய்வுநூல்களில் காணலாம். அவரது திறனாய்வு நூல்களாகக் கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள், அகத்திணைக் கொள்கைகள், கண்ணன் பாட்டுத் திறன், பாஞ்சாலி சபதம் ஒரு நோக்கு, குயில் பாட்டு ஒரு மதிப்பீடு, புதுக்கவிதை நோக்கும் போக்கும், பாரதீயம், விட்டுச் சித்தன் விரித்த தமிழ், ஆழ்வார்களின் ஆரா அமுது, பாட்டுத் திறன், சடகோபன் செந்தமிழ், பழங்காலப் பைந்தமிழ், வட வேங்கடமும் திருவேங்கடமும், பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், கவிஞர் வாலியின் அவதார புருஷன்- ஒரு மதிப்பீடு, வாழும் கவிஞர்கள், பாவேந்தரின் பாட்டுடைத் திறன், பாண்டியன் பரிசு- ஒரு மதிப்பீடு, கவிமணியின் தமிழ்ப்பணி- ஒரு மதிப்பீடு, பல்சுவை விருந்து, கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி- ஒரு மதிப்பீடு, அண்ணல் அனுமன், மூவர் தேவாரம் -புதிய பார்வை, கவிஞர் வாலியின் ராமானுஜக் காவியம்- ஒரு மதிப்பீடு, வாழும் தமிழ்க் கவிஞர்கள், பல்சுவைக் கதம்பம், கவித்திறன் ஆகியவற்றைச் சுட்டலாம். மூலநூல்களில் பேசப்படும் செய்திகளை முன்னிறுத்தி அவை தொடர்பாகப் பேராசிரியர் முன்வைக்கும் கருத்துரைகள் சிறந்த திறனாய்வாக உள்ளன. அவரது திறனாய்வின் சிறப்பிற்குப் பாண்டியன்பரிசு- ஒரு மதிப்பீடு எனும் நூலிலிருந்து இவண் உதாரணமாகக் காட்டப்படுகிறது.

"மூடப் பழக்கத்திலும் மடமையிலும் ஆழ்ந்து கிடக்கும் சமுதாய அமைப்பை மாற்றியமைக்க எண்ணும் கவிஞர் அமைதியான முறையில் சமூகம் மாறாது என்று கருதுகின்றார். சமூகம் இதற்குப் பொருந்தி வராது என்று நம்பி தீவிரவாதத்தை ஆதரிக்கின்றார்"

மக்களை வீழ்த்தும் கொடுமை தீரா இந்த
ஆட்சிக்குப் புறம்பாய் நான் இருக்கும் போதே
அற்றது கால்! அரசு பெற்றால் உயிர் போம்
என்ற வீரப்பனது கூற்றால் அறிய முடிகின்றது.

சாதாரணமாக அறத்திற்குப் போராடி வெற்றி காண முடியாதவர்கள் சமுதாய மாற்றத்தை வன்முறை மூலம் நிறைவேற்ற முயல்கின்றனர் என்பதை இக்கால நிகழ்ச்சிகள் குறிப்பாகக் காட்டுகின்றன. ஆயினும் வீரப்பன் இவற்றிற்கும் விதிவிலக்காக அமைகின்றான். சாதி, சமயம், சமத்துவம், விடுதலை, பகுத்தறிவு, பொதுவுடைமைப் புரட்சி மாற்றம் காணவிரும்பும் ஒரு புரட்சியாளன் கூற்றாகவே அமைகின்றது வீரப்பன் தன் தோழனிடம் பேசும் பேச்சு. வீரப்பன் என்ற காவிய மாந்தனின் வாயிலாகக் கருத்துக்களைப் பரப்பியிருப்பது எருமை மாட்டின் மீது மழை பெய்தது மாதிரி எதற்கும் அசையாத இன்றைய சமூகத்திற்கு- அதில் அமைந்திருக்கும் மெத்தனமாக இருக்கும் அரசியலின் போக்கிற்கு - ஒரு சாட்டையடி கொடுப்பது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது"(3)

இவ்வாறு பேராசிரியரது திறனாய்வு நூல்கள் அனைத்துமே பொருத்தமான விளக்கங்கள் கொடுப்பவையாக உள்ளன.

**ஈ. பயண இலக்கியம்**: இலக்கியத்தின் பாற்பட்டதே பயண இலக்கியம் என்றாலும் எல்லா இலக்கியப்படைப்பாளிகளும் பயண இலக்கியங்கள் எழுதவில்லை என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். பேராசிரியர் பயணத்திலும் ஆன்மீகயாத்திரையிலும் ஈடுபட்டுத் தமது எழுத்து வழியாக, தாம் பார்த்தவற்றை வெளிப்படுத்தியுள்ளார். பயணத்தின் போது தமக்கு ஏற்பட்ட அனுபவம், பார்த்த இடங்கள் மற்றும் பொருள்கள், அவற்றின் முக்கியத்துவம் போன்றவற்றை எழுதுவது என்பது வாசிப்போரை ஆர்வத்தோடு வாசிக்கச் செய்வதாக இருக்கவேண்டும். அத்தகைய தன்மை பெற்ற சிறந்த பயணநூல்கள் தமிழில் குறிப்பிடத்தக்களவில் உள்ளன. அவற்றுள் பேராசிரியரின் பயண இலக்கிய நூலான எனது அமெரிக்கப் பயணம் நூலையும் உட்படுத்தலாம். தமது வயதான காலத்திலும் கூட எழுத்தின் மீதான ஆர்வத்தால் எழுதிய அந்நூல் பயண இலக்கிய ஆர்வலர்களைக் கவர்வதாக உள்ளது. அந்நூலில் தாம் பார்த்த இடங்களை வர்ணிப்பதோடு தேவைப்படும் இடங்களில் கூடுதலாக வரலாற்றுச் செய்திகளையும் பதிவு செய்துள்ளார்.

**2. உரைஎழுதுதல்:** உரைஎழுதுதல் இலக்கிய ஆய்வின் பாற்பட்டது என்றாலும் கூட, மூலநூலுக்கு அல்லது செய்யுள்களுக்கு நெருங்கி நிற்கும் பொருள் தருதல், தான் கற்ற அல்லது அனுபவங்களிலிருந்து காலத்திற்கேற்ற விளக்கம் தருதல், தனது அறிவு, தனது காலத்தில் நிலைநிற்கும் மொழிபிரயோகம் போன்றவற்றை ஒருங்கிணைத்துக் கொள்ளுதல் ஆகியவற்றை உட்படுத்தி எழுதும்போதுதான் அந்த உரை வெற்றிபெறும். மிகப் பழங்காலத்திலிருந்தே தமிழுலகில் தொடர்ச்சியாக நிகழ்ந்து வரும் உரையெழுதுதல் ஒருவகையான மொழிசார்ந்த ஆய்வின் விளைவே என்பதில் ஐயமில்லை. இலக்கியத்துறையில் ஈடுபடுவோர் எல்லோரும் உரையெழுதுவதற்கு முன்வருவதில்லை என்பது குறிக்கத்தக்கது. ஆனால் இலக்கியப் பின்புலம் கொண்ட பேராசிரியர் உரையெழுதுவதிலும் தடம்பதித்துவிட்டார்.

பழங்காலத் தமிழ்நூல்களுக்கு அன்றைய கால உரையாசிரியர்கள் உரையெழுதியிருக்காவிட்டால் அவற்றைச் சரியாக இன்றைய தமிழுலகம் புரிந்துக்கொள்ள முடியாது என்பதே உண்மை. பேராசிரியர் எழுதியுள்ள உரைகளான திருக்குறள் தெளிவுரை (தேன்மொழி பதிப்பகம், சென்னை, 1993) மற்றும் முத்தொள்ளாயிர விளக்கம் ஆகியன இருபதாம் நூற்றாண்டுக்கால நோக்கிலிருந்து எழுதப்பட்டவையாகும். அவர் எழுதிய இரண்டு உரைகளுமே சிறியவர் முதல் பெரியவர் வரை படித்து மகிழும் வகையிலான தேர்ந்த மொழிநடையமைப்பில் இருப்பது குறிப்பிடத்தக்கது. எடுத்துக்காட்டாக, அன்புடைமை அதிகாரத்தில்

> அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு

எனும் 72ஆம் குறளுக்குத் தரும் விளக்கத்தைச் சுட்டலாம். 'அன்பில்லாதவர் எல்லாப் பொருள்களையும் தாமே அனுபவிப்பர். அன்புடையவர் தம் உடம்பையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர் (4) என மிக எளிமையாக ஆனால் குறளுக்கு நெருங்கிய நிலையில் அனைத்துத் தரப்பினரும் புரிந்துகொள்ளும்படியாக விளக்கம் தந்திருப்பதைக் கவனிக்கலாம். அவரது திருக்குறள் தெளிவுரைநூல் முழுவதும் இவ்வாறே இருப்பதைக் காணமுடிகிறது.

அது போலவே முத்தொள்ளாயிர உரையையும் (திருவேங்கடவன் பல்கலைக்கழக வெளியீடு, திருப்பதி, 1965) சுட்டலாம். 1965இல் வெளிவந்த இந்நூலில் தமக்கேயுரித்தான இரசனை முறையில் சாதாரண மனிதன் முதல் ஆய்வாளர் வரையும்

எல்லாத்தரப்பினரும் வாசிப்பதற்கேற்ற வண்ணம் உரை எழுதியிருப்பது குறிக்கத்தக்கது. மொத்தம் 108 உள்தலைப்புகளில் முத்தொள்ளாயிரச் செய்யுள்களுக்கு உரை தரப்பட்டுள்ளன. ஊடல் விளைவித்த செயல், பாண்டியனின் ஆணை, அதிசயமான கணக்குப்பிள்ளை, இரண்டு கொம்புகள் எதற்கு, யானையின் ஓட்டம் என்பது போன்ற தலைப்புகள் செய்யுள்களின் உட் கருத்தினைப் பிரதிபலிப்பவையாக உள்ளன.

செய்யுள்களை விளக்கும் முன்னர் கதையைப் போலக் கருத்தைச் சொல்லி அதற்குப் பிறகு விளக்கம் தரும் பாங்கு சிறப்பாக உள்ளது. எடுத்துக்காட்டாக, இரண்டு கொம்புகள் எதற்கு என்ற தலைப்பின் கீழ் விளக்கப்பட்ட செய்யுளைச் சுட்டலாம். முதலில் கதையைப் போல செய்யுள் சுவைபட விளக்கப்படுகிறது. கடலையொத்த பாண்டியனது படைகள் மாற்றார் மதிலை முற்றுகையிடுகின்றன. பாண்டியனுடைய மலைபோன்ற யானையைக் கண்டவுடன் பகைவர்களுக்குப் பெருத்த அச்சம் ஏற்படுகிறது. கதவை அடைத்துக் கொண்டு கோட்டைக்குள்ளேயே இருந்து விடுகின்றனர். போரில் அடிக்கடி ஈடுபட்டு ஈடுபட்டு யானைக்கும் பகைவர்களின் கைவரிசை நன்கு பழக்கமாகிவிடுகிறது. ஒரு கோட்டால் கோட்டைவாயிலைத் தகர்த்தெறிகின்றது. மற்றொரு கோட்டால் பகைவருடைய மார்பைப் பிளந்து விடுகின்றது. *(5)* இது போன்று கதைவடிவில் உரையெழுதியபின் செய்யுளும் அதற்குரிய சொல்பொருள் விளக்கமும் பின்வருமாறு தரப்படுகிறது:

உருவத்தார் தென்னவ னோங்கெழில் வேழத்
திருங்கோடுஞ் செய்தொழில் எண்ணில்- ஒருகோடு
வேற்றா ரகல முழுமே யொருகோடு
மாற்றார் மதில் திறக்குமால்.

உருவத்தார் தென்னவன்- அழகிய மாலையணிந்த பாண்டியன், ஓங்கு எழில் வேழத்து- உயர்வும் அழகும் பொருந்திய யானையின், எழில்- வளர்ச்சியோடு கூடிய அழகு, ஓங்கு எழில், உருவ வளர்ச்சியையும் அழகு வளர்ச்சியையும் உணர்த்துகிறது. வேழம் -யானை.

கோடு- கொம்பு, வேற்றார்- பகைவர், அகலம்-மார்பு, மாற்றாருடைய மார்பாகிய வயலில் கொம்பாகிய கலப்பையால் உழாநிற்கும் என்றவாறு. மாற்றார்- பகைவர். மதிற்கதவினைக் கோடாகிய திறவுகோலால் திறவா நிற்கும். ஆல் அசை கொண்டது.*(6)*

பேராசிரியரின் இந்த உரைவிளக்கத்தை முன் மாதிரியான ஒன்று என்றே கூற வேண்டும். காரணம் அவருடைய காலத்தில் பழஞ்செய்யுட்களுக்கான உரைகள் பண்டித நடையிலேயே இருந்ததால் அவை சாதாரண மக்களிடம் சரியானபடி சேரவில்லை. ஆனால், பேராசிரியரின் இந்தப் புதிய அணுகுமுறை அந்த குறையைத் தீர்த்துவைத்தது என்பதுடன் ஒரு முன்மாதிரியாகவும் திகழ்ந்து வருகிறது. முத்தொள்ளாயிரத்திற்கு இது போன்ற முறையில் வேறு யாரும் உரை எழுதவில்லை என்பதால் உரையெழுதுவதில் பேராசிரியர் தமக்கே உரித்தான தடத்தைப் பதித்துள்ளார் என்பது உறுதியாகிறது. அது போலவே அர்த்தப் பஞ்சகம் (வேங்கடம் பதிப்பகம், சென்னை 1994) எனும் வைணவ நூலுக்கும் சிறப்பானதொரு உரையெழுதியுள்ளார். எல்லாவற்றிற்கும் மேலாக வைணவ உரைகள் பற்றி மதிப்பீடு செய்த பேராசிரியர், வைணவ உரைவளம் (கம்பநிலையம், தஞ்சாவூர், 1985) என்ற தலைப்பில் ஒரு நூலையே எழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

**3. கல்வியியல்:** பேராசிரியர் ஆய்வுப்பணியையும், கல்வியையும் இரு கண்களாகப் பாவித்தவர். கற்பித்தல் தொடர்பாக அவர் எழுதிய நூல்கள் இன்றும் நடைமுறைக்கேற்றவாறு உள்ளன. அவர் ஆசிரியப் பணி தொடங்கிய காலத்தில் கற்றல், கற்பித்தல் தொடர்பான நூல்கள் எல்லாமே ஆங்கிலத்தில்தான் இருந்தன. அவை அந்தக் காலத்து ஆசிரியப் பயிற்சி மாணவர்களுக்கும் பிற மாணவர்களுக்கும் போதுமான அளவு போய்ச் சேரவில்லை. அந்த ஆங்கில நூல்களை ஆழ்ந்து படித்து ஆழங்கால் பட்ட பேராசிரியர் கல்விக்கோட்பாடு அடிப்படையிலும், தமது ஆய்வு மற்றும் அனுபவ அடிப்படையிலும் கவிதை பயிற்றும் முறை, தமிழ் பயிற்றும் முறை, அறிவியல் பயிற்றும் முறை, கல்வி உளவியல், கல்வி உளவியல் கோட்பாடுகள், கவிதை அனுபவம் எனும் நூல்களை எழுதினார். இது மாணவர்களுக்கு வரப்பிரசாதமாக அமைந்ததோடு, பிற்காலத்தில் எழுந்த கல்வித்துறை நூல்களுக்கும் முன்னோடியாக அமைந்தது. இது குறித்து ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

**4. உளவியல்:** பேராசிரியர் உளவியலிலும் ஆர்வம் கொண்டிருந்தவர். எனவே, அது தொடர்பான ஆங்கில நூல்களைக் கற்று எழுதிய கல்விஉளவியல், கல்வி உளவியல் கோட்பாடுகள் ஆகிய நூல்கள் முதன்முதலில் தமிழில் ஆசிரியப்பயிற்சி மாணவர்களுக்கும் ஏனையோருக்கும் புதிய அறிவுவெளிச்சம்

தந்தன. கல்வி உளவியல் நூலானது கல்விக்கும், கல்வி உளவியலுக்கும் இடையேயான தொடர்பு, குழந்தைகளின் மன வளர்ச்சி, வளர்ச்சிப் பருவங்கள், குழந்தைகளை உற்றுநோக்கும் விதம், உள்ளத்துக்கும் உடலுக்குமுள்ள தொடர்பு, மனமுதிர்ச்சிக்கும் கற்றலுக்கும் இடையேயான உறவு, ஊக்குநிலை, உள்ளக் கிளர்ச்சிகளைக் கட்டுப்படுத்தல், கல்வியில் விளையாட்டுமுறை, கற்றலின் அடிப்படை இயல்பு, செயல் திட்டமும் செய்துகற்றலும், கற்றலில் அடங்கிய மூலக்கூறுகள், அறிதிறன் முறைகள், இயல்பு பிறழ்ந்த நடத்தை, ஒழுக்க வளர்ச்சி, தேர்வு மூலம் மதிப்பீடுசெய்தல் எனப் பல்வேறு கல்வி உளவியல் செய்திகளைத் தருகிறது. அது போலவே கல்வி உளவியல் கோட்பாடுகள் நூலும் பல்வேறு கோட்பாடுகளைப் பற்றிப் பேசுகின்றது.

**5. அறிவியல் துறை:** ஒரு மொழியின் வளர்ச்சி என்பது அச்சமூகம் பெற்றுள்ள வளர்ச்சியைப் பிரதிபலித்து நிற்பதாகும். மொழியின் வளர்ச்சி அச்சமூகத்திலிருந்து எழுந்த சிந்தனைகள், கண்டுப்பிடிப்புகள், இலக்கியங்கள் பல்வேறு துறைகளிலிருந்து உருவெடுப்பதாகும். பேராசிரியர் அறிவியலிலும் ஆழ்ந்த அறிவுடையவராயிருந்தார் என்பதால் காலத்திற்கேற்ற அறிவியல் நூல்களைத் தரமுடிந்ததோடு அவை மூலநூற்களாகவே திகழ்கின்றன. அவை பேசும் அனைத்துக் கருத்துக்களுமே நம்பகத் தன்மையானவை. நம்பகத்தன்மை என்ற வாக்கு முக்கியமானது. காரணம் அறிவியலில் இடம்பெறும் ஒவ்வொரு சொல்லாட்சியும் நுணுக்கமானது. இதை உணர்ந்து இருந்ததாலோ என்னவோ பேராசிரியர் அறிவியல் செய்திகளைத் துல்லியத்தன்மையுடன் விவரித்துச் செல்கிறார். அவரது தமிழ்மொழிப்புலமை அறிவியல் நூல்கள் வெற்றிகரமாக வெளிவருதற்குக் காரணமாக அமைந்துள்ளது. அவர் எழுதிய காலத்தில் பல அறிவியல் துறைகள் வளர்ச்சி அடைந்து கொண்டிருந்தன என்பதை இவண் குறிப்பிட்டாக வேண்டும். குறிப்பாக, அவர் விண்வெளித்துறை குறித்து எழுதிய நூல் *1960*களில் வெளிவந்துவிட்டது. அந்தக் காலத்தில் நிலவிய விண்வெளித் துறை பற்றிய அறிவை உரிய காலத்தில் தமிழர்களிடம் சேர்த்த பெருமையை அது பெறுகிறது.

அறிவியல் உண்மைகள் மற்றும் விதிகளை உள்ளது உள்ளபடி என்ற முறையிலேயேதான் எழுதவேண்டும். அது மிகச் சவாலான பணியாகும். குறிப்பாக, விதிகளை உள்வாங்கி எழுதும்போது சிறு பிசகு ஏற்பட்டாலும் அது மொத்தப் புரிதலையே

மாற்றியமைத்துவிடும். பேராசிரியரின் நூல்கள் ஒரு துறைசார்ந்து இயங்க விரும்பும் மாணவனுக்கு அந்தத் துறை சார்பாகத் தொடக்கநிலையில் இருந்து இறுதிநிலை வரை ஒவ்வொரு விடயத்தையும் படிப்படியாக எளிமையான மொழிநடையில் புரியத்தக்க விதத்தில் விவரித்துச் செல்கின்றன. அந்த மொழிநடை என்பது அறிவியல் மொழிநடையின் தன்மையைக் கொண்டிருக்கும். அதாவது சொல்ல வந்த விஷயத்தை எவரும் எளிதில் புரிந்து கொள்ளத்தக்க, பொருள் மயக்கம் தராத நிலையில் இருக்கும்.

அவரது தொலைக்காட்சி, வானொலி, ராக்கெட், அம்புலிப் பயணம் குறித்த நூல்கள் இலக்கியச் சுவையோடு எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. அம்புலிப்பயணம் நூல் (சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 1973) சந்திரனைப் பற்றிய சுவையான செய்திகளை விளக்கிவிட்டு, அமெரிக்கா சந்திரனுக்கு அப்போலா ராக்கெட் அனுப்பிய விதத்தை விரிவாக விவரிக்கிறது. தமிழில் இப்படி வெளிவந்த முதல்நூல் இதுதான். இந்த நூலில் சந்திரன் பற்றிய அடிப்படைகளைக் கூறிவிட்டு ராக்கெட்டுகள் செயல்படும் விதம், அமெரிக்கா ரஷியா நாடுகள் எந்தெந்த ஆண்டுகளில் என்னென்ன நோக்கில் ராக்கெட்டுகளை அனுப்பின என்பதையும் சந்திரனில் மனிதன் கால்பதித்த வரலாற்றையும் விரிவாக விளக்குகிறது. குறிப்பாக யார் யார் எந்த ராக்கெட்டுகளில் எப்படிப் பயணித்தனர் என்பதை நுணுக்கமாக விவரிக்கிறது.

அவரது நூல்கள் எந்த அளவுக்கு ஆழமானவை என்பதை அவரது அணுவின் ஆக்கம் (எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை பப்ளிஷர்ஸ், 1958) என்ற நூல்மூலம் அடையாளப்படுத்தலாம். அணு ஆயுதம் மற்றும் அணுக்கழிவுகள் பல்கி விட்ட இந்தக் காலத்தில் 1958இல் எழுதப்பட்ட அந்த நூல் அணுவைக் குறித்து நுணுக்கமாக விவரிப்பதோடு அதை எவற்றிற்கெல்லாம் பயன்படுத்தலாம் என்பதையும் அழகாக விவரிக்கிறது. அணுவின் அற்புத ஆற்றல், அணுவின் அமைப்பு, ஆற்றல் கழிவில் அடங்கிய ஆற்றலும் தொடர்நிலை விளைவும், அணு எரியைகள், அணு உலைகள், மின்னாற்றல், கதிரியக்கம், கதிரியக்க ஓரிடத்தான்கள், அணு ஆராய்ச்சிக் கருவிகள், உயிரியமும் அணுவும், மருத்துவத் துறையில் அணு, தொழில் துறையில் அணு, எதிர்காலத்தில் அணு என்ற பொருண்மைகளில் பல்வேறு விஷயங்களைப் பேசுவதன் மூலம் அதன் சிறப்புப் புலனாகிறது. அணு உலைகள், மின்னாற்றல், கதிரியக்கம் என்றெல்லாம் 1958இல் பேசிவிட்ட இந்த நூலின் கருத்துக்கள், தற்காலத்தில் தமிழகத்தில் கூடங்குளம்

அணுமின்நிலையமாக நடைமுறையில் இருப்பதைக் காணும்போது பேராசிரியரின் அறிவியல் நூற்களின் மீது மதிப்பேற்படுகிறது.

விஞ்ஞானத்தைப் பொறுத்தவரை கலைச் சொல்லாக்கம் ஓர் அரிய கலை. அதற்குப் பொருளறிவும் பன்மொழியறிவும் இருந்தால்தான் சாத்தியம். உரிய முறையில் சொற்கள் அமைந்து விட்டால் அவை என்றும் வாழும். இல்லையென்றால் வீழும். எல்லா நிலைகளிலும் அறிவியல் தமிழ்மொழியில் பயிற்றப்பெறும் பொழுதுதான் உயர்ந்த கலைச்சொற்கள் அமையும் வாய்ப்புகள் உண்டாகும். அந்த வகையில் தாம் எழுதிய நூல்களுக்கேற்பப் பொருத்தமான கலைச்சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். சில கலைச்சொற்களை அவரே உருவாக்கவும் செய்துள்ளார்.

பேராசிரியர் எழுதிய 136 நூல்களில் 17 நூல்கள் அறிவியல் சார்ந்தவை. அவையாவன: அணுவின் ஆக்கம், மானிட உடல் (மொழிபெயர்ப்பு), இளைஞர் வானொலி, அதிசய மின்னணு, இராக்கெட்டுகள் இல்லற நெறி, இளைஞர் தொலைக்காட்சி, அணுக்கரு பௌதிகம் (மொழிபெயர்ப்பு), நமது உடல், அறிவியல் விருந்து, அம்புலிப்பயணம், அறிவியல் தமிழ், தொலை உலகச் செலவு, வாழையடி வாழை, தமிழில் அறிவியல் - அன்றும் இன்றும், விண் வெளிப்பயணம், தமிழில் அறிவியல் செல்வம்

இவற்றுள் நான்கு நூற்களை மட்டும் விளக்கி அவற்றின் முக்கியத்துவத்தை உணரச்செய்யலாம்.

**அதிசய மின்னணு**: மனிதனின் அன்றாட வாழ்க்கை முதல் அவன் வானுலகைத் துருவித் துருவி ஆராய்வதுவரை மின் அணுவின் ஆற்றல் எவ்வாறெல்லாம் பயன்படுகின்றது என்பதை மிகத்தெளிவாக விளக்கப் படங்களுடன் சிறுவர்கள் படித்துப் பயன்பெறும் வகையில் இந்நூல் வழங்குகின்றது. விஞ்ஞானக் கருத்துகள் இளமையிலேயே சிறுவர்கள் உள்ளத்தில் கால்கொளச் செய்யும் பெருநோக்கோடு எழுதப்பெற்றுள்ள இந்நூலில் கலைச்சொல் விளக்கம் மற்றும் பொருட் குறிப்பு அகராதி பின்னிணைப்புகளாக இணைக்கப் பெற்றுள்ளன. இந்நூலில் எவரும் புரிந்துகொள்ளும் அளவிற்கு எளிமையான மொழிநடை காணப்படுவது குறிக்கத்தக்கது. எ.கா. "உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் மின்னணுக்களாலானவை. மேசை, நாற்காலி, கண்ணாடி போன்ற உயிரில்லாத பொருள்களும் மரம், செடி, கொடி, பிராணிகள் போன்ற உயிருள்ள பொருள்களும் மின்னணுக்க

ளாகும். எனவே, பொருள்கள் எந்த வடிவத்திலிருப்பினும் அவை மின்னணுக்களாலானவை என்பதை நாம் அறிதல் வேண்டும்.

மின்னணுக்கள் உண்மையிலேயே மிக நுண்ணிய துகள்கள். அவை நகர்ந்துகொண்டே இருக்கும் தூய்மையான மின் பொறிகள் ஆகும். நம்முடைய பூமி, செவ்வாய், புதன் போன்ற அண்டங்கள் யாவும் சூரியனைச் சுற்றி இயங்குகின்றன என்பதை நாம் அறிவோம். இங்ஙனமே, மின்னணுக்களும் ஒரு கதிரவனைச் சுற்றி இயங்குகின்றன. இந்தக் கதிரவன்தான் உட்கரு (nucleus) என்பது. நம்முடைய பூமியைச் சூரியனிடமிருந்து தனியாகப் பிரிக்கவே முடியாது. உட்கரு என்ற சூரியனிடமிருந்து மின்னணுக்களைப் பிரிக்கும் முறையை மக்கள் அறிவதற்குப் பன்னெடுங் காலம் ஆயிற்று.'' (7) இது போன்ற எளிய அறிவியல் மொழிநடையை அவரது நூற்களில் காணலாம்.

**இராக்கெட்டுகள்**: இந்நூல் சிறுவர்களை ஈர்க்கும் வண்ணம் பல படங்களை உள்ளடக்கிப் பல்வேறு சுவையான தகவல்களைக் கொண்டுள்ளது. இராக்கெட் எப்படிக் கண்டுபிடிக்கப் பெற்றது? இதன் கதை என்ன? இதனை இயக்குவது எங்ஙனம்? இதன் அமைப்பு என்ன?'' ஏவுகணைகள் என்றால் என்ன? இன்ன பிற செய்திகளைச் சுருக்கமாகவும், விளக்கமாகவும் கூறிச் செல்கின்றார், பேராசிரியர். இந்நூலில், வாசகர்களுக்குப் பெரிதும் பயன்பெறும் வகையில் 'கலைச்சொற்கள் விளக்கம்' (ஆங்கிலச் சொற்களுடன்) பின்னிணைப்பாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

**நமது உடல்**: உடல் பற்றி விளக்கும் போது "இந்த உலகில் நாம் இவ்வுடல் வாழ்க்கையைச் செவ்வனே கொண்டு செலுத்துவதற்கு வேண்டிய கருவி கரணங்கள் யாவும் நாம் பிறக்கும்பொழுதே இவ்வுடலில் அமைந்துள்ளன.'' என்று கூறும் பேராசிரியர் 'இதயம், இரத்தம், மூளை, நரம்புகள், நுரையீரல்கள், இரைப்பை, சிறுநீரகங்கள், கல்லீரல் முதலியவை செயல்படும் முறையைப் பல்வேறு விளக்கப்படங்களின் துணைகொண்டு மிகஎளிய நடையில் விளக்கியுள்ளார். உயிர்நிலையான இவ்வுறுப்புக்கள் யாவும் சரியான நிலையில் இருக்கவேண்டியதன் அவசியத்தை இந்நூல் வலியுறுத்துகின்றது. உயிர்நிலையான இந்த உறுப்புகள் அனைத்தும் சரியான நிலையிலிருப்பின் சாதாரணத் தேவைக்கேற்றவாறும், எதிர்பாராது ஏற்படும் தேவைக்கேற்றவாறும் வியத்தகு முறையில் செயல்படும் முறையைப் பேராசிரியர் விளக்கப் படங்களுடன் எடுத்துரைக்கின்றார். நூலைப் படிக்கும் சிறுவர்கள்

பெரிதும் பயன்பெறும் வகையில் 'கலைச்சொற்கள் விளக்கம்' (ஆங்கில சொற்களுடன்) பின்னிணைப்பாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

**வாழையடி வாழை:** இந்த நூல்(மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1984) மனித உடலமைப்பை அறிவியல் பார்வையுடன் விளக்குகிறது. உயிரணு, கரு, நிறக்கோலன்கள், ஜீன்கள், முகத்தோற்றம், நோய் மனமுடையோர், இரட்டைப்பிறவிகள் என நாம் அறிந்திருக்க வேண்டிய உடல் சார்ந்த அடிப்படை உண்மைகளை விளக்கிச் சொல்கிறது.

அறிவியல் அணுகுமுறை சார்ந்த ஆய்வைப் பிற துறைகளுக்கும் பயன்படுத்த வேண்டும் என்ற உறுதியான சிந்தனை பேராசிரியருக்கு இருந்தது. அதனைக்கருத்தில் கொண்டு எழுதிய அவரது நூற்கள் பின்வருமாறு: அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம், அறிவியல் பயிற்றும் முறை, அறிவியல் தமிழ், அறிவியல் விருந்து, தமிழில் அறிவியல்-அன்றும் இன்றும்.

**6. மொழிபெயர்ப்பு**: அறிவுப்பரவல் உலகம் முழுவதும் நிகழ்வதற்கு அடிப்படைக் காரணம் மொழிபெயர்ப்பே என்பதில் ஐயமில்லை. தமிழைப் பொறுத்தவரையில் அறிவியல் கொள்கைகள் மற்றும் தொழில்நுட்பம் சார்ந்த கருத்துக்கள் கொண்ட நூல்களை உடனுக்குடன் மொழிபெயர்ப்புச் செய்யும் போக்கு முடிந்த அளவு நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. ஆனால், பேராசிரியரின் காலத்தில் அறிவியல் மொழிபெயர்ப்பாளர்கள் தமிழில் அதிகமில்லை. தற்போதைய நிலையில் அறிவியல் நூல்கள் அறிவியலாளர்களால் தான் தமிழுக்கு மொழிபெயர்க்கப்படுகின்றன. கணினி மயமாகிவிட்ட இந்தக் காலத்தில் கூட மொழிபெயர்ப்புகள் ஓரளவு நடந்து வருகின்றன என்றாலும் 1980-கள் வரை மொழிபெயர்ப்பு என்பது சவாலாகவே இருந்துள்ளது. அத்தகைய நிலையில் தமிழாசிரியர்ப் பணி செய்யும் ஒருவர் அணுசம்பந்தமான நூலைத் தமிழுக்கு மொழிபெயர்ப்பது என்பது நினைத்துக்கூடப் பார்க்கமுடியாது. ஆனால் அதைத்தான் பேராசிரியர் சாதித்துக்காட்டினார்.

Nuclear Physics என்ற அறிவியல் நூலினை 1966இலேயே மொழிபெயர்த்து வெளியிட்டமை தமிழ்மொழிபெயர்ப்புலகில் நிச்சயமாக ஒரு மைல்கல்தான். அணுக்கரு பௌதிகம் (தமிழ்ப் புத்தகாலயம், 1966) என்ற தலைப்பில் வெளிவந்த அந்த நூலுக்கு, சுதந்திரப் போராட்ட வீரரும் முன்னாள் தமிழக முதல்வருமான ராஜாஜி அவர்கள் பாராட்டுரை எழுதியுள்ளார். "I can understand

the difficulties of a translator of scientific books and I tend my congratulations to prof. N. Subbureddiar aunties having one day price for the best translation of Heisenberg's nuclear physics. *(8)* இந்த மொழி பெயர்ப்பு நூல் அணுக்கொள்கை மூலக்கூறுகளும், அணுக்களும் கதிரியக்கமும், அணுக்கருவில் துகள்கள், அணுக்கருக்களின் இயல்பான நிலைகள், அணுக்கரு இயக்கங்கள், அணுக்கரு பௌதீக ஆய்வுக்கருவிகள், அணுக்கரு பௌதிகத்தில் செய்முறை பிரயோகங்கள் என்ற இயல்களைக் கொண்டுள்ளது. எனவே, தமிழர்களுக்கு அணு குறித்த தெளிவான அடிப்படை அறிவை அந்தக்காலத்திலேயே கிடைத்துவிட இந்த மொழிபெயர்ப்பு வழிசெய்துவிட்டது என்று சொல்லமுடிகிறது. நிச்சயமாக இந்நூல் அணு தொடர்பான தமிழ் நூல்களுள் நிரந்தரமான தடம் பதித்து விட்டது என்றே கூறமுடிகிறது.

அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல், சி.ஆர்.ரெட்டி, வேமனர் எனும் அவரது மொழிபெயர்ப்பு நூல்களும் கவனத்திற்குரியவை.

**7. சுயசரிதை:** வரலாற்றைக் கட்டமைக்க, அதாவது வரலாற்று நூல்களை எழுதப் பல்வேறு விதமான ஆவணங்கள் பயன்படுகின்றன. இலக்கியங்கள், அகழ்வாராய்ச்சியில் கிடைக்கும் பழம்பொருட்கள், செப்பேடுகள் எனப் பல்வேறு ஆவணங்கள் வரலாறு எழுதப் பயன்பட்டாலும் சுயசரிதை நூல்கள் உண்மைக்கு நெருங்கியவனாகக் கருதப்படுகின்றன. ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்பு, உ.வே. சாமிநாதையரின் என் சரித்திரம், பாபரின் பாபர்நாமா போன்ற நூல்கள் வரலாறு எழுதப் பயன்படுவதோடு ஒரு குறிப்பிட்ட காலத்தை அறிவதற்கான வரலாற்று நூல்களாகவும் திகழ்கின்றன. இந்த வரிசையில் பேராசிரியரின் சுயசரிதை நூலான நினைவுக்குமிழிகளையும் இணைத்துக் கொள்ளலாம். வரலாற்றுப் பிரக்ஞை கொண்டவர்களால்தான் சுயசரிதை எழுத முடியும். அவை பொதுவான வரலாற்று உண்மைகளைத் தெரிவிப்பதோடு ஒரு காலகட்டத்தில் தனிமனித வாழ்வு எவ்வாறு இருந்தது, சமூகம் எவ்வாறு இருந்தது என்பதைப் புரிந்து கொள்ளவும் உதவுகின்றன. அவ்வகையில் பேராசிரியரின் நீங்காத நினைவுகள், நினைவுக் குமிழிகள் ஆகிய சுயசரிதை நூற்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. நினைவுக்குமிழிகள் தமிழக அரசின் சிறந்த நூலுக்கான விருதையும் பெற்றுள்ளது. இந்த சுயசரிதை பாகம் 1, 2, 3, 4 (பாரிநிலையம், சென்னை1988) என நான்கு பகுதிகள் கொண்டது. அவரது பிறப்பு, பிள்ளைப் பருவத்தில் நிகழ்ந்தவை, பள்ளி கல்லூரிப் படிப்பு, பள்ளித் தலைமையாசிரியராகப் பணியாற்றியமை, தமது வாழ்வின்

உயர்வு தாழ்வுகள், அவர் சந்தித்த பல்வேறு துறை சார்ந்த ஆளுமைகள், அவர்களது பண்புகள் போன்றவற்றை வெளிப்படையாகவே பதிவு செய்துள்ளார். அவரது அனுபவங்களாக இருந்தாலும் அக்காலத்தில் நிலவியிருந்த சமூகம் மற்றும் அரசியல் போக்குகளைப் புரிந்து கொள்ளவும் உதவுகிறது. அவற்றை வாசிக்கும் போது அவரது வாழ்க்கையில் ஒன்றி விடுகிறோம். சாமிநாதையரின் என் சரித்திரம் எந்தளவிற்கு ஒரு காலகட்டத்தை அறிந்துக்கொள்ள உதவுகிறதோ அது போலவே நினைவுக்குமிழிகள் நூலும்.

**8. பக்தி சார் நூற்கள்**: பக்தி பற்றிய தெளிவான புரிதலைக் கொண்டவர் பேராசிரியர். அவரே ஒரு பக்தியாளராக வாழ்ந்திருக்கிறார். எனவேதான், அவரது நூல்கள் பக்தியின் பல்வேறு பரிமாணங்களைத் தொட்டுச் செல்கின்றன. பக்தி என்றால் என்ன, பக்திக்கும் தமிழுக்குமான தொடர்பு, ஆன்மீகத்திற்கும் அறிவியலுக்குமான தொடர்பு என அவரது நூற்கள் அமைந்துள்ளன. தமிழ் இலக்கியச் செழுமைக்கு மிகவும் பெரும் பங்களித்த சைவத்தையும் வைணவத்தையும் சிறப்பு நிலையில் விவரிக்கும் வேறு நூல்களையும் அவர் எழுதியுள்ளார். குறிப்பாக, 12 ஆழ்வார்கள் மற்றும் 64 நாயன்மார்களுள் குறிப்பிடத் தகுந்தவர்களின் வாழ்க்கையையும் அவர்களின் தமிழுக்கான பங்களிப்பையும் மிக விவரமாகத் திரட்டித் தந்துள்ளார். அவ்வகையில் சைவமும் தமிழும், தம்பிரான் தோழர் (வேங்கடம் பதிப்பகம், சென்னை, 1985), சடகோபன் செந்தமிழ் (வேங்கடம் பதிப்பகம், சென்னை, 1989) ஆகிய நூற்கள் குறிக்கத்தக்கவை. மேலும், அவர் திருப்பாவைக்கு உரையும் எழுதியுள்ளார். எனவே, பேராசிரியரை உரையாசிரியர் என்றும் அடையாளப்படுத்த முடிகிறது. பக்தி குறித்த அவரது பிறநூல்கள் முத்திநெறி, சில நோக்கில் நாலாயிரம், சைவ சமய விளக்கு, ஆன்மீகமும் அறிவியலும், வைணவ உரைவளம், கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில், நவவித சம்பந்தம், அர்த்தப் பஞ்சகம், வைணவ செல்வம் தமிழும் வைணவமும், புராணங்கள், ஐந்து இரகசியங்கள் ஆகியன.

**9. தத்துவம்:** பேராசிரியர் தத்துவத்துறையிலும் தெளிவான புலமை பெற்றிருந்ததை அவரது சைவசித்தாந்தம்-ஓர் அறிமுகம், சைவவிளக்கு மற்றும் தந்தை பெரியார் சிந்தனைகள் ஆகிய நூல்கள் காட்டுகின்றன. பேராசிரியர் தத்துவத்தின்கண் ஆழங்கால்

பட்டவர் என்பதை அவரது பெரியாரது சிந்தனைகள் நூல்வழி விளக்கலாம். பெரியாரது சிந்தனைகள் மற்றும் கொள்கைகள் அரசியல் மற்றும் சமூகச் புரட்சி சார்ந்திருந்தாலும் அவை கடவுள் மற்றும் சமயம் பற்றிய தத்துவச்சிந்தனைகளுடன் இணைத்தே பேசப்படுகின்றன. தத்துவம் என்பது கடவுளின் இருப்பையும் கேள்விக்கு உட்படுத்துவது. தத்துவப் புரிதல் கொண்டோர் இறை நம்பிக்கைச் சிந்தனைகளையும் இறை மறுப்புச் சிந்தனைகளையும் உட்கொண்டு அவற்றின் நன்மைகளைக் கொள்வார்களே தவிர வெறுப்புக் கொள்வதில்லை. அந்த வகையில் பார்க்கும் போது பேராசிரியர் அவர்கள் தத்துவவாதியாகவே திகழ்ந்துள்ளார் என்று உறுதிபடக் கூற முடிகிறது. அதனால்தான் நாயன்மார்களுக்கும் ஆழ்வார்களுக்கும் உரையெழுதிய நிலையில் அவர்களுக்கு எதிரான கருத்துக்களைக் கொண்ட பெரியாரின் சிந்தனைகளையும் அவரால் ஆராயமுடிந்துள்ளதோடு அவை சமூகத்திற்கு எந்த மாதிரியான நன்மைகள் தரும் என்பதையும் தெளிவாக விளக்கிக் கூறமுடிந்துள்ளது. பெரியாரின் கருத்துக்களை மூன்றுவிதமான பொருண்மைகளாகப் பகுத்துக் கொள்கிறார். 1. கடவுள் மற்றும் சமயக் கருத்துக்கள் 2. சமூகக்கருத்துக்கள் 3. மொழிபற்றிய கொள்கைகள். பெரியாரின் அனைத்து நூல்களையும் வாசிக்க முடியாதவர்கள் அவற்றின் சாராம்சங்களைப் புரிந்துக்கொள்ளும் நிலையில் இந்த நூல் அமைந்துள்ளது.

அவர் பெரிய்ாரின் தத்துவார்த்தம் என்னவென்பதைத் தெளிவுபடுத்துகிறார். "தந்தை பெரியாரின் கடவுள் சமயம் பற்றி இனி கவனம் செலுத்துவோம். பெரியாரின் கருத்துப்படி நம் நாட்டிற்கு அவசியமாக வேண்டியவை மூன்று. அவை,

1. மூடநம்பிக்கை ஒழிய வேண்டும்.
2. அறிவுக்குச் சுதந்திரமும் விடுதலையும் ஏற்பட்டு அது வளர்ச்சி பெற வேண்டும்.
3. சுயமரியாதை உணர்ச்சி ஏற்பட வேண்டும் என்பவையாகும்.

மூடநம்பிக்கைக்கு மூல ஆதாரம் கடவுள் என்பது அவரது கருத்தாதலால் இறைமறுப்புக் கொள்கை அவரது பேச்சாகவும் அமைகின்றது."(9) இவ்வாறு விளக்கியபின் கடவுள் பற்றிய சிந்தனைகளைத் தத்துவப்புலத்திலிருந்து பேசுகிறார், பேராசிரியர். பெரியார் சிந்தனைகளும் சரியானவையே என்ற கருத்தை முன்வைக்கிறார்; அதாவது பகுத்தறிவு என்பது மக்கள் நலன் சார்ந்ததே என்ற கருத்தை முன்வைக்கிறார்.

இவ்வாறு கடவுள் நம்பிக்கையையும் கடவுள் நம்பிக்கை இன்மையையும் அற்புதமாக விளக்கிச் செல்கிறது பேராசிரியரின் ஆய்வுத்தடம்.

**10. இலக்கிய ஆளுமைகளை அடையாளப்படுத்தல்:** சமூகத்தில் தமது செயல்பாடுகளாலும் இலக்கியப் படைப்புகளாலும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்துவோர் குறித்தும் அவர்களது பணியைக் குறித்தும் அடையாளப்படுத்துவது இலக்கியவாதி களுக்குரிய பணி. பேராசிரியர் சிறந்த இலக்கியவாதி என்பதால் குறிப்பிடத்தக்க இலக்கிய ஆளுமைகளான நாவுக்கரசர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், தமிழ்க்கடல் இராம.சொ., பட்டினத்தார், இராமலிங்க அடிகளார், கவிமணி, பாரதிதாசன், பாரதியார், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் போன்றோரை அடையாளம் காட்டி அவர்தம் தமிழ்ப்பணியின் பங்களிப்பை மதிப்பீடு செய்கிறார். அவர்களது பெயர்களைத் தலைப்புகளாக வைத்துப் பேராசிரியர் எழுதிய நூற்கள் அந்த இலக்கிய ஆளுமைகளின் பங்களிப்பைச் சரியாகப் புரிந்து கொள்ள உதவுகின்றன. எடுத்துக்காட்டாக, அவரது முத்தமிழ்க் காவலர் கி. ஆ.பெ. விசுவநாதன் என்ற நூல் முத்தமிழ்க்காவலரது சிந்தனை, பண்பு, சமூகத்தில் அவராற்றிய செயற்கரிய செயல் போன்றவற்றை அடையாளப்படுத்துவதைக் கூறலாம்.

"அவர் தமிழ் இலக்கியங்களை ஆழ்ந்து கற்றதனால் விளைந்த அற்புதப்படைப்பு தமிழின் சிறப்பு என்னும் நூல். இதில் தமிழின் 16 சிறப்புகள் இருப்பனவாகக் காட்டுவார் ஓர் அண்ணல் பெருமான். அவற்றுள் சில சுடர் விடும் நுண்ணிய கருத்துக்கள்: தமிழுக்கு இனம் மூன்று. அவை வல்லினம், மெல்லினம், இடையினம் என்பவை. நமது மொழிக்குப் பெயர் வைக்க எண்ணிய தமிழ்ச் சான்றோர்கள் அக்காலத்திலேயே இனத்திற்கு ஒரு எழுத்தாக எடுத்து மூன்று இனங்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கிப் பெயர் வைத்திருப்பது எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது. த-வல்லினம், மி-மெல்லினம், ழ் - இடையினம். சொல் சிறப்பு. தமிழில் எந்தச் சொல்லும் ஏழெழுத்துக்கு உள்பட்டதே! தமிழில் எட்டெழுத்துச் சொல்லைக் காணமுடியாது. ஆறு ஏழு எழுத்துக்கள் மிகச் சில. ஐந்து எழுத்துச் சொற்களும் சிலவே. நான்கு எழுத்துச் சொற்கள் பல. மூன்று இரண்டு எழுத்துச் சொற்கள் மிகப் பல. ஓரெழுத்துச் சொற்களும் தமிழில் உண்டு!"(10)

இது போன்றே பிற ஆளுமைகளையும் சரியாக அடையாளப்படுத்தியுள்ளார்.

**11. கோவில்கள்:** பேராசிரியர் தமது சொந்த முயற்சியால் கோவில்களையும் அவை தொடர்பான வரலாறுகளையும் பதிவுசெய்துள்ளார். இந்தியாவில் ஒவ்வொரு பகுதியும் பண்பாட்டுச் செல்வங்களை மெதுமெதுவாக இழந்து கொண்டிருக்கும் இந்தக் காலகட்டத்தில், பேராசிரியரின் கோவில் தொடர்பான ஆய்வுநூல்கள் வட்டார, பண்பாட்டு அடையாளங்களைப் பதிவுசெய்வதில் பல ஆண்டுகளுக்கு முன்பே தனித்துவம் பெற்றுவிட்டன. அவ்வகையில் சோழநாட்டுத் திருப்பதிகள் (தொகுதி *1, 2*), தொண்டைநாட்டுத் திருப்பதிகள், பாண்டிநாட்டுத் திருப்பதிகள், மலைநாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள் எனும் தலைப்புகளில் வெளிவந்த நூற்கள் ஒவ்வொரு வட்டாரத்திலும் அமைந்துள்ள கோவில்கள் தொடர்பான வரலாற்றினை விளக்குவனவாக உள்ளன. திருவேங்கடமும் தமிழிலக்கியமும் (பாரிநிலையம், சென்னை, *1975*) என்ற நூல் திருவேங்கடம் பற்றிய புவியியல் அமைவிடம் பற்றி விவரித்துவிட்டு, சங்ககாலத்திலும் இடைக்காலத்திலும் இலக்கியத்தில் திருவேங்கடம் குறிக்கப்பட்டுள்ளமையை விவரிக்கிறது. இந்நூல்களில் பேசப்படுவன பின்னாள்களில் திருவேங்கடம் குறித்த பல ஆய்வுகளில் மேற்கோள்களாகவும் சுட்டப்படுகின்றன. எனவே இந்நூல்களை ஆன்மீகப்பயண நூல்கள் என்றும் அழைக்கலாம்.

மேற்கூறப்பட்ட நூல்கள் அனைத்திலுமே அத்துறை குறித்த அடிப்படை அறிவுடன் கூடிய புதிய செய்திகள் இடம் பெற்றிருப்பதைக் கவனிக்கமுடிகிறது. அவையனைத்தும் ஆய்வின் அடிப்படையிலானவை. கலைமாமணி என்று அவருக்கு வழங்கப்பட்ட சிறப்புபெயர் எத்துணை பொருத்தமானது என்பதை இதன் மூலம் அறியலாம்.

# 5. அறிஞர்கள் குறித்த பேராசிரியர் கருத்துக்கள்

ஒரு காலகட்டத்தில் வாழ்ந்த அறிஞர்களது வாழ்க்கையை, சாதனைகளை வரலாற்று நூற்களின் மூலம் அறியலாம். அதற்கப் பால் அந்த அறிஞர்கள் எத்தகையவர்கள் என்பதை அவர்களது சமகாலத்தில் வாழ்ந்தவர்கள் எழுதிய குறிப்புகளாலோ பிறரது வாழ்க்கை வரலாற்றில் இடம்பெறும் குறிப்புகளாலோதான் அறிந்து கொள்ளமுடியும். அந்த வகையில் பேராசிரியர் தமது வாழ்க்கையில் சந்தித்த ஆளுமைகளுடனான அனுபவத்தைப் பதிவு செய்துள்ளார். அதன் மூலம் அந்த ஆளுமைகளைப் பற்றிய புதிய செய்திகளை அறிந்து கொள்ள முடிகிறது. அந்த வகையில் அவரது நினைவுக்குமிழிகள் நூல் முக்கியத்துவம் பெறுகிறது.

**1 கா. நமச்சிவாயர்:** கா. நமச்சிவாய முதலியார் புகழ்பெற்ற தமிழ்க்கல்வியாளர் ஆவார். 1876இல் பிறந்து 1936 வரை வாழ்ந்திருந்த இவர் தமிழ்ப்பாட நூல்கள் இயற்றியதில் முன்னோடியாகத் திகழ்ந்தவர். அக்காலகட்டத்தில் கல்வித்துறையில் கோலோச்சியிருந்த அன்னார் குறித்த பேராசிரியரின் கருத்து,

“கா. நமச்சிவாய முதலியார் எழுதிய தமிழ்ப்பாட நூல்களின் தெலுங்கு மொழியாக்க நூற்கள் புழக்கத்தில் இருந்தன. வெள்ளைக்காரர் ஆட்சியில் மொழியின் அடிப்படையில் மாநிலப் பிரிவில்லையாதலால் முதலியார் அவர்களின் நூற்கள் தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்ற மூன்று மொழிகளிலும் மொழி பெயர்த்திருக்க வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது. சென்னை மாகாணம் முழுவதும் நான்கு மொழிகளிலும் இவரது பாடங்களே ஏகபோக உரிமையாகப் புழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். இதனால்தான் அவருக்குச் செல்வச் செழிப்பும் இருந்திருந்தது. சிறந்த புலமையும் வள்ளண்மையும் இணைந்திருந்த மையால் வறுமையால் வாடும் பல புலவர்கள் இவரிடமிருந்து உதவி பெற்று மகிழ்ந்தனர். சென்னைக் கடற்கரையில் அமைந்திருந்த இவர்தம் திருமாளிகைக்குப் புலவர்கள் வருவதும் போவதுமாக இருக்கும் என்பதை அறியும்போது முதலியார் அவர்களின் வள்ளண்மை புலனாகும்.”

**2. வள்ளல் அழகப்பர்:** 1909இல் பிறந்து 1957இல் மறைந்த அழகப்பச் செட்டியார் தமிழகத்தில் வள்ளல் என்று அறியப்படுபவர். தொழில்துறையிலும் கல்வித்துறையிலும் தடம்பதித்தவர். தாம்

பெற்ற செல்வத்தைப் பொதுநலனுக்காகச் செலவழித்தவர். அன்னார் குறித்த பேராசிரியரின் மனப்பதிவு இது:

"பாரதியின் இதயத்தை வள்ளல் அழகப்பர் நன்கறிந்தவர். ஆகவே கல்வித் தொண்டில் தம் கருத்தைச் செலுத்தினார். ஓர் அரசு செய்ய வேண்டிய பணிகளைத் தாம் செய்யும் பொறுப்பாக மேற்கொண்டார். செய்வனவற்றையெல்லாம் தெய்வப் பணிகளாகச் செய்துவந்தார். இத்தகைய வள்ளல் அமைத்த கல்விப் பயிற்சிக் கல்லூரியில் பணியாற்றும் வாய்ப்பினை நல்கிய இறைவன் பற்றிய சிந்தனை சதா என் உள்ளத்தில் குமிழியிட்டுக் கொண்டேயிருக்கும். டாக்டர் வள்ளல் ஒரு கர்ம வீரர். கர்ம வீரர் என்று சொல்லுவதை விடக் 'கர்மயோகி' என்று சொல்லுவதில் சிறப்பு உண்டு. வாழ்க்கையில் அமைத்த செயல்கள் அனைத்தையும் ஒருவித வேள்வியாகச் செய்கின்றவர்." (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-3 பக். 138-139)

**3. கம்பன் அடிப்பொடி கணேசன் (1908 – 1982):** சமூக சேவகர்; தமிழ் இலக்கியவாதி; காந்தியவாணர்; அரசியல்வாதி; கல்வெட்டாய்வாளர்; தமிழகத் தொன்மவியலாளர் என்றெல்லாம் போற்றப்பெறும் கணேசன் அவர்கள் கம்பரின் தமிழ் மீது ஈடுபாடு கொண்டு காரைக்குடி கம்பன் கழகத்தை உருவாக்கித் தமிழகத்தின் பல பகுதிகளில் கம்பன் கழகங்கள் உருவாக வழிகாட்டியவர். பேராசிரியரிடம் நட்புப் பாராட்டியவர். அன்னார் பற்றி பேராசிரியரின் கருத்துப் பின்வருமாறு:

"காரைக்குடியில் மிகவும் பிரபலமானவர் சா. கணேசன். காந்தி வழி நிற்பவர். நாட்டுப்பற்று மிக்கவர். பலமுறை சிறைக்குச் சென்றவர். சுமார் நாற்பது ஆண்டுகள் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பவர். காரைக்குடிக் கம்பன் திருநாள் இவர்தம் திருத்தொண்டு. கம்பனுக்கு ஒரு மணிமண்டபமும் தமிழன்னைக்கு ஒரு திருக்கோவிலும் கட்டி முடித்த திருத்தொண்டர். கம்பன் மேல் அளவற்ற ஈடுபாடு கொண்டு கம்பன் அடிப்பொடி ஆனவர். அடியேன் வாழ்வில் திசை திருப்பியவர். என் எழுத்துப் பழக்கத்தில் உற்சாகமூட்டி அது வாழ்வதற்குக் காரணமாக இருந்தவர். இலக்கியம், கலை, கல்வெட்டு, நாட்டு மருத்துவம், அரசியல், இசை, நாடகம் போன்ற அனைத்திலும் ஆர்வம் காட்டுபவர். கல்லூரிக் கல்வியை எட்டிப் பிடிக்காதவர் என்றாலும் கல்லூரி ஆசிரியர்களின் அறிவுக்கு மேல் பெற்றுத்திகழ்ந்தவர். எல்லாத் துறை ஆசிரியர்களிடமும் துறையறிவு பெற்றவர் போல உரையாடி

அவர்களை வியப்பில் ஆழ்த்துபவர். இத்தகைய பேரறிஞரை, பொதுவாழ்வுக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவரை, வள்ளல் டாக்டர் அழகப்பர் தாம் ஏற்படுத்திய அறக்கட்டளையின் அறங்காவலர்களில் ஒருவராக நியமித்தார். (பேரா. ந. சுப்பு ரெட்டியார் நி. கு-3 பக். 167) எளிமையை விரும்புபவர். அவரவர் சக்திக்குத் தக்கவாறு வாழவேண்டும்-வீண் ஜம்பம் கூடாது என்ற கொள்கையுடையவர்.'' (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-3 பக். 23) என்று கம்பன் அடிப்பொட்டி கணேசன் குறித்துக் கூறுகிறார் பேராசிரியர்.

**4. பன்மொழிப்புலவர் தெ.பொ.மீ:** அப்போது சென்னை மாநிலக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர் பன்மொழிப்புலவர் தெ.பொ.மீ அவர்கள். அவரை ஒரு ஆகஸ்ட் திங்களில் அழகப்பா கல்லூரி மாணவர் தொடக்க விழாவிற்கு அழைத்திருந்தனர். இவரை என் கல்லூரியிலும் வரவழைத்துப் பேச வைக்க வேண்டும் என்பது ஆசை. அன்று காலை ஒன்பதரை மணிக்கு நேராகத் தெ.பொ.மீ. தங்கியிருக்கும் இடத்திற்கே சென்று அவரை வருமாறு அழைத்தேன். அவரும் வந்து பேசுவதற்கு இசைந்தார். கூட்டம் பதினொரு மணிக்குத் தொடங்கி 12 மணிக்கு முடிந்தது. பொதுவாகத் தமிழைப் பற்றிப் பல செய்திகளைப் பேசினார். அப்போது IAS தேர்வு விடைத்தாள்களை மதிப்பிடும் பணியை ஏற்றுக் கொண்டிருந்தார் போலும். அதில் ஒரு வினா நாலாயிரதிவ்ய பிரபந்தம் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுமாறு கேட்கப்பட்டிருந்தது போலும். அதற்கு விடையளித்த ஒருவர் இரண்டு பக்கங்கள் எழுதி இருந்தாராம். அதில் ஆழ்வார் பெயரையும் குறிப்பிடாமல் பிரபஞ்சத்தின் பெயரையும் குறிப்பிடாமல் அந்நூல் எது பற்றி நுவல்கிறது என்றும் சொல்லாமல் வெறும் சொற்களைக் கொண்டே வாக்கியங்களாக இரண்டு பக்கங்களில் எழுதி இருந்தார் என்று அவர் குறிப்பிட்டது இன்றும் என் நினைவில் பசுமையாக உள்ளது.

பிற்பகல் இரண்டு மணிக்குத் தெ.பொ.மீ. யிடம் உரையாடி வரலாம் என்று விளையாட்டரங்கு அறைக்குச் சென்றிருந்தேன். அச்சமயத்தில் கலைக்கல்லூரியிலிருந்து நான்கைந்து தமிழ்ப் பேராசிரியர்களும் வந்திருந்தனர். நான் தெ.பொ.மீ. அவர்களிடம் கேட்டேன், ''நூல் எழுதி வெளியிடுவதில் உங்கள் அறிவுரைதான் என்ன?'' அவர் சொன்னார், ''நூலை எழுதி முடிக்க வேண்டும். பிறகு அந்நூலின் கைப்படியைக் கட்டி வைத்து விட வேண்டும். ஓராண்டு கழித்து அதை மீளவும் நோக்குதல் வேண்டும். திருத்தங்கள்

போட்டு அவற்றை மீண்டும் கட்டி வைத்து விட வேண்டும். அடுத்த ஆண்டு கைப்படியைப் படித்துப் பார்த்து மீண்டும் திருத்தங்களைச் செய்ய வேண்டும். இப்படியே சில ஆண்டுகள் செய்த பின்னர் நூல் செம்மையாக அமையும்.''

என் மனத்திற்கு இந்த அறிவுரை உதவாது என்று பட்டது. இந்த அறிவுரையைக் கைக்கொண்டால் எந்த நூலும் வெளிவர முடியாது. காரணம், நாமும் கற்றலால் மேலும் நம் அறிவு வளர்கின்றது. ஆண்டுகள் செல்லச் செல்ல நாம் அனுபவிக்கின்ற திருத்தங்கள் தூங்கத்தான் செய்யும். இதனால் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கும் இந்நூல் வெளிவருவதற்கு வாய்ப்பு இல்லாது போய்விடும். அதைச் சொல்லியும் விட்டேன். 'ஐயா, நீங்கள் சொல்லும் அறிவுரையை மேற்கொண்டால் நூல்கள் வெளிவருவதற்கு வாய்ப்பே இராது. நான் ஆறாண்டுகள் பல நூற்களைப் படித்ததாலும் மாணாக்கர்களுக்குக் கற்பித்த அனுபவத்தாலும் உருவாகி வெளிவந்தது இந்த நூல். இதில் பெரும்பாலும் ஆங்கிலத்தில் படித்த கருத்துக்கள் தமிழ்வடிவம் பெற்றன. இடையிடையே என்னனுபவமும் கலந்து வருகின்றன. இவற்றை யார் எழுதினாலும் எழுதுவோரின் அனுபவங்களைத் தவிர ஏனைய கருத்துக்கள் மாறாதவை. பழக்கத்திற்குத் தகுந்தாற்போல் நடையிலும் வேறுபாடுகள் தென்படும். தாங்கள் சொல்வதைப் பின்பற்றினால் நூல் எப்போதுமே வெளிவராது. நடைமுறைக்கு ஒவ்வாதது' என்று சொல்லி முடித்தேன்.

உடனே தெ.பொ.மீ, 'ரெட்டியார் உங்கள் துணிவையும் சிந்தனையையும் போற்றுகிறேன். பெரும்பாலும் என்னை ஆசிரியர்கள் சூழ்ந்து கொண்டேயிருப்பார்கள். சுற்றியிருப்பவர் களின் முகஸ்துதி ஒருவித போதையைத் தந்து என் சுயசிந்தனையைக் கெடுத்துவிடும். நீங்கள் சுயசிந்தனையுடன் என் சிந்தனையையும் கிளறிவிட்டீர்கள். நீங்கள் சொல்வதுதான் சரி. உங்கள் எழுத்துப்பணி சிறக்கட்டும்'' என்று வாழ்த்தினார். அங்கு கூடியிருந்த ஆசிரியர்கள் வாய்மூடி மௌனிகளாயினர் (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு.3 பக். 283-287).

**5. சுவாமி சித்பவானந்தர்**: இராமகிருஷ்ண குருகுல மரபைச் சேர்ந்த சுவாமி சித்பவானந்தர் (1898-1985) தமிழ்நாட்டில் புகழ்பெற்ற ஆன்மீகவாதி. திருப்பராய்த்துறையில் இராமகிருஷ்ண தபோவனம் என்ற அமைப்பை நிறுவியவர். அவருடன் பேராசிரியர் நேரடியாகப் பழகியுள்ளார். அது குறித்துப் பேராசிரியர்,

*1940*-வாக்கில் சித்பவானந்த அடிகள் பெரிய நாய்க்கன் பாளையத்தில் தொடங்கிய பணியைத் துறந்து திருச்சியருகேயுள்ள திருப்பராய்த்துறையில் தம் தவப்பணியைத் தொடங்கியதாக நினைவு. சிறிது காலம் வாரந்தோறும் இ.ஆர். உயர்நிலைப் பள்ளியில் நிகழ்த்திய கீதைப் பேருரையும் சிறிது காலம் திருச்சி மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் நிகழ்த்திய தாயுமான அடிகளின் பாடல் விளக்கமும் அடிகளை மக்கட்கு நன்முறையில் அறிமுகப்படுத்தின.

அடிகளார் கோவை மாவட்டத்தைச் சேர்ந்தவர். திரு. சி. சுப்பிரமணியத்தின் சிற்றப்பா. மாநிலக்கல்லூரியில் இளங்கலை வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது மேனாட்டு முறையில் உடுத்திக் கொண்டிருப்பவராம். பழக்க வழக்கங்களும் மேனாட்டு பாணியிலேயே அமைந்திருந்தனவாம். ஒருசமயம் கல்கத்தா இராம கிருஷ்ண மடத்திலிருந்து வந்த துறவியொருவரின் சொற்பொழிவைக் கேட்டு, மனம் மாறி, கல்வியையும் நடுவிலேயே விட்டுத் துறவுக் கோலத்தை மேற்கொண்டதாகச் சொல்வார்கள். கல்கத்தாவில் இருந்த போது இவருடைய பாட்டனார் நோய்வாய்ப் பட்டு இறக்கும் நிலையில் இருப்பதைத் தெரிவித்தார்களாம். இவர் துறவிக்கு எந்தவித பந்த பாசமும் இல்லையென்று சொல்லிவிட்டுப் பாட்டனாரைப் பார்க்க வரவில்லையாம்.

இவர் திருப்பராய்த்துறையில் இராமகிருஷ்ண தபோவனத்தையும், விவேகாநந்த வித்தியாவனத்தையும் நிறுவியவர். முதன்முதலாகச் சிறியகுடிலை அமைத்துக் கொண்டு தொடங்கப் பெற்ற இராமகிருஷ்ண தபோவனம் மிகப் பெரிதாக வளர்ந்து விட்டது. இதன் ஆதரவில் தொடங்கப் பெற்ற விவேகானந்தர் வித்தியாவனம் (உயர்நிலைப்பள்ளி) சுமார் ஐம்பது ஆண்டு காலமாகச் சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகின்றது.

நான் துறையூரில் பணியாற்றியபோது-*1945*- என நினைக்கின்றேன் - தபோவனத்தில் நடைபெற்ற மாணவர்க்கென நடத்தப்பெற்ற அந்தர்யோகத்தில் மூன்று மாணவர்களைப் பங்கு கொள்ளச் செய்தேன்; அடியேனும் பங்கு கொண்டேன். திருப்பதி சென்றபிறகும் கூட திருச்சிப் பக்கம் வரும்போது அடிகளாரைச் சந்தித்து அவர்தம் ஆசிபெறுவதில் தவறுவதில்லை. அந்தர்யோகத்தின் போது 'கேள்வி நேரத்தில்' அடிகளாரை வினவிய வினாவும் அவர் அளித்த விடையும் இன்னும் என் மனத்தில் பசுமையாக உள்ளது.

வினா : சுவாமி, அத்வைதம், துவைதம், விசிட்டாத்வைதம் இவற்றிற்குள்ள வேறுபாடு என்ன?

விடை : இந்த வினாவை விவேகாநந்தரே இராமகிருஷ்ணரிடம் கேட்டார். அவர் தந்த விடையையே இப்போது தருகின்றேன், தத்துவ நிலையில் அறிந்து கொள்ள வேண்டுமானால் தத்துவ ஆராய்ச்சி வேண்டும். சுருக்கமாகச் சீவான்மாவிற்கும் பரமான்மாவிற்குமுள்ள உறவுபற்றி இம்மூன்று தத்துவங்களிலும் கூறப்பெறுள்ளதை மட்டிலும் கூறுகின்றேன்.

ஒருவர் தொலைதூரப் பயணத்தின்போது 'கட்டமுது' எடுத்துச் செல்லுகின்றார். இங்கு இரண்டு பொருள்கள் (Entities) உள்ளன. ஒன்று, எடுத்துச் செல்பவர்: மற்றொன்று, கட்டமுது. எடுத்துச் செல்பவர்கள் பரமான்மாவாகவும், கட்டமுதைச் சீவான்மாவாகவும் கொள்க. இரண்டும் தனித்தனியாக இருப்பது துவைதம் (துவைதம்-இரண்டு). சில கல் தொலைவு நடந்து செல்லும்போது அவருக்குப் பசி வருகின்றது. கட்டமுதை உண்கின்றார். கட்டமுது அவர் வயிற்றை அடைகின்றது. இப்போதும் இரண்டும் தனித்தனியாகவே உள்ளன. நிலையில் தான் வேறுபாடு. இது விசிட்டாத்வைதம். இன்னும் சிறிது தூரம் நடந்து செல்லும்போது கட்டமுது செரிமானம் ஆகிவிடுகின்றது; கட்டமுதின் உருவம் இல்லை. அஃது ஆளின் உடலில் ஐக்கியமாகி விடுகின்றது. இது அத்வைதம். இங்கு சீவான்மா, பரமான்மா என்ற வேறுபாடே இல்லை.

ஒரு சமயம் 4, 5, 6ஆம் படிவங்களில் பிரச்சினை எழுவதால் மகளிர் கலந்து படிக்கும் முறையை நீக்க நினைத்தார். ஓரளவு குடியரசு முறையை மேற்கொள்ளும் அடிகளார் மேல் வகுப்பு மாணவர்கள் குழுவில் பிரச்சினையை வைத்து அவர்கள் கருத்துகளைக் கேட்டார். ஒரு மாணாக்கன் எழுந்து "மகளிர் ஒன்று சேர்ந்து படிப்பதால் சிலர் மனம் தவறான சிந்தனையில் இறங்கும். இதற்கு வழியமைத்து விட்டு எங்கள்மேல் குற்றப்பத்திரிகை வாசிப்பதைவிட மகளிர் கலந்து படிக்கும் முறையை அறவே நீக்குதல் நன்று" என்று சொல்ல, எல்லோரும் ஒருமனதாக ஒப்புக் கொண்டனர். அடுத்த ஆண்டே ஆடவர்-மகளிர் கலந்து படிக்கும் முறை நீக்கப் பெற்றது.

(3) ஒரு சமயம் கழிப்பறைக்கு நீர் ஊற்றுவதற்கு மாணாக்கர்கள் மறுத்தனர். அடிகளார் இதற்கு ஆள் போட்டுச் செய்யத் தெரியாதவர் அல்லர். அடிகள் மாணவர்களை நோக்கி "நீங்கள் செல்வர் வீட்டுப் பிள்ளைகள். இப்பணியைச் செய்தல்

நன்றன்று. நான் துறவி; எனக்கு உயர்ந்தது, தாழ்ந்தது என்ற வேறுபாடு இல்லை. இப்பணியை நானே செய்கின்றேன்'' என்று கூறிப் பணியில் இறங்கினார். மாணாக்கர்கள் அழாத குறையாக அடிகளாரை விலக்கித் தாமே செய்யத் தொடங்கினர்.

மாணவர்களிடம் ஒழுங்கு முறையை வளர்ப்பதில் அடிகளார் கண்ணும் கருத்துமாக இருந்தார். அதிகாலையில் எழுந்து படித்தல், ஆற்றிற்குச் சென்று நீராடுதல், சிற்றுண்டி அருந்தல், ஆசிரியர்கள் தந்த வீட்டு வேலைகளைக் கவனித்தல், பள்ளிக்குப் போதல் - இவற்றிற்கெல்லாம் காலவரையறை வகுக்கப் பெற்று அதன்படி மாணாக்கர்கள் நடந்து வந்தனர். சிற்றுண்டி முதலியவற்றை முடித்துக் கொண்டு வீட்டு வேலை செய்யாதவர்கள் பொது மண்டபத்திற்கு முற்பகல் 8-30க்கு வந்து செய்ய வேண்டும். செய்வதில் சிரமம் இருப்பின் இதைக் கவனித்து உதவுவதற்கென்றே சில ஆசிரியர்கள் அந்த நேரத்திற்கு வருவர்: இம்முறையை 'மேற்பார்வைப் படிப்பு' (Supervised Study) என்ற முறையை ஒத்ததாகக் கொள்ளலாம். சிலருக்குச் சில பாடங்களில் பிற்போக்கு நிலை ஏற்பட்டிருந்தால் அவர்கட்குத் தனியாகக் கவனிக்கவும் ஏற்பாடு உண்டு. இதற்கென்று ஓரளவு கட்டணம் ஆசிரியர்கட்குத் தரப்பெறும்.

**6. மறைமலையடிகள்:** பிறமொழிகளின் கலப்பின்றி தமிழ் தனித்தியங்க வேண்டும் என்ற நோக்கில் தனித்தமிழ் இயக்கம் கண்டவர் மறைமலையடிகள். அதன் மூலம் தமிழ் கூறு நல்லுலகில் தமக்கென ஓரிடம் பிடித்தவர். அவரைக் குறித்து பேராசிரியரின் கருத்து: "இன்று இளைஞர்களிடையே சங்க இலக்கியங்கள் மீது ஆராக் காதல் பிறந்துள்ளது. இதற்கு மறைமலையடிகள் முக்கிய காரணமாவார். அவரைத் தொடர்ந்து பணியாற்றிய பலருள் எஸ். வையாபுரிப்பிள்ளை, ரா. பி. சேதுப்பிள்ளை, கி. வா. ஜகந்நாதன் ஆகியோரும் குறிப்பிடத்தக்கவர்கள்.''

**7. டாக்டர். மு. வரதராசனார்:** புகழ் பெற்ற தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்த அன்னார் குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"பல நூல்களின் ஆசிரியரும் சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியருமான டாக்டர் மு. வரதராசன் தொடக்கத்தில் வட்ட அலுவலகத்தில் எழுத்தராக இருந்தவர்தான். (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-4 பக். 41) அக்காலத்தில் பிஎச்டி பட்டத்தை

வற்புறுத்துவதில்லை. காரணம் பிஎச்டி பட்டம் பெற்றவர்களே இல்லை. டாக்டர் மு. வரதராசனார் மட்டுமே பிஎச்டி பட்டம் பெற்றவர். அவர் நல்ல திறன் வாய்ந்த நூல்கள் எழுதி வெளியிட்டிருந்ததால் அவருக்கு நல்ல மதிப்பு இருந்தன அவர்கள் பழைய பரம்பரைத் தமிழ்ப் புலவர்களையும் புதிய பரம்பரைத் தமிழ் புலவர்களையும் இணைத்து நிற்கும் பெரும் புலவர் ஆவார். பழைமைக்குப் பழைமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் நின்று அறிவொளி வீசும் ஆசிரிய மணியாவார். உழைப்பினால் உயர்ந்த நிலைக்குத் தமிழ்நாட்டு இளைஞர்களுக்கு எடுத்துக்காட்டாக நின்று நிலவுபவர். இவரது எழுத்துக்களில் புலமை மணம் கமழும். ஆராய்ச்சித் திறன் ஒளிரும். சிந்தனைத் தொடர் தெறிக்கும். இவருடைய கருத்துக்களில் ஆழ்கடல் போன்ற ஆழமும் உண்டு. அதனைப் போல அகன்றும் காணப்படும். இலக்கியம், திறனாய்வு, ஆராய்ச்சி, மொழியியல், நாடகம், புதினம், சிறுகதை, கடிதங்கள் போன்ற பல்வேறு இலக்கிய வகைகளை அணி அணியாக வெளியிட்டுத் தமிழன்னையின் மகிழ்ச்சியைப் பொங்கச் செய்தவர். தமிழாராய்ச்சியும் தமிழில் புதிய இலக்கிய வகைகளைப் படைக்கும் ஆற்றலும் நிறைந்த இவரைத் தமிழ்நாட்டுப் பெர்னார்ட் ஷா என்று கூறினாலும் மிகையன்று. மு.வ. என்ற இரண்டு எழுத்துக்களில் தமிழ் இளைஞர்கள் உள்ளத்தில் நிரந்தரமாக இடம் பெற்றுவிட்டார் (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-4 பக். 131).

**8. இரசிகமணி டி.கே.சி.:** இவர் கம்பராமாயணத்தின் தீவிர ரசிகர். எனவேதான் இரசிகமணி என்று பட்டப் பெயருடன் அழைக்கப்படுகிறார். அவர் எப்படியெல்லாம் செயல்படுவார் என்பது நமக்குத் தெரியாவிடினும் நினைவுக்குமிழிகள் வழி இரசிகமணி பற்றிய அபூர்வமான செய்திகள் கிடைக்கின்றன.

"நான் துறையூரிலிருந்தபோது திரு.கே.எஸ். முத்து வேல் பிள்ளை அடிக்கடி டி. கே. சி. பற்றியும் காரைக்குடி கம்பன் திருநாள் பற்றியும் கூறி ஓராண்டு காரைக்குடிக் கம்பன் திருநாளுக்குப் போய்வருமாறு சொல்லி உற்சாகமூட்டி வருவார். 1949-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் அந்தத் திருநாள் நடைபெற்றது. அந்த விழாவுக்கு டி.கே.சி. சென்னையிலிருந்து இந்தோ-சிலோன் விரைவு இருப்பூர்தியில் வந்து கொண்டிருந்தார். திரு. முத்துவேல் பிள்ளையவர்கள் என்னை வற்புறுத்தி அந்த வண்டியில் வந்து கொண்டிருந்த ரசிகமணிக்கு என்னைத் திருச்சியில் அறிமுகப்படுத்தி அவருடன் இணைத்துவிட்டார். இந்த நாள்தான் பின்னர் என் வாழ்வின் பொற்காலத்திற்குக் கால்கோள் விழாவாக அமைந்தது.

டி.கே.சி.யை நேரில் பார்த்துப் பழகாவிடினும் அவரது நூல்கள் பலவற்றை முன்னரே படித்து அறிந்திருந்தேன். இதனால் 'ரசிகமணி' என்ற பட்டம் பொருத்தமானது என்பதையும் தெரிந்திருந்தேன். திரு. முத்துவேல் பிள்ளை வஞ்சகமின்றிப் பழகும் வெள்ளை மனிதர். என்னைப்பற்றி அறிமுகம் செய்யும்போது "இவர் என் மாப்பிள்ளை. துறையூர் ஜமீன்தார் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர். நன்கு தமிழ் கற்றவர். வித்துவான் பட்டமும் பெற்றுள்ளார். இப்படி அடுக்கிக் கொண்டே போனார். "வித்துவான் எதற்கு?" என்று குறுக்குக் கேள்வி கேட்டார் டி.கே.சி. உடனே நான், "ஏதோ தமிழ் படித்தேன். ஆசிரியத் தொழிலிலுள்ள எனக்குத் தொழில் முன்னேற்றத்திற்குப் பயன்படும் என்று கருதித் தேர்வு எழுதிப் பட்டமும் பெற்றேன்" என்றேன். "அது சரி; ஆனால் எல்லாம் கற்று விட்டோம் என்ற தலைக் கனம் இல்லாதிருந்தால் சரி" என்று புன்முறுவல் பூத்தார். உடனே நான், "ஐயா, பி.ஏ. (Bachelor of Arts) என்பதற்கு தாங்கள் ஓரிடத்தில், தங்கள் எழுத்தில், 'கலையுடன் திருமணமாகாதவர்கள்' என்று கூறியுள்ளதையும், பி. ஏ. பட்டத்திற்குப் பிறகுதான் படிக்க வேண்டியவை நிறைய உள்ளன; இனி, படித்தால் அவை புரியும் என்பதற்கு அறிகுறி இது என்பதையும் நினைவூட்டி, இக் குறிப்பு என்னை உய்விக்கின்றது" என்று எடுத்துக்காட்டினேன். "இதையும் நீங்கள் தெரிந்து வைத்திருக்கின்றீர்களா?" என்று கூறி மகிழ்ந்தார். கம்பன் விழாவுக்கு முதல் நாளே டி. கே. சி. காரைக்குடிக்கு வந்துவிட்டார்.

அழகப்பா கல்லூரி வளாகத்தில் திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமானின் மருமகன் திரு. V.K.C. நடராசன் (பொருளாதார விரிவுரையாளர்) தங்கியிருந்தார். அவருடைய இல்லத்தில் தங்கினார் டி.கே.சி. அடியேனும் அங்குத்தான் தங்கினேன். இதனால் திரு. தொண்டைமானின் நட்பும் ஏற்பட்டது. வி.கே.சி. நடராசனின் தொடர்பும் கிடைத்தது. வந்த நாள் மாலையிலேயே அமராவதி புதூரில் திரு. சொ. முருகப்பா - மரகதவல்லி இவர்களால் மிகத் திறமையாகவும் பாசத்துடனும் நடத்தப்பெற்று வந்த (இப்போது அது நடைபெறவில்லை) 'மகளிர் இல்லம்' என்ற குழந்தைகள் பள்ளி ஆண்டுவிழாவில் டி. கே.சி. தலைமை வகித்தார். அந்த விழாவிற்கு நானும் அழைத்துச் செல்லப் பெற்றேன். டி.கே.சி. யுடன் அழகப்பா வளாகத்தில் இறங்கிய ஒரு மணி நேரத்திற்குள்ளே சட்டை போடாத மடித்துப் போட்ட மேலாடையுடன் காரைக்குடி கம்பன் சா. கணேசன் ('கம்பன் அடிப்பொடி' என்று எல்லோராலும் பாராட்டப் பெற்றவர்) டி.கே.சி.யை வரவேற்பதற்காக நாங்கள்

இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தார். அப்போதுதான் டி.கே.சி. கணேசனுக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார்கள். அந்த அறிமுகம் பின்னர் என் வாழ்க்கையின் பாதையையே மாற்றியது. குக்கிராமங்களில் குறுக்கும் நெடுக்குமான சிறு சாலைகளில் பயணம் செய்து கொண்டிருப்பவருக்கு நெடுஞ்சாலைப் பயணம் கிடைத்தது போன்ற அநுபவம் ஏற்பட்டது.

அன்று மாலையில் மகளிர் இல்ல ஆண்டுவிழா 4 மணிக்குத் தொடங்கியது. காரைக்குடி, தேவகோட்டை, மற்றும் அருகிலுள்ள ஊர்களிலிருந்து பல முக்கிய பெரியோர்கள் வருகை புரிந்திருந்தனர். அப்போது எல்லா வகையிலும் விழா சிறப்புடன் நடைபெற்றது. டி.கே.சி. அவர்கள் திருக்குற்றாலக் குறவஞ்சியிலுள்ள ஒரு பாடலை, தமக்கே உரிய சிறப்பான பாணியில், விளக்கியது இன்னும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது. அந்தப் பாடல்:

"கிளைகளாய்க் கிளைத்த பல கொப்பெலாம்
சதுர்வேதம் கிளைகள் ஈன்ற
களையெலாம் சிவலிங்கம் கனியெலாம்
சிவலிங்கம் கனிகள் ஈன்ற
சுளையெலாம் சிவலிங்கம் வித்தெலாம்
சிவலிங்க சொரூபமாக
விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த
சிவக்கொழுந்தை வேண்டு வோமே."

இந்தப் பாடலை விளக்குவதற்குமுன் தம் முன்னிருப்பவர்களை மானசீகமாகக் குற்றாலத்திற்குக் கொண்டுபோய் விடுகின்றார். அந்தச் சூழ்நிலையைத் திரும்பப் படைத்துவிடுகின்றார். நாம் கோவிலுக்குள் சென்று குற்றாலத்தீசரை வணங்கும் பிரமையையும் ஏற்படுத்தி விடுகின்றார்; தல விருட்சம் குறும்பலாவையும் காட்டுகின்றார்; அதில் தொங்கும் பல பலாக் கனிகளையும் காட்டுகின்றார்; பழத்தை உரித்துக் காட்டும்போது திரிகூடராசப்ப கவிராயர் கண்டு அநுபவித்த சிவலிங்கங்களையே காட்டிவிடுகின்றார். கார்த்த வீரியார்ச்சுனன் ஆயிரம் சிவ லிங்கங் களை வைத்து ஒரே காலத்தில் வழிபட்டதாகக் காவியங்களில் படித்துள்ளோம். இங்கு நூற்றுக்கணக்கான பலாக்கனிகளில் ஆயிரக்கணக்கான சிவலிங்கங்களை நமக்குக் கற்பனையில் காட்டுகின்றார். பாடல்களைத் தமக்கேயுரிய பாணியில் வெவ்வேறு விதமாகப் பாடிப்பாடி அநுபவிக்கின்றார். ஊதுவத்திப் புகை போன்ற வாசனைப் புகையைப் பம்பால் அறைமுழுதும் அனுப்புவதுபோல்,

டி.கே.சி.யின் திருவாயினின்றும் புறப்படும் ஓசையநுபவம், பொட்டாசியம் பெர்மாங்கனேட் ஸ்படிகத்துண்டுகள் கண்ணாடிச் சாடியிலுள்ள நீரில் சிறிது சிறிதாகக் கரையும்போது கண்களால் காணும் காட்சிபோல சிந்தையில், சிந்தனையில் படியும்போது அற்புதமான கவிதாநுபவம் பெறுவதை அறிகின்றோம். விழா முடிந்து கூட்டம் கலையும்போது பலர் இப்பாடலை மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டே அநுபவித்துப் போனதைக் கண்டேன்; வியப்புற்றேன்.

கம்பன் திருநாள் அப்போது மீனாட்சி மகளிர் உயர்நிலைப் பள்ளி ஆடுகளத்தில் பெரிய கொட்டகை போட்டு மேடை அமைத்து அதில் நடைபெற்றது. மூன்று நாட்கள் இக்கொட்டகையிலும் நான்காம் நாள் நாட்டரசன் கோட்டை கம்பன் சமாதியிலும் நடைபெற்று வந்தது. நான்கு நாள் நிகழ்ச்சிகளை அமைப்பதில் கணேசனுக்கு நிகர் கணேசனே, அற்புதமாக அமைத்துவிடுவார். இந்த மூன்று நாட்கள் இரவில் கல்லூரி வளாகத்தில் திரு. நடராசன் இல்லத்தில் தங்கியிருந்தேன்.

**9. பெருந்தலைவர் காமராசர்:** தமிழக முதல்வராக இருந்த காமராசர் குறித்த பேராசிரியரின் கருத்துக்கள் இவை:

“அக்காலத்தில் தமிழக முதல்வராக இருந்த காமராஜர் எல்லோருக்கும் இலவசக்கல்வி கிடைப்பதை நடைமுறைப் படுத்தினார். திருப்பதியில் பணியாற்றினாலும் இது என் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. தவிர இப்பெருமகனார் ஏழை எளியவர்களின் கஷ்டங்களையும் நன்கு உணர்ந்தவர். தமிழக அரசியலில் மிக்க செல்வாக்குடன் திகழ்ந்தவர் பெருந்தலைவர் காமராசர். இவருக்கு வலக்கைபோல் திகழ்ந்தவர் திருச்சி T. S. அருணாசலம்; இவர் சட்டமன்றப் பேரவை உறுப்பினரும்கூட (M. L. A). பெரும்பாலோர் காரியத்தைச் சாதித்துக்கொள்வதற்கு காமராசரை நெருங்குவ தில்லை. அக்காலத்தில் அவர் தமிழகக் காங்கிரஸ் தலைவர்; அரசமட்டத்தில் தம்மை நேராக உட்படுத்திக் கொள்ளவில்லை. T. S. அருணாசலம் காமராசருக்கு மிகவும் வேண்டியவராதலால் பெரும்பாலோர் இவரையே நாடினர். காமராசருக்கு நேரடியாக அரசுத் தொடர்பு இல்லையாயினும் அரசு நிர்வாகத்தில் இவரது குரலே - திருக்குறிப்பே அதிகமாக ஒலித்தது. இவர் பெயர்த்தொடர்பு இருப்பதாகத் தெரிந்தாலும் போதும், காரியங்கள் வெற்றியுடன் நடைபெற்றுவிடும்.

"*1962* வரையில் ஒரு சிறு முற்போக்கு வகுப்பினர் கல்விக்கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. பெருந்தலைவர் - மக்கள் நிலையை நன்கறிந்த மாண்புமிகு முதலமைச்சர் காமராசர் ஆட்சியில் இவர்கட்கும் சலுகை ஏற்பட்டது. அவர் ஆட்சிக்காலத்தில் உயர்நிலை மாணாக்கர்கள் சில சிறப்புக் கட்டணங்களை தவிர கல்வி பெறுவதற்கான சிறப்பு கட்டணம் செலுத்த தேவையில்லை என்ற நிலை ஏற்பட்டது. முற்போக்கு சாதியை சேர்ந்த பெற்றோர்களின் வாய்கள் என்றும் இத்திருமகனை வாழ்த்திக் கொண்டே இருக்கும் (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-2 பக். *116, 117*).

**10. ஏ.கே. செட்டியார்:** ஏ.கே. செட்டியார் பயண நூல் எழுதுவதில் முன்னோடி. அவரைப் பற்றிப் பேராசிரியர்

"ஒரு நாள் துறையூருக்கு வந்தார். 'உலகம் சுற்றும் தமிழன்' என்ற நூலைப் படித்து ஏற்கனவே அவர் மீது பெருமதிப்புக் கொண்டிருந்தேன். ஆனால் அவர் ஏ. கே. செட்டியார் என்பது தெரியாது. இப்போது முதன் முதலாகப் பார்த்தபோதுகூட 'அவர்தான் இவர்' என்பதும் அறிந்துகொள்ள முடியவில்லை. அவர் சொன்ன பிறகுதான் 'உலகம் சுற்றும் தமிழன் இவர்தான் என்பது தெரிந்தது. நான் கற்பனையில் கொண்டிருந்த உலகம் சுற்றும் தமிழனுக்கும் நேரில் பார்த்த ஏ. கே. செட்டியாருக்கும் மலைக்கும் மண்ணாங்கட்டிக்கும் உள்ள வேறுபாட்டைக் கண்டேன். அவ்வளவு எளிமையாக இருந்தார். குளிர்பானம் வழங்கினேன். இக்காலத்தில் (அக் காலத்தில் கூடத்தான்) இதுதானே திடீர் விருந்து!

ஆசிரியர் அறைக்கு இப்பெருமகனாரை இட்டுச் சென்று அங்கிருந்தவர்கட்கு அறிமுகம் செய்து வைத்தேன். எல்லோரும் இவரைப் பார்க்க மகிழ்ந்தனர். அரைமணி நேரத்தில் ஒரு சிறப்புக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தேன். ஊருக்குள் சிலருக்குதான் மிதிவண்டிப் பையன் மூலம் தெரிவித்தேன். அனைவருமே வந்து சேர்ந்தனர். 'என் பயண அனுபவங்கள்' என்ற தலைப்பில் பேசினதாக நினைவு. திரு. செட்டியார் இக்கால அரசியல் மேடைப் பேச்சாளர்கள் போல் 'வெற்று வேட்டுகள்' வெடிப்பவர் அல்லர். கருத்துகளை நகைச்சுவையாக எடுத்துக் கூறுவதில் இவருக்கு நிகர் இவரே. அருமையாகப் பேசி கேட்போர் உள்ளத்தில் நிலையான இடத்தைப் பெற்றார். அக்காலத்தில் 'குமரி மலர்' என்ற மாத இலக்கிய இதழ் நடத்தி வந்தார். ஆண்டுச் சந்தா ரூ.6/ -தான். உடனே மூன்று வருடச் சந்தாவுக்கு ரூ.*18/-* தந்தேன்.

தவறாமல் இதழ்கள் வந்து கொண்டிருந்தன. (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-4 பக். 287).

**11. பன்மொழிப் புலவர் அப்பாத்துரை:** தமிழுலகில் புகழ்பெற்ற அறிஞர் கா. அப்பாத்துரை குறித்துப் பேராசிரியர்:

"பன்மொழித் திறம் கொண்ட கா. அப்பாத்துரை அவர்கள் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் படித்தவர். அவரது ஆசிரியப் பயிற்சிக்கான கட்டணத்தை சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகமே செலுத்தியுள்ளது. ஆனாலும் குறிப்பிட்ட காலத்தில் பணம் தராததால் கஷ்டப்பட்டு இருக்கிறார் அப்பாதுரை அவர்கள். பருத்த உடலும் குள்ளமான உடல் தோற்றமும் கொண்டவர் அப்பாத்துரை. 40 வயதை நெருங்கிய வேளையில்தான் ஆசிரியர் பயிற்சி பெற்றிருக்கிறார். விளையாடும் போது கீழே விழுந்து இருபது நாட்கள் ஆஸ்பத்திரியில் இருந்திருக்கிறார். தமிழ் இந்தி ஆங்கிலம் என மூன்று மொழிகளில் சரளமாக உரையாடும் திறன் கொண்டவர்." எனக் குறிப்பிடுகின்றார்.

**12. பாரதிதாசன்**: கவிஞர் பாரதிதாசனுடன் நேரடி அனுபவம் கொண்டவர் பேராசிரியர். பாரதிதாசன் அன்றைய காலத்தில் பேராசிரியர் பணியாற்றிய பள்ளியில் உரை நிகழ்த்தியுள்ளார். "கவிதை இயற்றுவதில் பல அனுபவங்களையும் சுவையுடன் எடுத்துக்காட்டிக் கேட்போரை அனுபவிக்கச் செய்தார். பள்ளியில் மாணவர்களுக்கு ஏற்றவாறு சுவையுடன் பேசினார். கவிதை இயற்றுவதில் பல அனுபவங்களைச் சுவையுடன் எடுத்துக் காட்டிக் கேட்போர் அனுபவிக்கச் செய்தார். அக்காலத்தில் (1940_50) பாரதியார் போன்றோர்களின் தற்காலக் கவிதைகளைப் புலவர்கள் அதிகமாக மதிப்பதில்லை. பெரும்பான்மையான புலவர்கள் பத்தாம் பசலிகளாக இருந்தனர். இந்தக் குறையைப் பாவேந்தர் நாசூக்காக எடுத்துக்காட்டினார். அவர் குறிப்பிட்ட நிகழ்ச்சி ஒன்று இன்றும் என் மனத்தில் பசுமையாகவே உள்ளது." (பேரா. ந. சுப்புரெட்டியார், பாவேந்தர், பக். 184).

சென்னையில் இருந்தபோது மாலை நேரங்களில் பாரதிதாசனும் பேராசிரியர். ந.சுப்புரெட்டியாரும் பல இடங்களுக்கும் நடந்தே போவார்கள். சமுதாயச் சீர்திருத்தத்திற்கான திட்டங்கள் பற்றிப் பல பேசுவார் பாரதிதாசன். அவையெல்லாம் பயங்கர மானவை. நம் நாட்டிற்கு சிறிதும் ஒவ்வாதவை. (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-1 பக். 10).

**13. சொ. முருகப்பா:** செட்டிநாடு தமிழகத்திற்கு வழங்கிய சீர்திருத்தச் செம்மல்களில் ஒருவர். பிழைப்பின் நிமித்தம் கல்லூரிகளில் சேர்ந்து படித்துப் பட்டம் பெறாதவர். உயர்நிலைப் பள்ளிகளில் சிறிது காலம் பயின்றவர். நல்ல தமிழாசிரியரிடம் தனியாகத் தமிழை முறையாகப் பயின்று தமிழறிவையும் பண்பாட்டையும் வளர்த்துக் கொண்டவர். இளமையில் தாம் கற்ற கல்வியை அரசியல், சமூகம், மொழி, சமயம் முதலியவற்றின் சீர்திருத்தப் பணியில் பயன்படுத்தி வந்தவர். இப்பணிகளுக்குச் சிறந்த கருவியாகக் குமரன் முதலான வார இதழ்களை நடத்திப் பெரும் புகழ் பெறறவர். தமிழ் நாட்டின் பற்பல கழகங்களில் தலைவராகவும் சொற்பொழிவாளராகவும் கலந்து தொண்டாற்றிய பெருமை இவருக்கு உண்டு.

அரசியலில் காந்தி நெறியைக் கடைப்பிடித்தவர். கதரைத் தவிர வேறு துணிகளை உடுத்துவதில்லை. இவருடைய துணைவியார் மரகதவல்லி அம்மையாரும் கதரைத் தவிர வேறு ஆடைகளை அணிவதில்லை. இருவரும் பருந்தும் நிழலும் போல இணைந்து செயற்பட்டுச் சமூகப்பணி செய்து புகழ் பெற்றவர்கள். இளம் கைம்பெண்களின் இழிநிலையையும் அவர்கள் படும் இன்னல்களையும் கண்ட முருகப்பத் தம்பதியர் கைம்பெண்களுக்கு மறுவாழ்வு அளிப்பதில் அக்கறை கொண்டு காரைக்குடி - தேவகோட்டை சாலையில் 'மகளிர் இல்லம்' என்ற பெயரில் ஓர் இல்லம் தொடங்கிப் பல கைம்பெண்களுக்கு மறுவாழ்வு அளித்தனர். 'கொடிறும் பேதையும் கொண்டது விடா' என்பது போல மூடப் பழக்கங்களில் மூழ்கிக் கிடக்கும் சமூகம் அக்காலத்தில் அதிகமாக ஒத்துழைப்பு நல்கவில்லை. சில காலம் பணி தொடர்ந்தது. ஆண்டுகள் கழிந்த போது இக் கைம்பெண்களின் எண்ணிக்கை குறைந்தாலும் மகளிர் இல்லத்தின் பணிதொடர்ந்தது. கைம்பெண்களின் எண்ணிக்கை நின்று போன பிறகு குழந்தைகள் இல்லமாக (Children's Home) மாற்றப் பெற்றது.

இவர் சமயத் தொண்டிலும் இறங்கி, தெய்வத் திருநீறும் அக்கமணியும் தரித்து ஆற்றிய சொற்பொழிவுகள் பல. காரைக்குடியில் பலர் இதை எனக்குச் சொல்லியதுண்டு. இவரது நட்பு எனக்கு ஏற்பட்ட பிறகு தம் சமயப்பணியை எனக்குச் சொன்னார். ஒரு நாள் நான் அமராவதிப் புதூர் மகளிர் இல்லத்தில் (1952) பல விஷயங்களைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்த பொழுது திடீரென்று என்னை நோக்கி, "ரெட்டியார்வாள்! சுயமரியாதைக்காரனான என்னை என்னவென்று நினைக்கின்றீர்கள்?

நெற்றியில் ஒன்றும் அணியவில்லை என்பதால் கடவுள் நம்பிக்கை அற்றவன் என்று கருதுகின்றீர்களா? (என் நெற்றியிலிருந்த திருநீற்றுக்காப்பும் குங்குமப்பொட்டும் இவ்வாறு பேசத் தூண்டியிருக்க வேண்டும்). எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. " நான் நாளொன்றுக்கு அணிந்த திருநீற்றின் எடை ஐந்து பலம் இருக்கும். கழுத்தில் நிரந்தரமாக ஓர் அக்கமணி திகழும். சிறப்பான நிகழ்ச்சியின் போது முக்கால் கிலோ எடை அக்கமணி மாலை தலையிலும் கழுத்திலும் பொலியும். திருவாசகம், தேவாரம், பெரியபுராணம் இவை பற்றி எண்ணற்ற பேச்சுகள் நிகழ்த்தி யிருக்கின்றேன். அவை இப்போது இவை 'பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்ல மெல்லப் போயின' ஆஷாடபூதிகள் நிறைந்த இவ்வுலகில் இவை பயன்படா என்று நினைத்து இவற்றைக் கைவிட்டேன். வைதிகப் போர்வை பயன்படாது என்று கருதி, அதனைத் துறந்து எந்தப் போர்வையுமின்றி நேர்மையாகப் பணியாற்றி வந்தேன். இப்போது எல்லாவற்றையுமே துறந்து தமிழ்ப் பணியிலும் இறங்கி விட்டேன். என்று வேகமாகப் பேசி என்னை உணர்ச்சி வசப்படுத்திவிட்டார். இப்போது முருகப்பனாரின் உள்ளம் (சொரூபம்) எனக்குத் தெளிவாகியது. இப்படிப் பலநிலைத் தொண்டுகட்குப் பின் இலக்கியப் பணியில் இறங்கும் தருணத்தில்தான் இவருடைய நட்பு எனக்குக் கிடைத்தது. இந்நிலையில் கம்பராமாயணத்தைச் செம்மைப்படுத்தும் பணியில் இறங்கினார். என்னையும் வேறு சில புலவர்களையும் இதில் ஈடுபடுத்தினார்.

**14. இராமச்சந்திர அய்யர்:** பேராசிரியர் *1943-44* காலகட்டத்தில் தாம் பணியாற்றிய பள்ளியை உயர்நிலைப் பள்ளியாக மேம்படுத்தும் பொருட்டுச் சென்னை சென்றிருந்த போது இராமச்சந்திர அய்யர் என்ற கல்வியதிகாரியைச் சந்தித்தார். அவர் பற்றிய பேராசிரியரின் குறிப்பு மூலம் அன்றைய காலத்திலேயே உயர்ந்த உள்ளம் கொண்ட பிராமணர்கள் பலர் இருந்தனர் என்பது தெரியவரும்.

"ஒருநாள் இராமச்சந்திர அய்யர் என்னிடம், "மிஸ்டர் ரெட்டியார். சென்னையில் இருக்கும்வரை என் வீட்டிலே தங்கலாம்; உணவும் இங்கேயே கொள்ளலாம். வெளியில் உணவு கொண்டால் உங்கள் உடல்நிலை கெடும்'' என்று கூறித் தன் வீட்டிலேயே என்னைத் தங்குமாறு பணிக்க நானும் மயிலாப்பூரிலிருந்து திருவல்லிக்கேணிக்கு வந்துவிட்டேன்.

காலையில் ஆறு மணிக்கு கா∴பி தருவார். அதை அருந்தியவுடன் வெளிக்கிளம்பிவிடுவேன். அரைமணி நேரத்தில் ஒரு ரூபாய்க்குக் காய்கறிகள் வாங்கிவருவேன். இப்போது (ஆகஸ்டு-1989) பத்து ரூபாய்க்கு வாங்கினாலும் அவ்வளவு காய்கறிகள் இரா. நான் வாங்கிவரும் காய்கறிகள் இரண்டு நாட்களுக்குப் போதுமானவைகளாக இருக்கும். நான் தங்கியிருந்த 15 நாட்களும் இப்படியே காய்கறிகள் வாங்கிவரும் பணியை மேற்கொண்டிருந்தேன். என்னைத் தன் மகன் போல் பாவித்து அன்புடன் கவனித்துக் கொண்டார். அவரே ஆடைகளைத் துவைத்து உலரவைப்பார்; பிறகு பூசையில் இறங்கிவிடுவார். நான் காய்கறிகளுடன் வரும்போது பூசையில் இருப்பார். நானும் நீராட்டத்தை முடித்துக்கொண்டு அலுவலகம் செல்லத் தயாராகி விடுவேன். சிறந்த வைதிகராயிருந்தாலும் என்னைத் தன் அருகிலிருந்து உணவு கொள்ளுமாறு செய்வார். இலை எடுப்பதற்கும் அனுமதியார். தம் துணைவியாரையே செய்யச் சொல்வார். அந்த அம்மையாரும் மனமுவந்து அதைச் செய்வார்கள். நாள்தோறும் அவருடனேயே கல்வி இயக்குநர் அலுவலகம் போய்வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

ராமச்சந்திர அய்யர் எதையும் ஏற்றுக்கொள்ளார் என்பதை நான் நன்கு பழகியதால் அறிந்திருந்தேன். கைச்சுத்தமான ஓர் அலுவலரை அக்காலத்தில் கண்டது வியப்பினும் வியப்பாக இருந்தது. அன்றைய நிலையில் மேல்மட்டத்திலிருந்து கீழ் மட்டம் வரை அன்றாடம் நடைபெற்றுவரும் கையூட்டுக் கூத்துகளை நினைக்கும் பொது இராமச்சந்திர அய்யரின் நல் தொண்டு இமயமலை அளவு உயர்ந்துகாணப்பெறுகின்றது. மக்களாட்சி முறையில் இன்று நடைபெறும் அக்கிரமங்கள், அடாவடித் தனங்கள் இவற்றையெல்லாம் பார்த்துக்கொண் டிருக்கும் இறைவன் ஏன் கண்மூடி மௌனியாக இருக் கின்றானோ என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை"

**15. தந்தை ஈ.வெ.ரா பெரியார்:** தந்தை பெரியாரிடம் பேராசிரியருக்கு நல்ல அறிமுகம் இருந்துள்ளது. அவரைப் பற்றி தந்தை பெரியார் சிந்தனைகள் என்ற நூல்கூட எழுதியுள்ளார். அதிலுள்ள ஒரு முக்கிய நிகழ்வை இவண் சுட்டலாம்.

"மூன்று சுவையான நிகழ்ச்சிகள்: தந்தை பெரியாரை நினைக்கும் போது மூன்று சுவையான நிகழ்ச்சிகள் நினைவிற்கு வருகின்றன.

ஒரு சமயம் அவர் திறந்த மகிழ்வுந்தில் சென்று கொண்டிருந்தபொழுது அவர்மீது அவருக்குப் பிடிக்காத ஒருவன் ஒரு மிதியடியை வீசினான். அஃது அவர் மடியின்மீது விழுந்தது. அவர் அதை எடுத்து நோக்கியபோது அது புதியதாக இருந்தது. வண்டியோட்டியிடம் 'வண்டியைத் திருப்பு; மற்றொன்று சாலையில் கிடக்கும்; அதை எடுத்து வரலாம்! அது ஒருவருக்கும் பயன்படாது; இது நமக்கும் பயன்படாது. இரண்டும் நம் கைக்குக் கிட்டினால் நமது அலுவலகத்தில் யாராவது பயன்படுத்திக் கொள்ளலாம்' என்று கூறிச் சாலையில் கிடந்த மிதியடியை எடுத்து வந்தார்.

தந்தை பெரியாரைப் பார்த்து, "செருப்பு உங்கள்மீதுப் பட்டும் கோபம் வரவில்லையே ஏன்?" என்று கேட்டேன். அதற்கவர், 'தம்பி, பொதுத்தொண்டில் இருப்பவர்கட்கு இது போன்றவை அடிக்கடி நிகழக்கூடியவை. படித்தவனாக இருந்தால் கூட்டத்தில் மறுத்துப் பேசுவான்; அல்லது செய்தித்தாளில் மறுப்புத் தெரிவிப்பான். இவன் படிக்காத முட்டாள். இவன் தன் எதிர்ப்பைச் செருப்புமூலம் காட்டினான். இதில் கோபப்படுவதற்கு என்ன இருக்கின்றது" என்று அமைதியாகக் கூறினார். 'பெரியார், பெரியாரே' என்பது என் அறியா மதிக்குத் தெளிவாயிற்று." (பேரா. ந. சுப்புரெட்டியார் தந்தை பெரியார் சிந்தனைகள், பக்.*5*)

**16. காரைக்குடி மக்கள் பற்றிய கருத்து:** காரைக்குடியில் இருந்த போது நகரத்தார் வகுப்பைச் சேர்ந்த பெரியவர்களிடம் பழகும் போதெல்லாம் அவர்களிடம் என் பேச்சு, தமிழையொட்டியே இருக்கும். நகரத்தார் பெருமக்கள் நல்ல பண்புடையவர்கள். தமிழ் பற்று மிக்கவர்கள். பெரும்பாலோர் சைவர்கள். திருநீறு சந்தனப்பொட்டு இல்லாத பெரியவர்களைப் பார்க்க முடியாது. நான் பழகியவர்களில் பலர் சிவபூசை எடுத்துக் கொண்டவர்கள் குரு முகமாக. இவர்களில் இளைஞர்கள் செயல்திறன் மிக்கவர்கள் (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-*4* பக். *18*)

**17. வேளாளக் கவுண்டர் இன மக்கள் பற்றிய கருத்து:** கவுண்டர்கள் மிக்க உழைப்பாளிகள். மேழிச் செல்வம் கோழை படாது என்பதை மறைமொழியாகப் போற்றி உழைப்பவர்கள். தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது என்பதன் உட்கருத்தை உணர்ந்தவர்கள். சாதாரணமாக இவர்களைப் பகலில் மாலை 6 மணிக்கு முன் ஊருக்குள் பார்க்கமுடியாது. வயல்களில்தான் பார்க்கலாம். (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-*1* பக். *440*). இது போல் பல பெரியவர்கள் குறித்தும் மக்கள் குறித்தும் கருத்துரைத்துள்ளார் பேராசிரியர் அவர்கள்.

# 6. நினைவுக்குமிழிகள் – வரலாற்றுப்பதிவுகள்

வரலாற்றைப் பொறுத்தவரை மனிதகுலம் தோன்றிய காலம் முதல் இன்றுவரை, மக்கள் வாழ்வியலில் எவ்வளவோ மாற்றங்கள், வளர்ச்சிகள் நிகழ்ந்துவிட்டன. மனிதர்களிடையே வரலாற்றுணர்வு எழத் தொடங்கிய காலம்தொட்டுத் தமக்கெட்டிய அறிவை வைத்துக்கொண்டு அவ்வக்கால நிகழ்வுகளைத் தமக்குத் தெரிந்த விதத்தில் பதிவுசெய்துள்ளனர். வரலாறு என்பது அமைப்பு சார்ந்த ஓர் அறிவுமுறையாக மாறியபோது வரலாற்றின் முக்கியத்துவம் உணரப்பட்டது. குறிப்பாக, கழிந்த கால வரலாறுகள் தற்கால வாழ்வுக்குத் தேவைப்படுவனவாக மாறிவிட்டன. அதன்மூலம் பாடங்கள் பெற்றுக்கொண்டு எதிர்காலத்திற்கான திட்டமிடல்கள் நிகழ்த்தப்பெறுகின்றன. ஆனால் ஆவணங்களைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட மனிதகுல வரலாறு எல்லா உண்மைகளையும் பதிவு செய்திருக்கிறாதா என்றால் இல்லை என்றே கூறமுடிகிறது. வரலாற்றைக் கட்டமைப்பதற்குத் தேவையான பல தரவுகள் இன்னமும் வரலாற்று நூற்களுக்கு வெளியிலேயே காணப்படுகின்றன. எனவே, ஒரு பெரும் நிகழ்வு நடந்திருக்கும்போது அது பற்றிய கூடுதலான விளக்கங்களைப் பெற, வரலாற்று நூல்களல்லாத முந்தைய கால இலக்கியங்கள் அல்லது புராணங்கள் அல்லது அகழாய்வுப்பொருட்கள் அல்லது வாய்மொழி வழக்காறுகள் போன்ற வேறுவகையான ஆவணங்களைப் பார்க்க வேண்டியுள்ளது. இவற்றுடன் சுயசரிதை எழுத்துக்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

பல்வேறு ஆவணங்கள் வரலாறு எழுதுவோருக்குப் பயன்பட்டாலும் சுயசரிதை நூல்கள் உண்மைக்கு நெருங்கியவனாகக் கருதப்படுகின்றன. காரணம் வரலாற்றுப் பிரக்ஞை கொண்டவர்களால் தான் சுயசரிதை எழுத முடியும். அத்தகைய நூற்களின் வரிசையில் ஆனந்தரங்கம்பிள்ளையின் நாள்குறிப்பு, வ.உ. சாமிநாதையரின் என் சரித்திரம், பாபரின் பாபர் நாமா போன்ற நூல்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தை அறிவதற்கான வரலாற்று நூல்களாகத் திகழ்கின்றன. இந்த நூற்களின் வரிசையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் நினைவுக்குமிழிகள் எனும் சுயசரிதையையும் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளலாம்.

தற்போது கிடைக்கும் சுயசரிதை நூற்களை இவ்வாறு வகைமைப்படுத்திக் கொள்ளலாம்:

1. தனிமனிதர் தம் தினசரி வாழ்க்கையைப் பதிவு செய்கின்ற டைரி அதாவது நாட்குறிப்பு. ஆனந்தரங்கம்பிள்ளை நாள்குறிப்பு இவ்வகையைச் சேர்ந்தது.

2. ஒரு குறிப்பிட்ட வயதை அடைந்ததும் தன் வாழ்க்கையைத் தனது ஞாபகத்திலிருந்து கோர்வையாகச் சொல்லுகின்ற முறை. மகாத்மாகாந்தியின் சத்தியசோதனை நூல் இவ்வகைக்குச் சான்று.

3. தன் வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகள் பற்றி மட்டும் சொல்லுகின்ற தன்மை. அல்லது தான் பின்பற்றும் கருத்துகளுக்கு அல்லது இயக்கத்தைத் தழுவுவதற்கு இதுதான் காரணம் எனத் தமது வாழ்க்கையனுபவத்தைக் கூறி விளக்கும் பாங்கு. இதற்கு எடுத்துக்காட்டாக, உயர்பதவி வகித்தோர் அல்லது குறிப்பிட்ட துறை சார்ந்த வல்லுநர் தமது அனுபவங்களை அல்லது குறிப்பிட்ட விவகாரங்களைக் கையாண்ட விதம் போன்றவற்றை எழுதுவது. எடுத்துக்காட்டு: Native Life in Travancor என்ற நூல் எழுதியவர் Samuel Mateer என்பவர்.

இவற்றுள் இரண்டாம் வகையிலான சுயசரிதை நூற்களைப் பொறுத்தவரை, எழுதுவோர் குறிப்பிட்ட வயதில் தமது நினைவுகளைக் கோர்வையாக்கி எழுதப்படுபவை. என்றாலும் கூட உண்மையை நெருங்கி எழுதப்படுபவை. இந்தவகையில் எழுதப்பட்டதுதான் பேராசிரியரின் நினைவுக்குமிழிகள் எனும் நூல் இது இருபதாம் நூற்றாண்டுக்குரிய பரந்துபட்ட வரலாற்றின் ஒரு சிறுபகுதியைப் பதிவுசெய்யும் ஆவணமாகவே திகழ்கிறது என்று சொல்லமுடிகிறது.

பேராசிரியர் வாழ்ந்திருந்த கிராமங்களின் அமைப்பு, பழக்க வழக்கங்கள், கல்விமுறை, கல்விநிறுவனங்கள், அரசு அலுவலகங்கள். சமூகப் பண்பாடு, நம்பிக்கைகள், அரசியல் தலைவர்கள், இலக்கிய ஆளுமைகள், முக்கியமான நகரங்கள் மற்றும் வாழ்வியல் போன்ற பல்வேறு செய்திகள் இந்நூலில் பதிவாகியுள்ளன. இந்தச் செய்திகள் இரண்டு நிலைகளில் பயனாகின்றன. 1. பேராசிரியர் அடையாளப்படுத்தும் பண்பாட்டு நிகழ்வுகள் இப்போது நீடித்திருக்கின்றனவா என்பதையும் அவர் வாழ்ந்த காலத்திலிருந்து தற்கால சமூகம் அல்லது நாடு எந்த அளவிற்கு மாறிப் போயிருக்கிறது என்பதையும் அறிய முடியும் 2. முக்கிய ஆளுமைகள் பற்றி இதுவரை தெரியாத புதிய செய்திகளைத் தெரிந்து கொள்ளமுடியும்.

இனி நினைவுக்குமிழிகள் பதிவுசெய்துள்ள சமூக உண்மைகளுள் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலவற்றை பார்க்கலாம். இதன் மூலம் அவரது சுயசரிதை வரலாறு சார்ந்தும் பயன்படும் என்பது உறுதியாகிறது.

## I) பண்பாட்டுச் செயல்பாடுகள்:

ஒரு சமூகமக்கள் ஒன்று சேர்ந்து எவ்வாறான திருவிழாக்கள் நடத்தியுள்ளனர் என்பதை நினைவுக்குமிழிகள் பதிவு செய்துள்ளமை கவனிக்கத்தக்கது.

**1. முயல்வேட்டைத்திருவிழா:** பெரகம்பி ஊரின் கிழக்குப் பக்கத்தில் அரிஜன மக்கள் ஏராளமான பேர் வாழ்ந்திருந்தனர். ஒற்றுமை மிகுந்த அவர்கள் நிலச்சுவான்தார்களைச் சார்ந்து வாழ்ந்தார்கள். ஆண்டுதோறும் சித்திரை மாதம் அன்று இவர்கள் நடத்தும் முயல் திருவிழா கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். அவர்கள் ஆட்டமும் பாட்டமுமாகச் சிலம்பாட்டம் விளையாடுவதும் கத்தி வீச்சுச் செய்வதும் காண்போர் கண்களுக்கு விருந்தாக இருக்கும்.

**2. காமன்பண்டிகை:** தமிழகத்தில் இப்போது மறைந்து போன காமன் பண்டிகை பேராசிரியர் காலத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டிருந்ததை நினைவுக் குமிழிகள் வழி அறிய முடிகிறது.

இந்தப் பண்டிகை லாவணி என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது. மாசி மாதம் இது பெரகம்பி ஊர் வட்டாரத்தில் நடைபெற்று வந்தது. நேராக உள்ள கரும்புகளின் தோகைகள் வெளியில் தெரியுமாறு வைக்கோல் பிரியைச் சுற்றி ஒரு தூண் போலாக்கி நட்டு அதைச் சுற்றிலும் ஒரு பீடம் அமைக்கப்படும். அது எரிக்கப்படும் வரை நாள்தோறும் விளக்கேற்றப் பெற்றுத் தீபாராதனை செய்யப்படும். மன்மதன் ரதி வேடம் போட்டுக் கொண்டு நாள்தோறும் பொருத்தமான பாடல்களைப் பாடிக் கொண்டு வீடு தோறும் நிதிவசூலித்து வருவார்கள். விழாவின் இறுதி நாளன்று தென்னை இளங்குருத்தோலைகளாலான ஒரு பெரிய தேர் வேயப்பட்டு வைக்கப்பட்டிருக்கும். பிறகு காமன் தீக்கொளுத்தப்படுவான்.

அதாவது வைக்கோல் பிரியாமல் சுற்றப்பட்ட கரும்பு தீவைக்கப்படும். பிறகு ரதி வேடம் போட்டவர் ஒப்பாரிப்பாடல்

பாடுவார். இந்நிகழ்விற்குப் பிறகு வாதம் புரிகிற நிகழ்ச்சி நடக்கும். எரிந்த கட்சி, எரியாத கட்சி என்ற இரு பிரிவாகப் பிரிந்து வாதம் புரிவர். எரிந்த கட்சியினர் மன்மதன் அழிந்து போய்விட்டான் என்று வாதம் புரிவர். எரியாத கட்சியினரோ மன்மதன் கண்ணுக்குப் புலனாகாமல் இன்றும் வாழ்கிறான் என்று சாதிப்பார்கள். இருதரப்பினருமே தங்கள் பாடல்களைப் பாடி தங்கள் வாதங்களை முன் வைப்பர். விடியும் வரை இந்த நிகழ்ச்சிகளை மக்கள் உறங்காமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

**3. திருவிழாக்கள்:** கோவில் திருவிழாவைப் பொறுப்பேற்று நடத்துவது அந்தஸ்தாக இருந்துள்ளது. திருவிழா நடத்துவது தொடர்பாக இருவேறு சாதிகளிடையே மோதல்கள் நிகழ்ந்துள்ளன. தங்கள் தரப்புக்கு நீதிகிடைக்கப் போலிஸ் ஸ்டேஷனுக்கும் நீதிமன்றத்திற்கும் மக்கள் அலைந்துள்ளனர். அதற்காகப் பெரும் பணம் செலவழித்துள்ளனர். ரெட்டியார்களுக்கும் அரிசனங்களுக்கும் விவசாயம் தொடர்பாக மோதல் நிலவி வந்துள்ளது. அதைச் சாதகமாகப் பயன்படுத்தித் தரகர்கள் அரிசனங்களிடமிருந்து பணம் உறிஞ்சி வந்துள்ளனர். ரெட்டியார்களும் அரிசனங்களும் சமாதானமாகி விட்டால் தங்களுக்கு வரும்படி குறைந்துவிடும் என்று போலிசார் செயல்பட்டிருக்கின்றனர்.

**4. திருமணம்**: ஒரு மனைவியை மட்டுமே திருமணம் செய்யும் வழக்கம் சமூகத்தில் நடைமுறையிலிருந்தாலும் இரண்டாவது திருமணம் செய்து கொள்வதும் அந்தக் காலத்தில் சாதாரணமாக இருந்துள்ளது. திருமணமாகிச் சில ஆண்டுகள் குழந்தைப் பேறு இல்லாமல் போனால் அந்தப் பழியைப் பெண் மீது போட்டுவிட்டு ஆண்கள் இரண்டாம் தாரம், மூன்றாம் தாரம் வரை திருமணம் செய்து கொள்வது உண்டு.

## II. உணவுமுறை:

இருபதாம் நூற்றாண்டில் திருச்சி வட்டாரத்தில் பெரிய செல்வந்தர்கள் உள்ளிட்ட மக்கள் மதிய உணவாகக் கம்பு, கேழ்வரகு ஆகியவற்றின் மாவினை உட்கொண்டு வந்துள்ளனர். அரிசிச் சோறு அபூர்வமாகவே உண்டு வந்துள்ளனர். இதற்கு அதிகக் காய்கறி தேவையில்லை என்பதற்காக இருக்கலாம். மறுநாள் பழையதுக்கும் சுகமாக இருக்கும் என்ற எண்ணத்திலும் இப்படிப் பயன்படுத்தியிருக்கலாம்.

## III. பழக்கவழக்கங்கள்

**1) நீந்தக்கற்றல்:** *இன்றைய காலத்தில் நீச்சல் பயிற்றுவிப்பதற்கு எத்தனையோ முறைகள் உள்ளன. ஆனால் 1920 களில் நீச்சல் பயிற்றுவித்த முறையை வாசிக்கும் போது வியப்பேற்படுகிறது. இதைப் பேராசிரியர் கூற்றாகவே பார்ப்போம். "ஐந்து வயது முதல் அல்லது ஆறு வயது முதலே என் தாய்மாமன் எனக்கு நீந்தக் கற்றுக் கொடுத்து விட்டார். சுரைக்குடுக்கையை வலைப் பின்னலால் மூடி அதை முதுகுப்புறமாக இடுப்பில் கட்டிக் கிணற்றில் இறக்கி விடுவார். நான் காலையும் கையையும் எப்படி இயக்க வேண்டும் என்று சொல்லித் தருவார். சில நாட்கள் வரை இப்படி நடைபெறும். அடுத்து இடுப்பளவு உள்ள தண்ணீர் உள்ள கிணற்றில் சுரைக்குடுக்கையின்றி நீந்தவிடுவார். இதில் தேர்ச்சி பெற்றதும் சற்று ஆழமாக உள்ள நீர்க் கிணறுகளில் இந்தப் பயிற்சி நடைபெறும். ஒன்றிரண்டு மாதங்களில் நன்றாக நீந்தத் கற்றுக் கொண்டேன். சிற்றூர்களில் அந்தக் காலத்தில் நீந்தத் தெரியாதவர்களே இலர்"*

**2) சிறுவர் விளையாட்டுப் பொழுதுபோக்குகள்:** தற்காலத்திலிருந்து முற்றிலும் வேறுபட்ட பரம்பரையான விளையாட்டுகள் இருபதாம் நூற்றாண்டில் இருந்துள்ளன. நினைவுக் குமிழிகள் நூலின் வழிக் காணும் விளையாட்டுகள் அக்காலத்தில் ஆடப்பெற்றன என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

கிட்டிப்புள் விளையாட்டு, பம்பர விளையாட்டு, பிள்ளையார் பந்துவிளையாட்டு, ஆட்டைப் பிடிப்பேன் கோனாரே, கால் தூக்கும் கணக்கப்பிள்ளை, பீச்சுக்குழல் விளையாட்டு, உருவம் அமைத்தல். இந்த விளையாட்டுகள் எல்லாம் எப்படி விளையாடப்பட்டன என்றும் விளக்கப் பட்டுள்ளன.

பொன்வண்டு எனப்படும் ஒருவகையான வண்டைப் பிடித்து வீட்டில் பொழுதுபோக்காக வளர்த்தல் மற்றும் பட்டம் பறக்க விடுதல் போன்றன சிறுவர்களுக்கு வழக்கமாக இருந்துள்ளன. ஒரே நேரத்தில் பல பொன்வண்டுகள் வைத்திருக்கும் வழக்கம் இருந்தது. அவற்றிற்கு இரையாக இலைகளைக் கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது.

## IV. கல்வியமைப்பு முறை

**திண்ணைப் பள்ளிக்கூடம்:** அந்தக் காலத்தில் அதாவது 1920-களில் நடப்பில் இருந்துள்ளது. விடியற்காலை ஐந்தரை மணிக்கு வகுப்புத் தொடங்கி விடும். முதல் வருடம் மணலில்தான்

கைவிரலால் எழுதி, தமிழ் எழுத்து நெடுங்கணக்கையும் ஒன்று முதல் நூறு வரையிலான எண் வாய்பாடுகளையும் மாணவர்கள் படித்துக் கொண்டனர். திங்கள்கிழமை தோறும் மாணவர்கள் தாங்கள் எழுதிப் பழகிய மணலை மாற்றிப் புதிய மணலைப் பரப்ப வேண்டும். இரண்டாம் அல்லது மூன்றாம் ஆண்டில் தான் கற்பலகை மற்றும் பலப்பம் ஆகியன எழுதப் பயன்படுத்தப்பட்டன. அடுத்த ஆண்டு நோட்டுப்புத்தகத்தில் பென்சிலைக் கொண்டு எழுதப் பழகினர். எழுதுவதில் கை தேர்ந்ததும் அடுத்த ஆண்டு relief nib பதித்த பேனாவால் நோட்டில் எழுதப் பழுகினர். எழுதுவதற்கான மை ஆசிரியராலே தயாரிக்கப்படும். கடுக்காயைக் காய்ச்சி அதிலிருந்து தயாரிக்கப்பட்ட மையைச் சிறிய சுடுமண்ணாலான மைக்கூட்டினுள் வைத்திருப்பர். மையில் தொட்டு தொட்டு மாணவர்கள் நோட்டு புக்கில் எழுதிக் கொள்வார்கள். இந்த நோட்டுப் புத்தகங்கள் நான்கு வரி மூன்று வரி இரண்டு வரி ஒற்றை வரி என நான்கு வகையாக இருந்தன. தொடக்கத்தில் நான்கு வரி நோட்டிலும் பிறகு மூன்று வரி நோட்டிலும் பிறகு இரண்டு வரிநோட்டிலும் கடைசியில் ஒற்றைவரி நோட்டிலும் மாணவர்கள் எழுதிப் பழகிக் கொண்டார்கள். மணலில் எழுதும்போதும், கற்பலகையில் பலப்பத்தால் எழுதிப் பழகும் போதும், நோட்டில் பென்சிலால் எழுதிப்பழகும் போதும் ஆசிரியர் எழுத்தில் கவனம் செலுத்தி மாணவர்களைச் சரிப்படுத்துவார். இதனால் எழுத்துக்களின் சரியான வடிவம் மாணவர்களின் மனத்தில் சரியாக நிலை நின்று விடும். எழுத்துக்களுக்கு இடையிலேயும் வரிகளுக்கு இடையிலே அமைய வேண்டிய இடைவெளிகளை எடுத்துச் சுட்டுவார். இதனால் முத்துப் போன்று அழகாக எழுதுவதில் மாணவர்கள் திறம்பெற்றனர்.

ஆசிரியர் பனையோலையால் செய்யப்பட்ட தடுக்கு ஒன்றில் நேராக உட்கார்ந்து இருப்பார் மேல் சட்டை அணியும் பழக்கம் கொண்டிருந்தாலும் மேல் சட்டை அணியாத ஆசிரியர்களும் அந்தக் காலத்தில் இருந்தனர். தொடக்கப் பள்ளி மாணவர்கள் பலரும் மேலாடை அணியாமலே பள்ளி வந்தனர். பேராசிரியர் சுப்புரெட்டியார் தாம் சிறு வயதில் தொடக்கப் பள்ளியில் மேல்சட்டை அணியாமலேயே பள்ளிக்குச் சென்றதாகக் குறிப்பிடுகிறார். அக்கால ஆசிரியர்கள் கூடுதல் தகுதிகள் கொண்டிருந்தனர். ஜோதிடக்கலையிலோ அல்லது சித்த மருத்துவத்திலோ தேர்ச்சி கொண்டிருந்தனர். இவற்றின் மூலமும் பிறருக்கு எழுதிக் கொடுக்கும் வழக்கத்தின் மூலமும் அவர்களுக்கு வருமானம் கிடைத்து வந்தது.

1940கள் வரை முதலாம் படிவம், இரண்டாம் படிவம், மூன்றாம் படிவம், நான்காம் படிவம் என்றிருந்தன. மூன்றாம் படிவம் என்பது 8ஆம் வகுப்பைக் குறிக்கும். நான்காம் படிவம் என்பது 9ஆம் வகுப்பைக் குறிக்கும். தனிநபர்கள் நடுநிலைப்பள்ளி தொடங்க வேண்டும் என்றால் அரசுக் கணக்கில் 10 ஆயிரம் ரூபாய் டெபாசிட் செய்யப்பட வேண்டும். பதிவு பெற்ற குழு ஒன்றை அமைத்து அந்தக் குழுவின் கீழ் கல்விநிர்வாகம் செயல்பட வேண்டும். மாணவர்கள் விளையாட ஐந்து ஏக்கர் பரப்புக் கொண்ட நிலம் பள்ளிக்கு இருக்க வேண்டும். அரசு வகுத்துள்ள திட்டப்படி ஆசிரியர்களுக்குச் சம்பளம் அளிக்க வேண்டும்.

இலவசக் கல்வி அன்றைய காலத்தில் இல்லை. 1941இல் ஒன்று முதல் மூன்று படிவம் வரை படிக்கும் மாணவர்களின் கல்விக்கட்டணம் 2 ரூபாய் 75 பைசா! நான்கு முதல் ஆறு படிவம் வரையில் படிக்கும் மாணவர்களுக்குக் கல்வி கட்டணம் 5 ரூபாய் 25 பைசா! இது தவிர ஒவ்வொரு பருவத்திலும் நூலகக் கட்டணம் 8 பைசா, விளையாட்டுக் கட்டணம் 12 பைசா, தேர்வுக்கட்டணம் 1 ரூபாய் ஆகியவற்றை மாணவர்கள் செலுத்த வேண்டியிருந்தது.

வக்கீல் அலுவலகங்களில் எழுத்தர் பணிக்கு மூன்றாம் படிவம் படித்து இருந்தாலே போதும். அதாவது எட்டாம் வகுப்பு. இந்தப் பணியை ஐந்தாம் வகுப்புப் படித்தவர்கள் பார்த்து வந்தார்கள்.

**V. சமூகங்கள் பற்றிய பதிவு**: பல்வேறு சமூகம் சார்ந்த உயர்ந்த மனிதர்கள் பற்றி வெளிப்படையாகவே நினைவுக்குமிழி பேசுகிறது. தனி மனிதர்களை அவர்கள் சார்ந்த சாதியின் பெயரால் ரெட்டியார் அவர்களே, செட்டியார் அவர்களே என்பன போன்று அழைப்பது அக்கால வழக்கமாக இருந்துள்ளது. கோமுட்டிச் செட்டியார் மற்றும் செட்டியார்கள் பற்றிய சுவையான செய்திகள் பல உள்ளன. கோமுட்டிச் செட்டியார் சமூகம் பற்றித் தமது அனுபவத்தை முன்னிறுத்தி, "நான் என் தாய் மாமன் வீடு திரும்பும் போது ஒரு கோமுட்டிச் செட்டியார் சிறந்த முறையில் தயாரிக்கும் நெய் பிசுகோத்தை (வெண்ணெய்) வாங்கி வந்து என்னிடம் தந்து விட்டுப் போவார்." என்கிறார் பேராசிரியர்.

பிராமண சமூகத்தவர்களுள் மிகுந்த நேர்மையும் பிறருக்கு உதவும் தன்மை கொண்டவர்களும் இருந்துள்ளனர். அதேவேளை பிராமணர்களுள் பலர் ஆதிக்க மனப்பான்மையுடன்

இருந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது. பிராமணர்களது கோட்டை தகர்க்கப்பட வேண்டும் என்றும் அதற்காகப் பெரியார் நெடுங்காலம் வாழவேண்டும் என்றும் பதிவு செய்கிறார் பேராசிரியர்.

திருச்சி மாவட்டத்தில் ரெட்டியார் சமூகத்தில் 1930 களில் மூன்று பேர் மட்டுமே பட்டதாரிகள். மூவரும் சட்டம் படித்தவர்கள். ஜமீந்தார் குடும்பத்தவர். ரெட்டி நலச்சங்கம் என்ற அமைப்பு மாணவர்களின் படிப்புக்கு உதவிவந்தது.

VI. **பாம்பு கடித்தல்:** இந்தியச் சமூக அடையாளத்துள் பாம்புக்கும் ஒரு பங்குண்டு. பாம்பை வழிபடுதல் தவிர, பாம்பு கடித்தல் இந்தியாவில் சகஜமாக நிகழ்ந்து வந்துள்ளமையை வெளிநாட்டினர் குறிப்புகளும் இந்திய மருத்துவக் குறிப்பேடுகளும் சுட்டிக்காட்டுகின்றன. பாம்பு கடித்து இறந்தவர்கள் நிறையப் பேர். அதை உறுதிப்படுத்துவது போல் பாம்பு கடித்து இறந்து போனவர்கள் பற்றிப் பேராசிரியர் பேசுகிறார். "பெரகம்பி நண்பர்களில் வரகுப்பாடி கிருஷ்ணசாமியும் மொட்டை ரெட்டியார் வீட்டு ரங்கசாமியும் பாம்பு கடித்து இறந்தார்கள். இவர்களைத் தவிர வேட்டக்குடித்தம்பு என்ற பணக்காரர் ஒருவரும் வேறு சிலரும் பாம்பு கடித்தே மரித்தனர் என்ற செய்தியும் எனக்கு எட்டியது."

VII. **பொருள்களின் விலை:** இருபதாம் நூற்றாண்டில் விலைவாசிகள் எவ்வாறு இருந்தன என்பதை நினைவுக்குமிழி மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது. 1930 களில் பொருட்களின் விலைகள் எவ்வாறு இருந்தன, கல்விக் கட்டணம் எவ்வாறு இருந்தது என்பன போன்ற செய்திகளைப் பெறமுடிகிறது. சைக்கிள் விலை 28 ரூபாய். ஒரு அறைக்கு மாத வாடகை 3 ரூபாய். இருவர் தங்கும் அறைக்கு 5 ரூபாய். காரின் விலை 1500 ரூபாய். ஒரு காலன் பெட்ரோல் விலை 14 அணா, அதாவது 88 பைசா. ஒரு சவரன் பவுன் விலை 12 அல்லது 13 ரூபாய். ஆங்கில பத்திரிகையான Hindu வுக்கு மாத சந்தா 4 ரூபாய். கல்லூரியில் பயில ஆண்டொன்றுக்கான கல்விக்கட்டணம் 90 ரூபாய். உணவு விடுதியில் மாதம் 10 ரூபாய்க்கு இரு நேரம் உணவு சாப்பிடலாம். நார்க்கட்டிலின் விலை 2 ரூபாய். 1940இல் கொசுவலையின் விலை 6 ரூபாய். கல்லூரி விடுதியில் இருப்பிடம் மற்றும் உணவுக்காக மாதம் 25 ரூபாய் வசூலிக்கப்பட்டது. சென்னையில் உள்ள மாம்பலம் மற்றும் சைதாப்பேட்டை இடையே மின் இரயிலில் பயணம் செய்ய 3 பைசா ஆகும். நடுநிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் பணிக்கு மாதம் 40 ரூபாய் சம்பளம். பள்ளி மாணவர் விடுதியில் சமையல்

செய்வதற்கு மாதச் சம்பளம் ரூபாய் 25. 1950 களில் திருச்சியில் இருந்து காரைக்குடிக்கு இரயில் மூலம் பயணநேரம் - 3 மணி 15 நிமிடம்.

VIII. **நம்பிக்கை:** மக்கள் சோதிடத்தில் பெரும் நம்பிக்கை வைத்திருந்தனர். சோதிட ஆலோசனை பெறப் பணம் நிறையச் செலவழித்துள்ளனர். ஜோதிடர்கள் கூறியது போலவே வாழ்க்கையிலும் செயல்பட்டு வந்துள்ளனர். பேராசிரியர். ந. சுப்புரெட்டியாரது மைத்துனர் வாழ்க்கை அதற்கு உதாரணமாகத் திகழ்கிறது. ஜோதிட நம்பிக்கைகளை வைத்துப் பிறரை ஏமாற்றி இருக்கிறார்கள். தமது குடும்பமும் அவ்வாறு பாதிக்கப்பட்டது என்பதைப் பேராசிரியர் பதிவு செய்துள்ளார். தமது சாதகத்தைப் பார்த்தவர்கள் தமக்கு மக்கட்பேறு கிடையாது என்றும் தாம் 37 வயதில் இறந்து விடுவேன் என்றும் கணித்ததாகக் குறிப்பிடுகிறார்

IX. **ஆளுமைகளுடனான அனுபவங்கள்:** இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த பெரும் தலைவர்கள் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. அவை நேரடியாகப் பார்த்துப் பதிவு செய்தவையாக உள்ளன.

X. **அரசு அலுவலகங்கள்:** 1940 களில் அரசு அலுவலகங்களில் லஞ்சம் வாங்கும் வழக்கமிருந்தது. அதுபோலவே இலஞ்சம் ஏற்காமல் நேர்மையோடு வாழ்ந்தவர்களும் இருந்துள்ளனர். நேர்மையான அதிகாரி ஒருவர் பற்றிய பேராசிரியரின் பதிவு இது. "பதினைந்து நாட்கள் இராமச்சந்திர ஐயர் வீட்டில் தங்கியிருக்கும் போது அவரது குடும்பநிலை, அன்றாட வ்ாழ்க்கையைச் சிரமத்துடன் நடத்தியது போன்ற விவரங்களை அறிந்தேன். அவருக்கு ஆறு புது வேட்டிகளை அனுப்பி வைத்தேன். இராமச்சந்திர ஐயர் எதையும் ஏற்றுக்கொள்ளார் என்பதை நான் நன்கு பழகி இருந்ததால் அறிவேன். கைசுத்தமான ஒருவரை அக்காலத்தில் கண்டது வியப்பிலும் வியப்பாக இருந்தது. அன்றைய நிலையில் மேல் மட்டத்தில் இருந்து கீழ்மட்டம் வரை வந்தாலும் நடைபெற்று வரும் கையூட்டுக் கூத்துக்களை நினைக்கும் போது ராமச்சந்திர ஐயரின் நல் தொண்டு இமயமலை அளவு உயர்ந்து காணப்பெறுகின்றது.

XI. **நீதிமன்றங்கள்:** நீதிமன்ற வழக்குகள் மிகுந்த செலவுக்குரியனவாகக இருந்தன. அன்றைய காலத்தில் நீதிமன்றங்களில் சாட்சி சொல்லுவதையே தொழிலாகக் கொண்ட

கள்ளச் சாட்சியாளர்கள் இருந்தனர். *1940* களிலேயே மானநஷ்ட வழக்குப் போடும் வழக்கம் இருந்துள்ளது. அக்காலத்திலேயே கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் நீதிமன்றங்கள் மூலம் ஜீவனாம்சம் பெற்றிருக்கிறார்கள்.

XII. **தமிழ்க்கல்வியாளர்கள்:** பல இடங்களிலும் தமிழில் புலமை பெற்ற அறிஞர்களைப் பேராசிரியர் அடையாளப்படுத்துகிறார். மறைமலையடிகள் கல்விநிறுவனங்களில் சொற்பொழிவாற்றப் பெற்ற ஊதியம் மிகவும் அதிகமாக இருந்தது.

*1940-50* களில் பாரதியார் போன்றோரது அக்காலக் கவிதைகளைப் புலவர்கள் அதிகமாக மதிப்பதில்லை. பெரும்பான்மையான புலவர்கள் பத்தாம் பசலிகளாக இருந்தனர். பண்டை இலக்கியங்கள், பிற்காலக் காவியங்கள், சிற்றிலக்கியங்கள் இவைதான் கவிதைகள் என்று எண்ணியிருந்தனர். கிணத்துத் தவளைகளாக இருந்த அவர்கள் குளத்தையும் பார்க்க முடியவில்லை.

XIII. **இந்திய விடுதலை:** இந்தியநாடு விடுதலை பெற்றதும் காங்கிரஸ் கட்சித் தொண்டர்கள் எந்த மாதிரியான மனோ நிலையைக் கொண்டிருந்தனர் என்பது பதிவு செய்யப்பட்டுள்ளது. புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாடாதலால் காங்கிரஸ்காரர்கள் சீதையைக் கண்டறிந்த அனுமன் வந்த பிறகு வானரங்கள் மதுவனத்தில் புகுந்து அட்டகாசம் செய்பவர்கள் போலக் காணப்பட்டனர். காங்கிரஸ் தொண்டர்களிடம் கூட ஆணவம் தலை தூக்கிநின்றது. பணிவோ பண்பாடோ அவர்களிடம் காணப்பட வில்லை. தங்கள் தான் சுதந்திரம் வாங்கி தந்த மாமேதைகள் என்று கருதிக் கொண்டிருந்தனர்.

நாடு அடிமையாக இருந்த போது அரசு அதிகாரிகள் நடந்து கொள்ளும் போக்கிற்கும் இப்போது அரசு அதிகாரிகள் நடந்து கொள்ளும் போக்கிற்கும் மலையளவு வேறுபாடுள்ளது. அக்காலத்தில் அரசு அதிகாரிகள் மிக நேர்மையுடன் நடந்து கொண்டனர். இப்போது ஒவ்வொரு நிலையிலும் அரசு குறுக்கிடுவதால் தலைமை ஆசிரியர்களைக் கூடக் கல்வியதிகாரிகள் கண்டு அஞ்சுகின்றனர்.

வெள்ளையர் ஆட்சியில் காரியம் நிறைவேறச் செல்வாக்கும் கையூட்டும் தேவைப்பட்டன. இவை அதிகாரிகளின் மட்டத்திலேயே நடைபெற்று வந்தன. நாடு விடுதலை பெற்ற பிறகு அதிகாரிகள்

மட்டத்திலிருந்த செல்வாக்கு, படிப்படியாக அரசியல்வாதிகளின் மட்டத்திற்கு மாறியது. முதலில் செல்வாக்கால் செயல்கள் நடைபெற்றன. நாளடைவில் கையூட்டும் தலையெடுக்கத் தொடங்கியது.

விடுதலைக்குப் பிறகு இந்தியாவில் காங்கிரஸின் செல்வாக்குத் தான் ஓங்கி நின்றது. ஒவ்வொரு மாநிலத்திலும் தனிப்பட்ட ஒருவர் அல்லது ஒரு சிலர் மிக்க செல்வாக்குடன் திகழ்ந்தனர். இவர்களே அரசு மட்டத்திலும் செல்வாக்கைச் செலுத்திச் செயல்களை நிறைவேற்றி வைத்தனர். தொடக்க காலத்தில் இலாபமற்ற உதவியாக தோன்றியது. படிப்படியாகப் பண உதவியாக மாறியது. அரசியல் உலகில் பணம் மூட்டைகள் பெருகலாயின. முதலில் இச்செயல் பொதுமக்களுக்கு விளங்காப் புதிராகவே இருந்து வந்தது.

## XIV. தொழில்கள்

**1) விவசாயம் மற்றும் கால்நடை வளர்ப்பு:** அந்தக் காலத்தில் விவசாயம், கால்நடை வளர்த்தல், போன்றவை எவ்வாறு நிகழ்ந்தன என்பது ஆங்காங்கே குறிக்கப்படுகிறது. விவசாயம், கால்நடை வளர்த்தல் போன்றன எவ்வாறு வாழ்வாதரமாக இருந்தன என்பதை விவரிப்பதன் மூலம் ஓரளவு நிலபுலன் கொண்ட குடும்பங்கள் எவ்வாறு விவசாயம் மற்றும் கால்நடை சார்ந்து வாழ்ந்திருந்தன என்பது புலனாகிறது.

“தானியங்கள், வெல்லம், பயறு வகையறாக்கள் தேவைக்கு மேல் உள்ளவை விற்கப்பெற்று பணமாக்கப்படும். குறைவான விலை காரணமாக ஓராயிரம் ரூபாய் கூடக் கிடைக்காது. மிளகாய் தோட்டத்திலும், கறிகாய்கள் பிற இடங்களிலும் ஏராளமாகக் கிடைத்தன. பறங்கி, பூசணி சர்க்கரைப் பரங்கி, பழங்கள் மாடி முழுவதும் நிறைந்து கிடக்கும். அவரை, புடலை, பீர்க்கன், வெண்டை, கொத்தவரை, பாகற்காய் இவை அவ்வப்பொழுது விற்கப்பெற்று அன்றாடச் செலவுக்குப் பணமாகப் பயன்படும். பரங்கி முதலியவை சேர்ந்தாற் போல் விற்கப்படும்.”

வீட்டில் கறவை மாடுகள் இல்லாத நாட்களே இரா. பேராசிரியர் நினைவு கூரும் வகையில் இரண்டு பசுக்களும் மூன்று எருமைகளும் கறந்தன. ஆயர்பாடி போல அவரது தாய்மாமா வீடு திகழ்ந்தது. பால், தயிர், மோர், நெய் இவற்றிற்கு எப்பொழுதுமே குறைவில்லை. பெரும்பாலும் மோர்

தேவையானவர்கள் இலவசமாகவே பெற்றுச் செல்வார்கள். மூன்று வயது இருக்கும் போது ஒரு டம்ளரில் நாட்டுச் சர்க்கரை அளவாகப் போட்டு அவரது பாட்டி அவரைப் பசு மாட்டிடம் அனுப்புவார்கள். அவரது தாய் மாமன்தான் பால் கறப்பார். முதலில் அவரது டம்ளர் நிறையப் பாலைக் கலந்து விடுவார்கள். அப்படியே சிறிது வெப்பத்துடன் பாலைப் பருகுவார்.

இது போன்ற விவரணங்கள் அக்காலத்தில் இருந்த ஓரளவு வசதியானோர் வீட்டு வாழ்க்கையை நம் கண்முன் நிறுத்துகின்றன

**2) வெல்லம் தயாரித்தல்**: சர்க்கரை தயாரிக்கும் தொழில் தனிநபர்களால் மேற்கொள்ளப்பட்டு வந்தமை பேசப்படுகிறது. பேராசிரியரின் தாய்மாமன் சர்க்கரை தயாரிக்கும் தொழிலையும் செய்து வந்துள்ளார். அவரைப் பற்றிய சித்திரிப்பின் மூலம் பின்வரும் விபரங்களைப் பெறமுடிகிறது. கரும்புப்பாலைக் காய்ச்சிப் பாகாக்கி நல்ல பதத்தில் இறக்கி, அச்சுக் குழியில் இறக்கி சிறு சிறு அச்சுக்களாலான வெல்லம் தயாரிக்கப்படும். இப்பணியில் தொட்டியில் உள்ள பாகு அச்சாக்கப்பெறும் போது காலதாமதம் ஏற்படும். அப்போது தொட்டியில் உள்ள பாகின் இறுதிப் பகுதியில் ஆடை கட்டும்.

வீட்டுச் செலவுக்கும் பிறவற்றிற்கும் சுமார் மூன்று கொப்பரை வெல்லம் தேவைப்படும். இதற்குரிய கரும்புப்பால் ரஸ்தாளி என்ற வகைக் கரும்பினின்று நன்கு வடிகட்டப் பெற்று அதில் ஏலம், கிராம்பு, ஜாதிக்காய் ஆகியவற்றின் பொடியைக் கலந்து வெல்லம் தயாரிக்கப்படும்.

**XV. நகரங்கள், கோவில்கள், சிற்றூர்கள் பற்றிய குறிப்புகள்:** பேராசிரியர் தாம் பார்த்த நகரங்களைப் பற்றித் தரும் விபரங்களை இன்றையகாலத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நகரங்கள், சிற்றூர்கள் மற்றும் கோவில்கள் எந்தளவுக்கு மாறுதலடைந்துள்ளன என்பதைத் தெரிந்து கொள்ளமுடியும். பேராசிரியர் வடநாட்டுப் பயணம் செய்து அது பற்றிய குறிப்புகள் எழுதியதன் மூலம் தமிழர்கள் பழங்காலத்திலேயே வட இந்தியாவில் செல்வாக்குடன் செயல்பட்டிருந்தனர் என்பதைப் புரிந்து கொள்ளமுடிகிறது.

*"கல்கத்தாவில் நகரத்தார் இல்லம் (34, எஸ்ரா தெரு, கல்கத்தா-1) என்பது பெரிய கட்டடம். இதனைப் பல்வேறு வணிகர்கட்கு வாடகைக்கு விட்டுள்ளனர். மாதம் ரூ.15000/-க்கு மேல் வாடகை வருகின்றது. இதனைக் கொண்டுதான் இந்தச்*

சத்திரங்கள் ஓரளவு இயங்கிவருகின்றன. இச்சத்திரங்கள் எல்லாவற்றையும்விடக் காசியிலுள்ள 'நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம்தான் நன்முறையில் இயங்கி வருகின்றது. இதில் தங்கும் நகரத்தார்கட்கு ஓரளவு கட்டணம் பெற்றுக் கொண்டு உணவு வசதிகளும் அளிக்கின்றனர். நகரத்தார்களேயன்றி தமிழ் சார்ந்த வேறு சமூகத்தினரும் அறிமுகத்துடன் சென்றால் இங்குத் தங்கலாம். நானும் என் மனைவியும் ஒரு குடும்பம் எனக் கணக்கிட்டு முதல் தடவையாக ரூ.3-50 தரவேண்டியிருந்தது. அடுத்த முறையிலிருந்து இதில் பாதி (ரூ. 1-75) தந்தால் போதும். எத்தனை முறை சென்றாலும் இத்தொகையை முதலில் தரவேண்டியது. அடுத்து நாளொன்றுக்கு 0-50 வாடகையாகத் தர வேண்டும். இப்போது இக்கட்டணங்களை அதிகரித்திருக்கலாம். உணவுக்காக அப்போது நாளொன்றுக்கு ஓர் ஆளுக்கு ரூ. 4-50 தரவேண்டும். காலையில், சிற்றுண்டியுடன் காஃபி, நண்பகல் காய்கறிகளுடன் உணவு, இரவு சிற்றுண்டியுடன் காஃபி (அல்லது பால்) தருவார்கள். வேறு ஓரிரு இடங்களில் தென்னிந்திய உணவு கிடைக்குமாயினும் அவை தூய்மையாக இராது; சுவையும் சரியாக இராது. ஆதலால் மாலையில் மட்டிலும் காஃபி அங்கு அருந்தப் போவதுண்டு.''

நினைவுக் குமிழிகள் பல சுவாரஸ்யமான தகவல்களையும் தருகின்றன. அவற்றுள் ஒன்று, ''வீரபாண்டிய கட்டபொம்மன் சிவந்த மேனி கொண்டவர். அதனால் அவரை செவத்தையா என்ற பெயரில் அழைத்துள்ளனர். அவரது தம்பி ஊமைத்துரை கறுத்த மேனி கொண்டவர். அதனால் அவரைக் கறுத்தையா என்று அழைத்து வந்துள்ளனர்.''

இவ்வாறு அவரது வாழ்க்கைநூல் அந்தக் காலச் சமூக அமைப்பை இணைத்தே விளக்கிச் செல்லும் போக்குடையதாக உள்ளது. அவரது சுயசரிதை முழுக்க இந்த அமைப்பைக் காணமுடிகிறது. நிச்சயமாகப் பேராசிரியரது நினைவுக் குமிழிகள் சுயசரிதைநூற்களுள் தடம்பதித்து விட்டது என்றே சொல்ல முடிகிறது.

# 7. பேராசிரியரின் சிந்தனைகள்

அறிஞர்கள் மற்றும் சிந்தனையாளர்களுக்கு ஓர் இயல்பு உண்டு. ஒவ்வொரு விசயத்தையும் உற்றுநோக்கி அதிலுள்ள குறைபாடுகளைக் கண்டு அந்த விசயம் இன்னும் மேம்பாடடைய அறிவுரைகளையோ சிந்தனைகளையோ கருத்துக்களையோ எடுத்துரைப்பர். அவ்வகையில் கல்வியாளர் என்ற முறையில் தமது நடைமுறை வாழ்வியலில் பெற்ற ஆழ்ந்த அனுபவம் மற்றும் ஆராய்ச்சி மூலம் பல சிந்தனைகளை முன் வைத்துள்ளார் பேராசிரியர். அவரது சிந்தனைகள் சிறந்த வழிகாட்டி என்பதில் ஐயமில்லை. அவரது சிந்தனைகளை நினைவுக் குமிழிகள் நூல்களில் காணமுடியும்.

**ஆசிரியப் பயற்சிக் கல்லூரியின் இயல்புகள்:** அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் நூலகமும் அறைகளும் கட்டப்பட்ட போது, அதற்கும் கல்விக்குமான தொடர்பு குறித்து கீழ்க்கண்ட கருத்துரைக்கிறார்.

கலைக் கல்லூரிக்கும் பயிற்சிக் கல்லூரிக்கும் நடை முறையில் எத்தனையோ வேறுபாடுகள் உண்டு. கலைக் கல்லூரியில் மாணாக்கர்கட்குக் கற்பிப்பது, தேர்வுகட்குத் தயார் செய்வது இவற்றுடன் பொறுப்பு முடிந்துவிடுகின்றது. நல்லாசிரியர்களிடம் பயிலும் வாய்ப்புகள் இருப்பின் அவர்கள் மூலம் மாணாக்கர்களில் சிலராவது அகத்தெழுச்சி (Inspiration) பெறுவர். பயிற்சிக் கல்லூரியின் பொறுப்பு வேறு. பட்டம் பெற்றவர்கள் ஒவ்வொருவரையும் ஆசிரியர்களாக்குவது, குழுவாகக் கொள்கைகளைக் கற்பித்த பிறகு வகுப்பறையில் கற்பிக்கும்போது மேற்கொள்ளவேண்டிய முறைகளைக் கொள்கை நுணுக்கங்களுடன் பொருத்திக் காட்டி விளக்குவதுதான் முக்கியமான படியாகும். சந்தர்ப்பத்தையொட்டி, கற்பிக்க வேண்டிய பாடத்தையொட்டி, மாதிரிப் பாடங்களை அடிப்படையாகக் கொண்டு பாடக்குறிப்புத் தயாரிக்கும் முறையைத் தனித் தனியாக ஆசிரிய மாணாக்கரைச் சந்தித்து விளக்க வேண்டும். இதற்கு வசதியாகப் பயிற்சிக் கல்லூரிகளில், பல்கலைக்கழக ஆசிரியர்கட்குத் தந்திருப்பதுபோல் தனித் தனி அறைகள் தரவேண்டும் என்ற இன்றியமையாமையைக் கருதிப் புதிதாகத் தொடங்கப்பெற்ற கல்லூரியில் தனித் தனி அறைகள் ஒதுக்கப் பெற்றிருந்தன. தவிர, நூலகத்திலுள்ள எல்லா நூல்களைப்பற்றியும் பயிற்சிக் கல்லாரி ஆசிரியர்கள் சிறிதளவாவது அறிந்து கொண்டிருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் பயிற்சி

பெறும் ஆசிரியர்களை நூலகத்தைப் பயன்படுத்தும் முறையில் ஆற்றுப்படுத்த இயலும். சில சமயம் நூல்களையே நூலகத்திலிருந்து பயிற்சிபெறும் ஆசிரியரைக் கொண்டு குறிப்பிட்ட நூலை எடுத்துவரச் செய்து விளக்க வேண்டிய சந்தர்ப்பங்களும் எழும். (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-பக். *31*)

**தமிழ்மொழி:** தமிழ் வளர்ச்சி எவ்வாறு இருக்கவேண்டும் என்ற பேராசிரியரது தெளிவான சிந்தனை பின்வருமாறு வெளிப் படுகிறது: "இந்தக் காலகட்டத்தில் நான் கண்ட சில உண்மைகள் - தமிழ் ஒரு குழந்தை மொழியன்று; சங்ககாலந் தொட்டு ஏன்? அதற்கு முன்பே - எவ்வளவோ காலம் கண்டு, எத்தனையோ நிகழ்ச்சிகள் கண்டு, கருத்து வேற்றுமைகளும் கொள்கை முரண்பாடுகளும் கண்டு, தொல்காப்பியர், திருவள்ளுவர், கம்பர் போன்ற மேதாவிகளையும் குழந்தைகளாக அணைத்துக்கொண்டு தாய்மைப்பண்பு பெற்று வளர்ந்து வந்திருக்கும் தாய்மொழியல் லவோ நந்தமிழ் மொழி? காலவகையால் பழையன கழியப் புதியன கண்டு வந்துள்ளது. இன்னும் புரட்சிகரமான புதுமைகளையும் காணப் போகின்றது. இம்மொழியின் இலக்கியவரலாறே இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தொடங்கியிருக்க வேண்டும் என்பது ஆய்வு முடிவு. இந்த இருபது நூற்றாண்டு வளர்ச்சி நெறியிலும் மைல்கற்கள் உண்டு; இந்த வளர்ச்சி நெறியை இன்றும் நாம் அறியக் காட்டும் மைல்கற்கள் இவை.

இன்னும் என் மனத்தில் எழுந்த சில உணர்வுகளையும் குறிப்பிடுவேன். தமிழ்வளரும் புதிய புதிய துறைகளில் எல்லாம் தமிழின் உயிர்நாடி பேச வேண்டும். சங்க இலக்கியங்களில் கொலுவீற்றிருக்கும் அரசிளங் குமரியின் அதிகார முத்திரை வேண்டும்; தமிழ் தமிழாக வளர வேண்டும். நம் இலக்கிய வளர்ச்சி நெறியை சிறிதும் அறிந்து கொள்ளாமல் பிற இலக்கியங்களின் உதவியால் மட்டிலும் தமிழை வளர்த்து விட முடியாது. புதிய கருத்துகளை வெளியிடலாம்; வெளியிட முடியும்; வெளியிடத்தான் வேண்டும். புரட்சிகரமான கருத்துகளையும் காரசாரமாக வெளியிடலாம், அவற்றை வெளியிடுவதற்குப் புதிய புதிய சொற்களையும் சொற்றொடர்களையும் கொண்டு வரலாம். வேறு மொழிகளிலிருந்து கருத்துச் செல்வத்துடன் வேறு நாடுகளிலிருந்து கலைச் செல்வங்களுடன், இன்றியமையாத சொற் செல்வத்தையும் கொண்டு சேர்த்து, தமிழ்மரபுக்கேற்பப் புதிய சொற்களையும் பிறப்பித்து நம் வீட்டுமொழியின் கருவூலத்தைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால் தமிழில் பண்போடு கூடிய உயிராற்றலை

உணர்ந்து எழுத வேண்டும்; பாடவேண்டும். அப்போதுதான் பழமைக்கும் பழமையான தமிழ் புதுமைக்கும் புதுமையாய் வளர்ந்தோங்க முடியும்.''

இத்தகைய இலக்கியப் பரப்பில் சங்க இலக்கியங்கள் தாம் ஆதிமைல் கல். இது முக்கியமான கல்லாகவும் உள்ளது. தமிழ்ப் பண்பையும் தமிழர் பண்பாட்டையும் உள்ளவாறு உணர்ந்து கொள்வதற்குச் சங்க நூல்களை அறிந்து கொள்வது மிகவும் இன்றியமையாதது. தமிழ்மொழி சிறப்புடன் மிளிர்வதற்குக் கம்பனும் வள்ளுவனும் இளங்கோவும் படைத்துள்ள இலக்கியங்களின் மட்டும் போதா.

புத்தம் புதிய கலைகள் -பஞ்ச
பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்த வளருது மேற்கே -அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை

என்ற குறை தமிழுக்கிருத்தல் கூடாது. இவையனைத்தும் புறநானூற்றுக் காலத்திலேயே தமிழில் இருந்தன என்ற பழங்கதையையே அடிக்கடி சொல்லி மகிழ்வதால் யாதொரு பயனுமில்லை. கல்லூரிகளிலும் தாய்மொழி வாயிலாகக் கல்வி பயிற்றப் பெற்றால்தான் இவையனைத்தும் தமிழில் தோன்றுவதற்கு வாய்ப்புகள் அமையும். அப்பொழுதுதான் பிறநாட்டுச் சாத்திரங்கள் அனைத்தையும் தமிழில் மொழி பெயர்க்கவும் முடியும்.

தமிழில் எல்லாக் கலைகளையும் எழுதவும் விளக்கவும் முடியும் என்பதைச் சிலர் இன்னும் ஒப்புக் கொள்வதில்லை. இவர்கள் தமிழ் மொழியில் எல்லாவற்றிற்கும் தக்க கலைச்சொற்கள் இல்லாத காரணத்தால் இவ்வாறு எண்ணுகின்றனர். எந்த மொழியிலும் அதன் வாயிலாகப் பொருள்களை விளக்க முயன்றாலன்றிப் புதிய கலைகளுக்கு வேண்டிய சொற்களும் தொடர்மொழிகளும் செவ்வனே அமைவதில்லை. பொருட்களை எடுத்துக் கொண்டு விளக்க முயன்றால் இவை தானாகவே அமைந்துவிடும். இவ்வாறே மேற்புல மொழிகளனைத்திலும் கலைச்சொற்கள் உண்டாகி அம்மொழிகள் வளர்ச்சி அடைந்து வருகின்றன. கலைச்சொற்களை உண்டாக்கிக்கொண்டு தாய் மொழியில் கற்பித்தல் தொடங்க வேண்டும் என்று நினைப்பது, நீந்தக் கற்றுக்கொண்ட பிறகு நீரில் இறங்க வேண்டும் என்று எண்ணுவது போலாகும். செயலில் இறங்கினால்தான் அனைத்திலும் சீர்படும். இலக்கிய இலக்கண வளர்ச்சி பெற்றுள்ள தமிழ்

மொழியின் நீர்மையை அறிந்து பிற கலைகளைத் தமிழ் மொழியில் வடித்துத் தரும் பணியில் ஈடுபடுபவர்கள்தாம் தமிழ்மொழி அனைத்திற்கும் வளைந்து கொடுக்கும் என்ற உண்மையை அறிவர். அப்பொழுதுதான் சொல்லும் திறமை தமிழுக்கு இல்லை என்ற குறையும் நீங்கும். தமிழ்மொழியும் வளர்ந்து மேலும் வளம் பெறும். *(பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-1 பக். 198)*

நாடு விடுதலை பெறுவதற்கு முன்னர் எல்லாப் பாடங்களும் ஆங்கிலத்திலேயே கற்பிக்கப்பட்டதால்தான் அக்காலத்தில் உயர்நிலைப் பள்ளிகளில் பயின்றவர்களின் ஆங்கில அறிவு கூட நன்றாக இருந்தது. இதனால் ஆங்கிலேய ஆட்சிக்கு வேண்டிய எழுத்தர்கள் சுலபமாகக் கிடைத்தார்கள். இவர்கள் அடிமை மனப்பான்மையுடன் பணி செய்து ஆங்கிலேயரின் அன்புக்கும் பாராட்டுக்கும் பாத்திரமானார்கள். அக்காலத்தில் தமிழுக்குப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் முக்கியத்துவம் தரப்படாததால் தமிழறிவு நன்கொடையாக இருந்தது. நாடு விடுதலை பெற்ற பிறகு பல நிலைகளில் தமிழிலும் பாடங்கள் கற்பிக்க இவர்களிடம் தமிழறிவு நன்கு ஏற்படவில்லை. இதற்குக் காரணம் என்ன? இவர்களுள் பெரும்பாலானோருக்கு நல்ல தமிழறிவு இல்லை. ஒரு சிலருக்குத் தமிழறிவு நன்றாக வந்திருந்தாலும் அவர்கள் மொழியுணர்ச்சியுடன் கற்பிப்பது இல்லை.

**ஆசிரியர்கள் பற்றி:** நாகரிகம் என்ற பெயரில் ஒவ்வாத செயல்களைச் செய்வர். வகுப்பில் தலைமுடி ஆற்றுதல், மேசையின்மீது கால்களைப் போடுதல், அடிக்கடி மூக்குக்கண்ணாடியைக் கழற்றுதல், துடைத்தல், போடுதல், வகுப்பில் மூக்குப்பொடி போடுதல், சொந்த வரலாற்றை அடிக்கடி பேசுதல், கீச்சுக்குரல், மாறாத குரல், கூச்சல் போடுதல், களைத்தல் தலையைச் சொறிதல் போன்ற பழக்கவழக்கங்கள் அறவே கூடாது.

மாணவர்களை நல்ல மனிதர்களாக ஆக்க வேண்டிய கட்டாயம் ஆசிரியர்களுக்கு உள்ளது.

ஆசிரியர்களின் மனம் நிறைவாக இருக்கவேண்டும். அவர்களது வாழ்க்கைத்தரம் உயரவேண்டும்; அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப் படவேண்டும்; போதுமான ஊதியத்தை வழங்க வேண்டும்; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் சமுதாயத்தில் ஆசிரியர்கள் நடமாடும் பிரம்மாக்கள். நவீனப் பள்ளிகளின் முன்னேற்றம் பெரும்பாலும் ஆசியர்களின்

ஒத்துழைக்கும் விருப்பத்தையும் திறனையும் பொறுத்தது. பல ஆசிரியர்கள் தத்தம் பாடமே முக்கியமென்று கருதி மாணவர்களைக் கசக்கி எடுப்பதால் போதுமான ஓய்வு உறக்கமின்மையால் உடல் பாதிக்கப்பட்டு விடுகின்றது. இதனைக் கருத்தில் கொண்டு ஆசிரியர்கள் செயல்படவேண்டும்.

அறிவுக்கண் வழங்குபவன் ஆசான். எழுத்தறிவிக்கும் ஆசிரியனான இறைவன் மாணவர்களின் ஆளுமை வளர்ச்சிக்கு முதற்காரணம். கற்பித்தல் மிகவும் செல்வாக்குள்ள கூறு. உணர்வோட்டம் உள்ள கூறு. ஒரு நாட்டின் பெருமை அந்நாட்டின் பள்ளிக் கல்லூரி ஆசிரியரின் தன்மையைப் பொறுத்தது என்கிறார் பிரௌன். எனவே, ஒரு மாணவனின் உடல், உள்ளம், நடத்தை இவற்றைச் சீர்திருத்தி, சிறந்ததோர் ஆளுமைப் பண்புடன் உருவாக்குவது என்பது ஆசிரியரின் கையில்தான் உள்ளது.

ஒரு சமுதாயத்தின், நாட்டின் வளர்ச்சிக்குக் கல்வியே முதன்மையானது. ஆசிரியர்கள் சாதி, சமய, அரசியல் இவற்றைக் கடந்தவர்கள். மாதாவும் பிதாவும் கொண்டு வந்து ஒப்படைக்கையில் அந்த குழந்தையிடம் அன்பை மட்டும் விதைத்தல் வேண்டும். பள்ளிகளில் குழந்தைகளிடம் தன்னம்பிக்கை, உற்சாகம், ஒத்துழைப்பு, வெற்றி மனப்பான்மை, விட்டுக்கொடுத்தல் போன்ற நல்ல சமூகக்குணங்களை, பண்புகளை வளர்க்கவேண்டும்.

ஆசிரியர்கள்தாம் நல்ல நூல்கள் எழுத வேண்டும். எழுத்துப் பழக்கத்தைத் தொடக்கத்திலிருந்தே வளர்த்துக் கொள்ளவேண்டும். பல நூல்களைப் படித்தவண்ணமிருந்து தம் அறிவினைப் பெருக்கிக் கொள்ளவேண்டும். அதிகம் சிந்திக்க வேண்டும். இந்தச் சிந்தனையால்தான் எழுத வேண்டிய பொருள் மனத்தில் உதயமாகும். நல்ல முறையில் மாணாக்கர்கட்குக் கற்பித்து வந்தால் தாம் எழுதும் எழுத்திலும் தெளிவு பிறக்கும். உரைநடையும் ஆற்றொழுக்காக அமையும், டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர், திரு.வி.க. சொல்லின் செல்வர் ரா. பி. சேதுபிள்ளை, பன்மொழிப் புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார், டாக்டர் மு. வரதராசன் இவர்கள் நடையைச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். பாடல்களைப் படித்துச் சுவைக்கும் பழக்கத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும். சுவை பற்றிய வடமொழிவாணர்களின் கருத்துகளையும், திறனாய்வு பற்றிய பல நல்ல ஆங்கில நூல்களையும் கற்க வேண்டும். தம்முடைய அறிவுச் செல்வம் மிகுவதற்கேற்ப, தம்முடைய பயிற்றும் முறை துணை செய்யச்

செய்ய, தம்முடைய கற்பிக்கும் திறனும் நன்முறையில் செப்பம் அடையும். (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-4 பக். 94)

**வர்க்கப் போராட்டம் பற்றி:** பக்-192, 193 2 இந்த இடத்தில் நாம் ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். முதலாளி வர்க்கம், பாட்டாளி வர்க்கம் என்று இக்காலத்தில் உலகமெங்கும் பேசப் பெறுகின்றது. இப்படிப்பட்ட பிரிவுகள் நிரந்தரமானவையல்ல. ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் இந்தப் பிரிவு அமைந்து கிடக்கின்றது. ஊதியத்திற்காகப் போராடுவோர் தம்மைத் தொழிலாளர்கள் எனக் கருதுகின்றனர். இவர்களே சலவைக் கூலியும் முடி திருத்தும் கூலியும் உயரும்போது சங்கடப் படுகின்றனர். மனம் ஒப்பித்தர மறுக்கின்றனர். இந்தத் தொழிலாளர்களில் சிலர் கடும் உழைப்பில் பொருளாதார நிலையில் உயர்த்து தனியாகத் தொழிலைத் தொடங்கும் போது, பலருக்கு வேலை வாய்ப்புத் தரும் நிலைக்கு வரும் போது முதலாளி நிலையை அடைகின்றனர்; இப்போது தம் கீழ் பணியாற்றும் தொழிலாளருக்குச் சரியான ஊதியம் வழங்க மனம் வருவதில்லை. இப்படி மக்கட் கூட்டம் பண ஆசையாலும் (அது வாழ்க்கைக்கு போதாத நிலையிலும்) போராட்டம் நடத்துகின்றனர். பணம் அதிகமாகக் கிடைக்கும்போது ஊதாரித்தனமாகச் செலவழிக்கின்றனர். தாம் வாழ்க்கையில் எல்லா வசதிகளையும் அநுபவிப்பதாக ஒரு மாயத்தில் மயங்குகின்றனர். எல்லாவற்றையும் அடிப்படைத் தேவைகளாகக் கருதி மயங்குகின்றனர். எல்லோரும் சிந்தனையின்றியே இயங்குகின்றனர், அல்லது தவறாகவே சிந்திக்கின்றனர் என்று நினைக்கத் தோன்றுகின்றது.

**நூல் எழுதுதல்:** ஒரு பெரிய நூல் எழுதுதல் பெரிய வீடு கட்டுவதைப் போன்றது. கட்டடம் எப்படி அமைதல் வேண்டும் என்பதை முன்னமேயே நன்கு சிந்தித்து ஒரு கரட்டு வரைபடத்தை (Rough plan) வரைவது போல நூலையும் அமைத்துக் கொள்ளவேண்டும்.

**பிறரது முன்னேற்றத்தில் தேவையில்லாமல் தடங்கல் ஏற்படுத்துவோர் குறித்து:** ஆறறிவு படைத்த மனிதன் படிப்படியாக வளர்ந்து நாகரீக ஏணியில் உயர்ந்த நிலையை அடைந்த பிறகும் இந்த விதி வேறொரு வகையில் செயற்படுகின்றது; விரும்பத்தகாத வகையிலும் செயற்படுகின்றது. இந்நிலையில் அறிஞர்கள் தோன்றி நீதி நூல்களை வகுத்து நல்லனவற்றைக் கடைப்பிடிக்கவும் அல்லனவற்றைப் புறக்கணிக்கவும் வழி

செய்திருக்கின்றனர், கடவுள், சமயம், நம்பிக்கைகள், பிறப்பு-இறப்புப் பற்றிய கொள்கைகள், இவ்வுலகம், உம்பர் உலகம், இறை உலகம்-என்பவை பற்றியெல்லாம் நிறைய நூல்களை எழுதி மன்பதை உய்வதற்கு வழி செய்துள்ளனர். ஆயின், இவையெல்லாம் பெரும்பாலோருக்குப் பொருந்துவதில்லை. ஒருவன் பாய்க்குள் புகுந்தால், மற்றொருவன் கோலத்திற்குள் புகுகின்றான். இத்தகையவர்களை நன்னெறியில் உய்க்க வேண்டுமாயின் அந்த இறைவன் தான் காப்பாற்ற வேண்டும். மனிதன் கண்ட தத்துவங்கள் எல்லாம் 'யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்' என்று சொல்லும் கொள்கைதான் தலை நிமிர்ந்து செயற்படுகின்றது. இந்தக் கொள்கையும் விநோதமாகச் செயல்படுகின்றது. வல்லரசுகள் மெல்லரசுகள் முதலியவையெல்லாம் கூட இந்தக் கொள்கையின் பரிணாம விநோதங்கள்தாம். இந்த உயர்ந்த சிந்தனையை விட்டுக் குறுகிய வாழ்க்கை வட்டத்திற்கு வருவோம். சாதாரண பணிவகையில் கூட விதிகள் வகுக்கப்பெற்று அவை நடைமுறைப் படுத்தப்படுகின்றன. இந்நிலையிலும் போட்டி, பொறாமை, வயிற்றிலடித்தல், சீட்டுக் கிழித்தல், தணடனை முறைகள் எல்லாம் தாமாக எழுகின்றன. உள்ளிருந்து பின்னணியாக இயங்கும் மனிதன் இவை தாமாக எழுவன போல் காட்டுகின்றான்; இவற்றை வைத்துக் கொண்டு இந்திரஜாலங்கள் எல்லாம் புரிந்து வருகின்றான். (பேரா. ந. சுப்புரெட்டியார் *நி.கு-4 பக். 326*)

**ஆண் பெண் நிலைமை குறித்து:** இக்காலத்தில் ஆண்கள் பெண்கள் சேர்ந்து படிக்கும் வாய்ப்புகள் உள்ளன. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், ஆய்வுக் கூடங்கள் இங்கெல்லாம் இவ்வாய்ப்புகளைக் காணலாம். அலுவலகங்களில் இவர்கள் சேர்ந்து பணியாற்றுகின்றனர். பேருந்துகள், இருப்பூர்திகள் இங்கெல்லாம் பயணம் செய்கின்றனர். சுவரொட்டிகள், ஆபாச விளம்பரங்கள், ஆபாசக் காதற்கதைகள் இவர்கள் கண்களில் படுகின்றன. சுருக்கமாகக் கூறினால் எங்கும் காதலுணர்வைத் தூண்டும் சூழ்நிலைகள் நிலவுகின்றன. வரதட்சணைக் கொடுமையினால் முப்பது வயதுவரை கூட சில பெண்கள் திருமணமின்றி முதுகன்னியராக வாழ்கின்றனர். அதுவும் அலுவலக வேலை பார்க்கும் பெண்களாக இருந்தும். முதுமை நிலையில் வருமானமின்றி தவிக்கும் பெற்றோர்கள் தம் பெண்கள் திருமண விசயத்தில் அக்கறை காட்டுவதில்லை. இந்தச் சூழல்களில்தான் காதல் மணம், கலப்புமணம், உடன்போக்கு முதலியவை

நடைபெறுகின்றன. 'மணமகன், மணமகள் தேவை' என்ற விளம்பரங்களைப் பார்த்தே பல பெண்கள் தம் திருமணத்தை முடித்துக் கொள்கின்றனர். முதியோர்கள் தம் பொறுப்பைச் சிந்தியாது இத்தகைய திருமணம் புரிந்துகொண்டவர்கள் மீது சீறுகின்றனர், சினக்கின்றனர். (பேரா. ந. சுப்புரெட்டியார் நி.கு-3 பக். 360)

**அறிவியல் குறித்து:** கடந்த இரண்டு உலகப் பெரும்போர்களால் மக்கள் சமூகமும் வாழ்க்கையைப் பற்றிய நம்பிக்கையை இழந்து வருகின்றது. ஜப்பானில் அணுகுண்டுகளால் ஏற்பட்ட சேதங்கள் இன்னும் மக்கள் மனத்தைவிட்டு அகலவில்லை, அவற்றை நினைக்கும்பொழுதே குலை நடுங்குகின்றது; அறிவியல், உலக அழிவுக்கு மட்டிலும்தான் பயன்படுமா என்ற ஐயமும் ஏற்படுகின்றது. வாழ்க்கையின் பல்வேறு பிரச்சினைகளையும் அறிவியல் துணைகொண்டு தீர்த்துக் கொள்ளலாம் என்ற உறுதியும் உண்டாகின்றது. என்றாலும், அறிவியலின் அழிக்கும் ஆற்றலும் ஆக்க ஆற்றலும் அறிவியலைப் பற்றி மக்கள் மனத்தில் ஒருவிதக் குழப்பத்தை உண்டாக்கத்தான் செய்கின்றன. நல்லதொரு பாடத்திட்டம் வகுத்து, சிறந்த முறையில் அறிவியற் பாடங்களைக் கற்பித்தால் இக் குழப்பம் ஓரளவு அகலும், கற்பிக்கும் முறைகளினால்தான் மாணாக்கர்களிடம் அறிவியலைப் பற்றி நல்ல மனப்பான்மையை உண்டாக்கி வளர்க்க முடியும். (பேரா. ந. சுப்புரெட்டியார், அறிவியல் பயிற்றும்முறை பக்.3)

இவ்வாறான பல்வேறு கருத்துக்களைத் தமது நூற்களில் பதிவுசெய்துள்ளார் பேராசிரியர் அவர்கள். அவரது நூற்றாண்டு விழாவை சாகித்திய அகாடமி 2017இல் சிறந்த முறையில் கொண்டாடி அவருக்குரிய கௌரவத்தை அளித்தமையையும் இவண் சிறப்பாகச் சுட்டிக் காட்டுதல் பொருத்தம்.

# பயன்பட்ட நூற்கள்

## 1, 2, 3, 5, 6, 7 அத்தியாயங்கள்

1. நினைவுக்குமிழிகள் பாகம்-1 வேங்கடம் பப்ளிகேஷன்ஸ், சென்னை- 1988
2. நினைவுக்குமிழிகள் இரண்டாம் பகுதி, வேங்கடம் பப்ளிகேஷன்ஸ், சென்னை- 1989
3. நினைவுக்குமிழிகள் பாகம்-3, வேங்கடம் பப்ளிகேஷன்ஸ், சென்னை- 1989
4. நினைவுக்குமிழிகள் நான்காம் பாகம் வேங்கடம் பப்ளிகேஷன்ஸ், சென்னை- 1990

## 4ஆவது அத்தியாயம் மேற்கோள்கள்

1. அறிவுக்கு விருந்து, பேரா. ந.சுப்புரெட்டியார், பக்.30 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1962.
2. அகத்திணைக் கொள்கைகள் பேரா. ந.சுப்புரெட்டியார், ப.7-10 மிருளாயின் பதிப்பகம், சென்னை 1981.
3. பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு, பேரா. ந. சுப்புரெட்டியார், ப.73, சுரா புக்ஸ், சென்னை.
4. திருக்குறள் தெளிவுரை, பேரா. ந. சுப்புரெட்டியார், ப.16, 17 தேன்மழைப் பதிப்பகம், சென்னை 1993.
5. முத்தொள்ளாயிரம் உரை, பேரா. ந. சுப்புரெட்டியார், ப.9, திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி 1965.
6. மே.ப.நூ ப. 10.
7. அதிசய மின்னணு, பேரா. ந.சுப்புரெட்டியார், பக்.2,3, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1963.
8. நினைவுக் குமிழிகள், பேரா.ந.சுப்புரெட்டியார், பாகம் 2, ப.6, 7
9. தந்தை பெரியார் சிந்தனைகள், பேரா. ந. சுப்புரெட்டியார், பக் 6, 7; யாழ் வெளியீடு, சென்னை 1989.
10. முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம், பேரா. ந. சுப்புரெட்டியார், ப. 21, மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1999.

## பயன்பட்ட பிற நூற்கள்

1. அணுக்கரு பௌதீகம், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை. 1966.
2. அணுவின் ஆக்கம், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், எஸ்.ஆர். சுப்பிரமணியபிள்ளை பப்ளிஷர்ஸ், 1958)
3. அதிசய மின்னணு, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 1962
4. அம்புலிப்பயணம், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 1973
5. அறிவியல் பயிற்றும்முறை, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், ஏஷியன் பிரின்டர்ஸ், சென்னை, 1971- இரண்டாம் பதிப்பு
6. அறிவுக்குவிருந்து, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி 1962
7. இராக்கெட்டுகள், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி 1964
8. இலக்கிய வகையின் வளர்ச்சியும், இக்கால இலக்கியங்களும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் ஐந்திணைப் பதிப்பகம், சென்னை 1997
9. எனது அமெரிக்கப் பயணம், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், வேங்கடம் பதிப்பகம், சென்னை 2004.
10. கல்வி உளவியல், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், எஸ் வாஸன் கம்பெனி சென்னை 1961
11. காலமும் கவிஞர்களும், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் எஸ். சுப்பிரமணியப்பிள்ளை பதிப்பகம், சென்னை 1958
12. சடகோபன் செந்தமிழ், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், வேங்கடம் பதிப்பகம், சென்னை 1989
13. சைவமும் தமிழும், பேராசிரியர். ந. சுப்புரெட்டியார். வேங்கடம்பதிப்பகம், சென்னை, 1985
14. தமிழ் இலக்கியத்தில் அறம், நீதி, முறைமை, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை 1988
15. தந்தைபெரியாரின் சிந்தனைகள், பேரா. ந. சுப்புரெட்டியார், யாழ்வெளியீடு, சென்னை, 2001
16. திருவேங்கடமும் தமிழிலக்கியமும், ந. சுப்புரெட்டியார், பாரிநிலையம், சென்னை. 1975
17. நமது உடல், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி 1966

18. பாண்டியன் பரிசு மதிப்பீடு, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சுராபுக்ஸ் லிமெடெட், சென்னை பதிபபகம், சென்னை -2022
19. வாழையடி வாழை, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1982
20. வைணவ உரைவளம், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், கம்பநிலையம், தஞ்சாவூர் 1985

## சுருக்கக் குறியீடுகள்

1. நி.கு. 1: நினைவுக்குமிழிகள் முதலாம் பாகம்.
2. நி.கு. 2: நினைவுக்குமிழிகள் இரண்டாம் பாகம்,
3. நி.கு. 3: நினைவுக்குமிழிகள் மூன்றாம் பாகம்,
4 நி.கு. 4: நினைவுக்குமிழிகள் நான்காம் பாகம்,
5. ப. பக்கம்

## பேராசிரியரின் நூற்கள் – காலவரிசைப்படி

1. 1949 - 33 வயதில் 'கவிஞர் உள்ளம்'
2. 1957 - 41 வயதில் தமிழ் பயிற்றும் முறை, 'அறிவியல் பயிற்றும் முறை', 'கலிங்கத்துப் பரணி' - ஆராய்ச்சி.
3. 1958 - 42 வயதில் 'அணுவின் ஆக்கம்,' 'காலமும் கவிஞர்களும், 'மனித உடல்' (மொழிபெயர்ப்பு).
4. 1961 - 45 வயதில் கல்வி உளவியல்.
5. 1962 - 46 வயதில் அறிவுக்கு விருந்து, இளைஞர் வானொலி.
6. 1963 - 47 வயதில் அதிசய மின்னணு, தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை.
7. 1964 - 48 வயதில் இல்லற நெறி, ராக்கெட்டுகள்.
8. 1965 - 49 வயதில் முத்தொள்ளாயிர விளக்கம்.
9. 1966 - 50 வயதில் இளைஞர் தொலைக்காட்சி, அணுக்கரு பௌதீகம் (மொழிபெயர்ப்பு).
10. 1967 - 51 வயதில் அறிவுக்கு விருந்து.
11. 1969 - 53 வயதில் அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல் (மொழி பெயர்ப்பு).
12. 1971 - 55 வயதில் மலைநாட்டு திருப்பதிகள்.
13. 1972 - 56 வயதில் பரணிப் பொழிவுகள்.
14. 1973 - 57 வயதில் அம்புலிப் பயணம்.
15. 1974 - 58 வயதில் நமது உடல்
16. 1975 - 59 வயதில் திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
17. 1976 - 60 வயதில் தொலை உலகச் செலவு.

18. 1977 - 61 வயதில் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - சிறப்பாக
19. நம்மாழ்வார் (Ph. D. ஆராய்ச்சிக் கட்டுரை புத்தகமாக)
20. 1978 - 62 வயதில் கலை அறிவியல் படிப்பு வேமனா (சாகித்திய அகாதெமிக்காக மொழிபெயர்ப்பு).
21. 1980 - 64 வயதில் வடநாட்டு திருப்பதிகள்
22. 1981 - 65 வயதில் சோழநாட்டு திருப்பதிகள், சி. ஆர். ரெட்டி (மொழிபெயர்ப்பு சாகித்திய அகாதெமி) புது தில்லி.
23. 1982 - 66 வயதில் குயில்பாட்டு - ஒரு மதிப்பீடு.
24. கண்ணன் பாட்டு திறன்.
25. பாஞ்சாலி சபதம் -ஒரு நோக்கு
26. மகாத்மா காந்தியடிகள் - நெஞ்சுவிடு தூது.
27. 1983 - 67 வயதில் பாரதீயம் கம்பனில் மக்கள் குரல், கவிதை பயிற்றும் முறை புதுக்கவிதை - போக்கும் நோக்கும்.
28. 1984 - 68 வயதில் சைவ சமயவிளக்கு
29. 1985 - 69 வயதில் வைணவ உரைவளம், தம்பிரான் தோழர் திருப்பதி ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக்கழக வெள்ளிவிழா கட்டுரை மலர்.
30, 1986 - 70 வயதில் திருஞானசம்பந்தர், நாவுக்கரசர்.
31. 1987 - 71 வயதில் ஆழ்வார்களின் ஆரா அமுது - வீட்டு சித்தன் விரித்த தமிழ் - கண்ணன் துதி.
32. 1988 - 72 வயதில் தமிழ் இலக்கியங்களில் - அறம், நீதி, முறைமை நினைவுக் குமிழிகள் - பகுதி - 1, பாட்டுத்திறன் - ஆண்டாள்
33. பாவையும் அழகு தமிழும் பகுதி - 1.
34. 1989 - 73 வயதில் கலியன் குரல், நினைவுக் குமிழிகள், பகுதி-2. நினைவுக் குமிழிகள் - பகுதி 3, மாணிக்கவாசகர், கல்வி உளவியல் கோட்பாடுகள், சடகோபன் செந்தமிழ் ஆண்டாள் பாவையும் அழகு தமிழும் - பகுதி 2
35. 1990 - 74 வயதில் நினைவுக் குமிழிகள் - பகுதி 4.
36. தமிழில் அறிவியல் - அன்றும் இன்றும்.
37. 1991 - 75 வயதில் புதுவை (மை) கவிஞர் சுப்ரமணிய பாரதியார் -ஒரு கண்ணோட்டம்.
38. 1992 - 76 வயதில் பாவேந்தர் பாரதிதாசன் கண்ணோட்டம். பரகாலன் பைந்தமிழ், முருகன் துதியமுது. ஒரு
39. 1993 - 77 வயதில் வாய்மொழியும் - வாசகமும்.
40. 1994 - 78 வயதில் அர்த்த பஞ்சகம், நவவித சம்பந்தம்

41. 1995 - 79 வயதில் வைணவச் செல்வம்.
42. 1996 - 80 வயதில் பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், எம்பிரான் சதகம்.
43. 1997 - 81 வயதில் இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், கவிஞர் வாலியின் 'அவதார புருஷன் - ஒரு மதிப்பீடு.
44. 1998 - 82 வயதில் வாழும் கவிஞர்கள் - 1, தமிழ் கடல் ராய சொ
45. 1999 - 83 வயதில் முத்தமிழ் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதன், நீங்காத நினைவுகள் - 1. நீங்காத நினைவுகள் - 2.
46. 2001 - 85 வயதில் பாவேந்தரின் பாட்டுத் திறன், திருக்குறள் தெளிவு, தந்தை பெரியாரின் சிந்தனைகள், சைவசித்தாந்தம் - ஓர் அறிமுகம். தாயுமானவர், சைவமும் தமிழும் அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்.
47. 2002 - 86 வயதில் கவிமணியின் தமிழ்ப்பணி - ஓர் மதிப்பீடு.
48. கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி - ஓர் மதிப்பீடு பல்சுவை விருந்து
49. பாண்டியன் பரிசு -ஓர் மதிப்பீடு, தமிழில் அறிவியல் செல்வம்.
50. 2003 - 87 வயதில் அண்ணல் அனுமன், பட்டினத்தடிகள், ராமலிங்க அடிகள், மூவர்தேவாரம் - புதிய பார்வை.
51. 2004 - 88 வயதில் வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் என் அமெரிக்கப் பயணம் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள்.
52. ப. 1 ந. சுப்புரெட்டியாரின் பன்முகம், இரா. காமராசு, சாகித்திய அகாதெமி, டெல்லி 2017.
53. ப.16, முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதன், பேரா. ந. சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர் பதிப்பகம், சென்னை 1999.

## மற்றும் கீழ்க்கண்ட நூல்கள்:

1. கவிஞன் உள்ளம்
2. காதல் ஓவியங்கள்
3. அறிவியல் தமிழ்
4. திருக்குறள் கருத்தரங்கு மலர்
5. தமிழ் இலக்கியத்தில் அறம் நீதி முறைமை
6. முக்திநெறி

7. சில நோக்கில் நாலாயிரம்
8. வைணவமும் தமிழும்
9. ஆன்மீகமும் அறிவியலும்
10. வைணவ உரைவளம் (ஐதீகம் இதிகாசம் சம்வாதம்)
11. கலியன் குரல் 12. கீதைக் குறள்
13 கண்ணன் எழில்காட்டும் கவிதைப்பொழில்
14. ராமர் தோத்திரம்
15. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
16. பாண்டி நாட்டுத் திருப்பதிகள்
17. சோழ நாட்டுத் திருப்பதிகள் -1.
18. சோழ நாட்டுத் திருப்பதிகள் -2
19. தம்பிரான் தோழர்
20. பாட்டுத் திறன்
21. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
22. அகத்திணைக் கொள்கைகள்
23. கண்ணன் பாட்டுத்திறன்
24. பாரதீயம்
25. உயிர்தந்த உத்தமன்
26. ஆழ்வார்கள் ஆரா அமுது
27. நினைவுக் குமிழிகள் பகுதி -3
28. நினைவுக் குமிழிகள் பகுதி -5
29. குரஜாட
30. மலரும் நினைவுகள்
31. இளைஞர் வானொலி
32. வாழையடி வாழை
33. தமிழில் அறிவியல் அன்றும் இன்றும்
34. வானமண்டலக் காட்சி
35. வைணவச் செல்வம்
36. வடவேங்கடமும் திருவேங்கடமும்
37. Studies in Arts and Sciences
38. Collected Papers

போன்ற நூல்களும் வெளியிட்டுள்ளார்கள்.
(தகவல்- ப. 163-166. பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் பன்முகம், இரா. காமராசு. சாகித்திய அகாதெமி 2017)

**பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்** (27.08.1916 – 1.05.2006) : பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் கல்விப்புலம், தமிழ் இலக்கியம் மற்றும் ஆய்வுலகிலும் தடம் பதித்தவர் என்பதோடு பல்துறை சார்ந்த வித்தகர். இயற்பியல், உயிரியல், உளவியல், கல்வியியல், வரலாறு, கோவில்கள், பயணநூல்கள், பழந்தமிழ் இலக்கியம், நவீன இலக்கியம், சுயசரிதை, இலக்கணம், உரை எழுதல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு எனப் பல்துறைகளிலும் அவர் எழுதிய நூல்கள் தமிழுலகில் இன்றியமையாத நூல்களாகப் போற்றப்படுகின்றன. அவையனைத்தும் தமிழக அரசால் நாட்டுடைமையாக்கப்பட்ட பெருமை பெற்றவை. அவர் எழுதிய ஒவ்வொரு துறை சார்ந்த நூல்களும் அடிப்படை முதல் இறுதி நிலை வரை அனைத்து விசயங்களையும் விரிவாக, தெளிவாக ஆழமாகப் பேசுகின்றன. தலைமை ஆசிரியராக, கல்வித்துறைப் பேராசிரியராக, திருவேங்கடப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிய அவரது வாழ்க்கை, தமிழோடு பிணைந்து தமிழுக்குத் தொண்டாற்றிய சிறப்பு கொண்டது. புகழ்பெற்ற முன்மாதிரியான தமிழ்ப் பேராசிரியர்களுள் ஒருவரான பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரது வாழ்க்கையைச் சித்தரிக்கும் இந்த நூல் வாழ்க்கையில் உயர விரும்புவோருக்கு ஒரு பாடநூலாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

**த. விஷ்ணுகுமாரன்** (1964): திராவிடப் பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் இவர், 15க்கும் மேற்பட்ட நூல்களும் 100க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். தமிழ், ஜெர்மன், மலையாளம், ஆங்கிலம், தெலுங்கு ஆகிய மொழிகளில் மொழிபெயர்ப்பும் செய்து வருகிறார். கேரளப் பல்கலைக் கழகத்தில் புறநானூற்றுப் பாடல்களை அமைப்பியல் நோக்கில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர்.


ISBN:978-93-6183-785-2

N. Subbu Reddiyar (Tamil)

₹ 100

